உ

கடவுள் துணை.

# புலிப்பாணி முனிவர்

திருவாய் மலர்ந்தருளிய

பலதிரட்டு ஜாலமும் சிதம்பர பூஜையும்,
சில விஸேஷமான ஜாலத்திரட்டும், சிலசக்கரங்களும்,
அடங்கியிருக்கின்ற மூலமும் - உரையும்

இஃது
ம-ா-ா-ஸ்ரீ, மா. வடிவேலு முதலியாரால்
எழுதப்பட்ட பிரதிக்கிணங்க.

ம-ா-ா-ஸ்ரீ, பீதாம்பர ஐயரவர்களின்
மாணாக்கருள் ஒருவராகிய
**ந ஹ்ற க்லீ**
ம-ா-ா-ஸ்ரீ, P. M. பொன்னுசாமி முதலியாரால்
நூதனமாக நவபாஷாணத்தின் குணங்களும்,
அதை சுத்திசெய்யும் வகைகளும், இப்புத்தகத்திலடங்கிய
சகல வித்தைகளும், அநுபோகத்திற்கிணங்க,
சீர்திருத்தி எழுதப்பட்டு.

இவை.
ம-ா-ா-ஸ்ரீ,
கு. அ. நடேசமுதலியாரவர்களால்
அமெரிக்கன் டைமெண்ட் பிரஸில்
பதிப்பிக்கப்பட்டது.

1914





உ

சிவமயம்.

முத்துவீரராமமுனிவர்

திருவாய் மலர்ந்தருளிய

# ஜாலத் திரட்டு.

விருத்தம்.

*கங்கை வேய்ந் தெழிற் கயிலாய மால்வரைச்*
*சிங்க வாகனத் தெழுந் தருளுந் தேவர்*
*பங்கய மலரடி பணிந்து ஜாலமொன்*
*றங்கண்மா நிலமிசை யறைகு வாமரோ.* (1)

(பொழிப்புரை.) கங்காதேவியை ஜடாபாரத்தின்கண் தரித்து அழகிய கைலாயமலையில் சிங்காசனத்தில் எழுந்தருளுகின்ற தேவராகிய பரமேஸ்வரனுடைய தாமரைமலர்போலழகிய திருவடிகளைப்பணிந்து இவ்வுலகத்தில் ஜாலமென்னும் ஒரு நூலைச்சொல்வோம். எ-று.

வ ர லா று.

*யாவருங் கைவல்ய மாகவே யொரு*
*தாவரு மந்திரந் தையல் பாகனுர்*
*காவ நந்திக்குமுன் களித்துச் சொன்னது*
*நீவிரும்பியது நிகழ்த்த கேட்டியால்.* (2)

(பொ-ரை) உமாதேவியை இடதுபாகத்தில் வைத்திரானின்ற பரமேஸ்வரனனவர் (பூர்வகாலத்தில்) கைலாசமால்வரையைக் காவல்செய்யும் நந்தீஸ்வரருக்கு மனச்சந்தோஷத்தோடு சொன்னதும், உன்னுல்கேட்க விரும்பப்பட்டதுமான உலகத்திலுள்ள சர்வ ஜெனங்களும் வசியமாதற்பொருட்டு ஒரு அழிவில்லாத மந்திரத்தைச் சொல்லக்கேட்பாயாக. (எ-று.)

## ஸர்வ ஜனவசியம்.

அளவொடு மாறுகோ டரிதியி லறியவாங்
கெளிதினி லாறுகோ டெதிரிற் கீறினன்
குளநம சிவயவென் றுரைக்கு மக்கரத்
தெளிவுற மற்றதிற் றீட்டி யப்பவே (3)

ஐம்புலச் சேட்டையை யகற்றி வானமு
மிம்பரும் பரவிய வெம்பி ரானடி
யம்புயங் கடைப்பிடித் தத்தி யாதனத்
தும்பரி னிருந்துவோ நமசி வாயவே. (4)

என்றுவண் மலரினு லிதய நெக்குற
ஒன்றுநூ றுயிர முரு செபிக்கினே
கன்றுபின் றொடர்பசு கடுப்ப யாவரும்
பின்றொட ருவரிது பேசல் வேண்டுமோ. (5)

| | | | | |
|---|---|---|---|---|
| ந | ம | சி | வ | ய |
| சி | வ | ய | ந | ம |
| ய | ந | ம | சி | வ |
| ம | சி | வ | ய | ந |
| வ | ய | ந | ம | சி |

(போ-ரை.) மேற்கண்ட சக்கரத்தின்படி ஓரே அளவாக நேராக ஆறு கோடு கிழித்து அந்த ஆறுகோடுகளுக்கும் குறுக்கே ஆறு கோடு கிழித்து அதனால் ஏற்படுகின்ற இருபத்தைந்து வீடுகளிலும் ந,ம,சி,வ,ய, என்கிற ஐந்தக்ஷரங்களையும் அடைத்து நடுவணையைப்பிடித்து மாறிப்போட்டு, சத்தம்,ஸ்பரிசம், ரூபம்,ரசம், கந்தம் என்னும் பஞ்சபுலன்கள்செய்யும் தீங்குகளை யெல்லாம் நீக்கி, ஓரேநிலையாக மனதை சுழிமுனையில் நிறுத்தி, தேவர்களாலும், மனிதர்களாலும் துதிக்கப்படாநின்ற எம்முடைய பரமேஸ்வரனுடைய திருவடித்தாமரைகளை உள்ளத்தில் உறுதியாக நம்பி உயர்ந்த ஆசனத்தின்மேல் எழுந்தருளி

யிருந்து*ஓம் நவசிவ்ய என்கிற மந்திரத்தினால் நல்ல புஷ்பங்களைக் கொண்டு மனங்கலரந்து ஒரு நூறாயிர உரு செபித்தால் கன்றானது பின்னே தொடரும்படி செல்லும் பசுவைப்போல உலகஜெனங்கள் எல்லோரும் பின்னே தொடர்ந்து வருவார்கள் ஆகையால் இதனுடையப் பெருமையைப்பேசவேண்டுமோ. (எ-று.)

புத்தியை விலக்கியிப் புவியின் மேலுமுன்
மத்தனைப் புரிதரும் வலிய பேயெலாஞ்
சித்தம்நைந் தோடிடச்செய்யு மந்திர
மித்தல வரப்பிலொன் றியம்பக் கேட்டியால். (6)

உருவய நமசியென் றுரைக்கு மந்திரங்
குருமுக முணர்ந்தெழிற் குமர வேடனைத்
தருமுதல்வ னடித் தானத் தாமரை
யிருதய மலரினி லிருத்தி யாங்கரோ. (7)

பழுதில்வெட் பாலையம் பலகை மீமிசை
யெழுது சித்திரமென விருந்து சக்கரம்
வழுவறப் பொறித்துமுன் வைத்து நூறுபத்
தெழுபதி னாயிர மியம்பி நம்மரோ. (8)

அலகைவெம் பூதங்க ளாகி யாம்பல
பலபில்லி சூனியம் பறக்கு மன்றியும்
நிலமிசை வருந்திய நெடிய நோயெலாம்
உலவிய வளிச்சரு கொக்கு மென்பவே. (9)

(பொ-ரை.) இவ்வுலகத்தின்கண் இயற்கையான அறிவைக்கெடுத்து பைத்தியநோயை உண்டாக்குகின்ற வலிமையுள்ள பேய்களெல்லாம் மனவருத்தப்பட்டு ஓடி விடும்படிச்செய்கின்ற மந்திரமொன்றை இவ்விடத்தில் நாம் சொல்லுகின்றோம். நீ கேட்பாயாக. (அதாவது) வயநமசி என்று சொல்லுகின்ற மந்திரத்தைக் குருமுகமாகத் தெரிந்துக்கொண்டு அழகிய முருகக்கடவுளைப் பெற்றெடுத்த பரமேஸ்வரனுடைய திருவடித்தாமரையை இருதய கமலத்தினில் வைத்து, குற்றமற்ற வெட்பாலைப்பலகையின்மேல் சித்திரத்தைப்போல்சக்கரமெழுதி

* ஓம் என்னும் அக்ஷரத்தை யாதாமொரு மந்திரங்களுக்கு முன்னும் உச்சரிக்கவேண்டும்.

முன்னே வைத்து ஏழுபத்தோராயிரம் உருசெபித்தால் பசாசுகள், கொடிய பூதங்கள் ஆகியவைகளும், பலவகைப்பட்ட பில்லி, சூனியம் இவைகளும்பறக்கும், அல்லாமலும் உலகத்தில் வருத்தப்படுத்துகின்ற பலவகைப்பட்ட நோய்களும் சண்டமாருதம்போல வீசுகின்ற சுழல் காற்றினிடத்து அகப்பட்டுக்கொள்ளுகின்ற உலர்ந்த ஒரு சிறு இலைபைப்போலாகும் (எ று)

## ஆடாதபேய்களை ஆட்டிவைக்கும் ஜாலம்.

போரப்பா பேய் பிசாசுகள் பிடித்து
புனிதமொடு வாய்திரவா திருந்துதானல்
ஆரப்பா அபினி அரை உளுந்தினளவும்
அன்பாக வெத்திலையில் மடித்து நீதான்
ஊரப்பா உள்ளுக்குச் செலுத்திவிட்டால்
உத்தமனே கிருகிரென்று உடனே ஆடும்
பாரப்பா பேர் ஊரும் பணிந்து சொல்லும்
பண்பாக முடியறுத்து முழுக்கில் வையே. (10)

(போ-ரை.) இப்பூமியில் பிசாசுகள், பேய்கள், வீரன், இருளன், காட்டேரி, வெரியன், நொண்டி, சாமுண்டி, தூரித்தூண்டி, மாருமுனி சங்கிலியன், கருப்பன், பாவாடைராயன், குழியிரிசி, மோகினி, சப்த கன்னிகள், பூதங்கள், முனிகள் இன்னும் எப்பேர்ப்பட்ட துஷ்டபிசாசுகள் பிடித்துக்கொண்டு எவ்விதமாகிய தந்திர மந்திரங்களினாலும் ஆடாமலும், வாய்திரவா திருந்தபோதிலும் அரைஉளுந்தினளவு(அல்லது சிருபயாளவு) அபினியை ஒரு வெத்திலையில் வைத்து மடித்து உள்ளுக்குக் கொடுத்துவிட்டால் அதைத் தின்றவுடன் கிருகிரென்று ஆடி தன்னுடைய ஊரும் பேரும் அது பிடித்தவிடமும் சொல்லுவதுமன்றி இப்பொழுதே ஓடிப்போகிறேனென்று அழுகும், அப்பொழுதே முடியை அறுத்துவிட்டு மயக்கந்தீர வாழைபட்டையை வதக்கி கால் ஆழாக்குச்சாறு உள்ளுக்குக் கொடுத்துவிட்டு முழுக்கில்வைக்கயாவும் ஒழிந்து விடும் (எ-று,) இது இரகசியமான கைபாகம்.

## ஆடாதபேய்கள் ஆடும் ஜாலம்.

ஆரப்பா ஆடாத பேய்களாட
அப்பனே அப்பையுட கிழங்கி னோடு
பாரப்பா பேயத்தி பேயால் வேம்
பருத்தவொரு தாணிவே ரூமத்தன் வித்து

வாரப்பா விராக நிடை பொடித்து
வஸ்திர காயமயது வளமாய்ச் செய்து
காரப்பா காட்டின்பசு எறு கொளுத்தி
கனமான விபூதியுடன் தூளைச் சேரே. (11)

சேரேநீ ஸ்திரீ புருஷர் எவரானலும்
சிதராமல் குந்தவைத்து சிரமேற் போட
வாரேநீ வாய்திரவா திருந்தா லுந்தான்
வளமான தூள்போட வெருண்டு பின்னும்
ஆரேநீ ஆடுவதும் ஊரும் பேரும்
அன்போடு சொல்லிவிடும் அப்போதே தான்
மீரேநீ முடியறுத் தொழித்துவிடு மயங்கிடாமல்
மையல் நீங்க ஜலந்தெளித்தால் மயக்கம் போமே. ()

(போ-ரை) ஆடாத பேய்களை எல்லாம் ஆட்டிவைக்க வேண்டுமாகில் அப்பைகிழங்கு, பேயத்திவேர், பேயாலவேர், ஊமத்தன்விரை இதுகளை நிழலிலுலர்த்தி வகைக்கு ஒரு விராக நிடையாக வெடுத்து பொடித்து வஸ்திரகாயம்செய்து வைத்துக்கொண்டு (காட்டிலேயே வாசம் செய்யப்பட்ட) காலிமாட்டுப் பசுவின் சாணமெடுத்து உலர்த்தி கொளுத்தி சாம்பலாக்கி வஸ்திரகாயம்செய்து மேற்படித் தூளுடனே சரியிடையாக இந்தச்சாம்பலாகிய விபூதியைக்கலந்து ஸ்திரீ புருஷரில் எவருக்காகிலும் பேய்பிடித் திருக்குமாகில் அவர்களை ஸ்தானம் செய்விக்காமல் அவாள் எப்படியிருக்கினும் அப்படியே அழைத்துவந்து குந்தவைத்து மேற்படி தூளைக் கலந்திருக்கப்பட்ட விபூதியை கையிலெடுத்துக்கொண்டு தன் வாயில்வந்தபடி எதெதையோ மந்திரங்கள் சொல்வதுபோலச் சொல்லி முன்னால் எதிரில் குந்தவைத்திருப்பவர் சிரசிற்போட உடனே பயந்து தலைசுற்றி ஆடுவதுமல்லாமல் வாயில் வந்தபடிக்கெல்லாம் பினத்திக்கொண்டு ஆடி ஆடி ஊரும் பேரும் சொல்லி அபயம் அபயம் நான் போறேன் நான் போறேனென்று சொல்லும், அது சமயம் முடியறுத்துவிட்டு ஜலம் மேலேதெளித்துஸ்தானம் செய்விக்க வுடனே மயக்கம் தெளிந்து விடும் (எ-று.)

(இது கைபாகமான தந்திரம்.)

## பிசாசு பேய் பூதங்களை ஓட்டும் சூக்ஷ வித்தை.

தோட்டம் வனம் முதலிய விடங்களிலுள்ள சொரியாந் தவளையை பிடித்துக்கொண்டுவந்து போதுமானவரையில் பளிங்கு சாம்பிரா

ணியை சிறு துணுக்கைகளாகச் செய்து மேற்படி தவளையின் வாயின் வழியாக உட்செலுத்தி வாயைத் தைத்துவிட்டு புகையூரும்படியாக கால்மேல் தலைகீழாகக்கட்டி 40-நாள் தொங்கவிட்டு அதன்பின்பு அதை யெடுத்து அதற்குள்ளிருக்கும் சாம்பிராணியை சிந்தாமல் எடுத்துக்கொள்ளவும், பிறகு தலைமஞ்சங்கொடியை அத்துடன் சேர்த்து வைத்துக்கொண்டு பேய்பிடித்திருப்பவர்களை குந்தவைத்து லேடிதுளை க்கலந்திருக்கும் சாம்பிராணியை நெருப்பிற் போட்டு புகையை அவர்களுடைய நாசிக்குட் செல்லும்படியாக புகைபிடிக்க, புகை நாசிக்குள் ஏறினமாத்திரத்தில் பேய், பிசாசு, பூதம், பிரம்மராக்ஷதன், லாடமுனி, செம்முனி, சடாமுனி, கருமுனி, குழிபிரிசி, கருப்பன், சங்கிலி முனி, குட்டிச்சாத்தான், சப்தகன்னிகள் முதலியதுகள் பிடித்தவர்களெல்லாம் தலைவிரித்துக்கொண்டு ஆடி தான் பிடித்த விடமும் தன் ஊரும் பேரும் சொல்லி ஓடிப்போகிறேன் ஓடிப்போகிறேன் என்னும் அப்பொழுது முடியறுத்துவிட்டு முழுக்கில்வைக்க சகலமும் நிவர்த்தியாகிச் சவுக்கியமாக இருப்பார்கள் (இது கைபாகம்)

## கை கால் முடக்கல்.

பாவை யொன்று பருமுருக் கத்தினால்
ஆவ லோடுசெய் தப்பது மைவயிற்
றேவவின் மாப்பது மையொன் றியற்றிவைத்
தேவின் முள்ளுட னெச்சனு ரோமமும் (13)

பேரும் வைத்துப் பிரபல மாகவே
பாரு ளோருண ராது பயிரவ
னா ருந்திரு மந்திர மாயிரம்
ஈரஞ் சையுமங் கிருந்து செபிப்பரே. (14)

ஆணி யொன்றெடுத் தங்கையி லாவது
காணருங் கழற் காலினி லாவது
பூணின் வாதப் பிடிப்பது போலவே
காணு மற்றிது கண்டுகொள் வாயரோ. (15)

போ-ரை.) காட்டிலிருக்கப்பட்ட (பொரசமரமென்னும்) முருக்கமரத்தினால் ஒரு பதுமை செய்து அந்தப் பதுமையின் வயற்றின் மேல் மூஞ்சூரின் பக்க எலும்பாகிய முள்ளும், அதின் குடலிலிருக்கும் எச்சமாகிய மலமும், அதின் ரோமமும், (ஒரு நருக்கில்) எதிரா

ளியின் பேரும் எழுதி பிரபலமாகச் சொல்லிவைத்து அரிசிமாவைப் பிசைந்து பதுமையின் வயற்றின்மேல் வைத்திருக்கும் சாமான்களுடன் வயற்றைப்போலேயே மூடிவிட்டு உலகத்தார்களெல்லாம் தெரிந்துக்கொள்ளாதபடி பயிரவ மந்திரத்தை பதினாயிரம் உரு சரியாக செபித்து அவ்விடத்தில் பதுமையுடன் வைத்திருக்கின்ற முட்களில் ஒன்றை எடுத்து காணாதற் கருமையாக எதிராளியாக வைத்திருக்கின்ற பதுமையின் காலிலாவது கையினிலாவது அடித்தால் வாயுவு வந்தவர்களுக்கு பிடிப்புவருவதுபோல எதிராளிக்கு உண்டாகும், அவன் வணங்கி வருவானாகில் அடித்தமுள்ளைப் பிடுங்கிவிட சவுக்கியமாகிவிடும்.

ஞ (மேற்கண்ட வித்தையை யாருக்குச் செய்யலாம், யாருக்குச் செய்யக்கூடாது என்று தாரதரமறியாமல் நீ செய்வையாகில் அது உனக்கே லபிப்பதுமன்றி உன்னுடைய மூவேழு (21) தலைமுறைக்கும் அந்த பாவம் விடாமல் சுத்திக்கொள்ளும், இது சத்தியம்! சத்தியம்!! சத்தியம்!!! இதை நீ தெரிந்துக்கொள்வாய் (எ-று.)

## வேடிக்கை வித்தை.

வேடிக்கை விளையாட் டொன்று
விளம்புவேன் கேணீ வைப்பில்
மூடிக்கை யிருந்தால் யாரு
மோகிப்பர் விரிப்பின் வாளாக்
கோடிக்கை விடுவா ரும்மை
குலவிய தேங்கா யொன்று
நாடிக்கை யாலே வாங்கி
நானில மறிய மாதோ. (16)

மற்றதைத் தொளைத்து பச்சை
வாளர வொன்று போட்டுக்
குற்றமில் லாமல் வாயைக்
கோதற மூடிந் தூபம்
முற்றவே கொடுத்துச் செவ்வாய்
முதற்குழி கல்லில் வைத்துச்
செற்றமி லன்பி னோடு
தினமதே மூான பின்னே. (17

எடுத்தொரு கல்வட் டிட்டே
　　யெரித்துநீ தைலம் வாங்கி
கடுத்த தும்பிருவெம் மானை
　　கருத்தினி லிருத்திப் போற்றி
விடுத்தொரு விளக்கிற் றீபம்
　　விளங்கவே யேற்றி நோக்கின்
அடுத்தவப் பசிய பாம்பே
　　யகமெலாந் தெரியு மன்றே. (18)

(போ-ரை.) வேடிக்கையாக ஒரு விளையாட்டைச் சொல்லுகிறேன் நீ கேட்பாயாக, இந்த வித்தை யுடையவர்கள் கையை மூடிக்கொண்டு யாருக்குங் காட்டாமலிருந்தால் யாவரும் பிரமிப்பார்கள், அப்படிக்கில்லாமல் கையைவிரித்து விட்டால் யாவரும் மதியார்கள், ஆகையால் நீ உலகத்தில் ஜனங்களறியும்படி ஒரு தேங்காயை வாங்கிஅதை நன்றாய் தொளைத்து அதில் பச்சைப்பாம்பு ஒன்றைப்போட்டு வாயை மூடி தூபதீபங்கொடுத்து மேல் ஓட்டைப் போக்கி முதலில் செவ்வாய்க்கிழமையில் கல்வத்தில்போட்டு நல்ல அன்போடு ஏழுநாள்வரைக்கும் அரைத்து அப்படி அரைக்கப்பட்ட சாமானை ஒரு கலசத்திற் போட்டு எரித்து அப்போது வரும் தைலத்தை இறுத்து வைத்துக்கொண்டு விஷந்தங்கிய கண்டத்தை யுடைய இறைவனை மனதில் வைத்து துதித்து அந்தத் தைலத்தை ஒரு விளக்கிலிட்டு தீபமேத்திப் பார்த்தால் பச்சைப் பாம்பே அவ்விடெல்லாந் தெரியும் (எ-று.)

முற்றிற்று.



உ

சிவமயம்.

# பலதிரட்டு சூஸ்திரம்.

## காப்பு.

வேதாந்த நாயகியே விமல வேணி
வீரமா காளியம்பாள் ருத்திரரூபி
நாதாந்தப் பொருளானே யகோர வீரி
நாரணியே காரணியே தேவி சத்தி
மூதாந்த மூர்த்தி பராபரையே துர்க்கை
மூவருக்கே முதற்பொருளே யானந்தாயி
மாதாந்தச் சபையீன்ற ஏகவல்லி
மாமுகத்தான் பலதிரட்டு காப்புதானே. (1)

(போ-ரை) வேதங்களின் அந்தத்தில் விளங்கும் தலைவி! பரிசுத்தமான வேணி! வீரமாகாளி! அம்பாள்! ருத்திர ரூபி! நாதாந்தப் பொருளானே அகோர தன்மையை யுடையவீரி! நாராயணி! காரணீ! தேவி! சத்தி! மூதாந்த மூர்த்தியே! பராபரையே! துர்க்கையே! பிரம, விஷ்ணு ருத்திராதிபர்களுக்கு முதற்பொருளே! ஆனந்தாயி! மாதாந்தமென்னும் சபையைப்பெற்ற ஏகவல்லி ஆகிய மகாதேவியே உன் புத்திரனாகிய யானைமுகத்தையுடைய விநாயகரானவர் புலிப்பாணி முனிவர் அருளிச்செய்த பலதிரட்டென்னும் இந்த புத்தகத்தைப் பாடக் காத்து ரக்ஷிக்கவேணும். (எ-று.)

## நூல்-முப்பூமுறை.

தானென்ற முப்பூவைச் சொல்லக்கேளு
தருவான * வண்டமடா வாதியாதி
கானென்ற வண்டத்தைக் கொண்டுவந்து
கடிதாக நொருக்கியதை துட்டைப்போல
மானென்ற † பூநீற்றைக் கறைத்திறுத்து
மைந்தனே யதிற்போட்டுக் குறுகக்காய்ச்சி
பானென்ற ஜலம்விட்டுக் கழுவிப்போட்டு
பண்பான ரவிதனிலே யுலரப்போடே. (2)

போட்டேநீ சுண்ணக்கால் நாலு நாழி
பேரட்டதிலே நீரூற்றி விட்டு நீற்றி
நாட்டேநீ கலக்கியதை தெளியவைத்து
நாயகனே மறுசட்டி தனிலிறுத்துக்
கூட்டேநீ யண்டஜல மதிலேபோட்டுக்
குறுக்கியே காய்ச்சியதை யெடுத்துக்கொண்டு
ஆட்டேநீ குழிக்கல்லி லிந்நீர்விட்டு
அப்பனே மைபோல வரைத்துத்தீரே. (3)

தீரேநீ யுலரவைத்து பில்லைபோலே
திரமாகக் காய்ந்தபின் பெடுத்துமைந்தா
சீரேநீ யுலையில்வைத் தூதவூது
சின்மயத்தின் சுண்ணமதை யென்னசொல்வேன்
பாரேநீ சுண்ணமது ஆறுமட்டும்
பாங்காக விந்நீரி லரைத்து வூது
வீரேநீ உலைக்கேற்றி மைந்தா நீயும்
விதமான சுண்ணமதை கலக்கிப்போடே. (4)

போடேநீ காரையினூற் பாத்திகட்டிப்
பொங்கமுடன் வெள்ளீரை யதிலேவாரு
நாடேநீ யதைவழித்துக்கரைத்துநன்றாய்
நாயகனே தெளிவிறுத்து நவநாள்வாறு
ஆடேநீ ரவிதனிலே யுலாவைத்து
அப்பனே அன்பாக சத்திபூசை
தேடேநீ கணபதியின் பூசைசெய்து
திறமாகக் குப்பியிடை யடைத்துவையே. (5)

வையேநீ மலைச்சாப்ப ‡ லமுரி நீரில்
வகையாகச் சமன்கொண்டு கலக்கித்தேற்றி
செய்யேநீ தெளிவிருத்துப் பாத்திதன்னிற்
செயலாக ஒன்பதுநாள் மட்டும்வாரு
மையேநீ யுப்பாகு பெடுத்துக்கொண்டு
மைந்தனே குப்பியிலே பதனம்பண்ணு
கையேநீ யுப்பெல்லா மிந்தபாகங்
கருவாக வெடுத்தாக்கா லுப்பேயாமே. (6)

உப்பான முப்பூவைச் சமனாய்ச்சேர்த்து
உத்தமனே மாதவிடாய் நீராலாட்டி
ஒப்பாக வில்லைசெய் துலரவைத்து
வொளிவான முழப்புடத்தி லுகந்துபோடு
வெப்பான புடமாறி யெடுத்துக்கொண்டு
விதமான குப்பியிலே வைத்துப்பூசி
செப்பான முப்பூவின் சுண்ணத்தாலே
ஜெயமாகுந் தொழில்களெல்லாஞ் சித்திதானே. (7)

(போ-ரை) முப்பூ செய்யும் வழியைச் சொல்லுகிறேன் கேட்பாயாக, இந்த முப்பூவுக்கு * அண்டமென்னும் பொருளே காரண வஸ்துவாகும். ஆகையால் அப்படிப்பட்ட அண்டத்தைக் கொண்டு வந்து அட்டைப்போல நொறுக்கி வைத்துக்கொண்டு, † பூநீற்றைக் கொண்டுவந்து நன்றாய்ச் சலம்விட்டுக் கரைத்திறுத்து அதில் மேற்படி அண்டத்தைப்போட்டு குறையும்படி (அதாவது சலம்வற்றக்) காய்ச்சி பிறகு அவைகளை ஜலம் விட்டு நன்றாய்க் கழுவி வெய்யலில் உலரப் போட்டு பிறகு சுண்ணும்புக்கல் நான்குபடி கொண்டுவந்து அதிலே ஜலம்விட்டு கரைத்து சுண்ணக்கல் ஜலத்தை தெளிவிறுத்து, வேறு சட்டியில் ஊற்றி அதில் மறுபடியும் அண்டத்தைப் போட்டு வற்றக் காய்ச்சி அதை யெடுத்துக்கொண்டு கல்வத்தில்போட்டு இப்பொழுது தெளிவிருத்த சலத்தைக் கொஞ்சம் நிருத்தி வைத்திருந்து ஷை ஜலத்தைவிட்டு மைபோலரைத்துக்கொண்டு அரைத்ததை பில்லை செய்து காயவைத்து நன்றாய்க்காய்ந்தபின்பு அந்தபில்லையை உலையில்வைத்து ஊதவேண்டும், அப்படி யூதினால் சுண்ணமாகும், சுண்ணமாகாவிட்டால், மறுபடியும் அரைத்தரைத்து உலைக்கு ஏற்றி ஊதிச் சுண்ணமாக்கி அந்தச் சுண்ணத்தை சலத்தில் கலக்கி கலக்கினதை காரைச் சுண்ணும்பாற் பாத்திகட்டி அதில் வார்த்துச் சலங்கொஞ்சம் வரண்டபின்ப் அதை வழித்து மறுபடியும் அதைச் சலத்தில் கரைத்து தெளிவிறுத்து ஒன்பதுநாள் அதேப்பிரகாரஞ் செய்து அப்படியே வெய்யலில் உலரவைத்து சத்தி பூசைசெய்து அதை எடுத்து குப்பியில் அடைத்து வைத்துவிட்டு மலைச்சாம்பலென்னும் அவ்விடத்துப் புழுதியைக் கொண்டுவந்து ‡ அமுரி நீரில் ஒரே அளவாகக் கலந்து கலக்கி

* அண்டமென்பது - தலைமண்டை ஓடு.

† பூநீரென்பது-தை, மாசி, மாதங்களில் உவர் நிலத்தில் பூர்க்கின்ற உப்பு மண் (அதாவது உழமண்.)

‡ அமுரிநீர்-என்பது, சிறு நீர்.

தெளியவைத்து இறுத்து வேறு பாத்திரத்தில் ஒன்பதுநாள் வரைக்கும் வார்த்து உலர்த்தினால் அது உப்பாகும். (இதுவே உப்பு செய்யும் பாகமாகும்) அந்த உப்பை யெடுத்துக்கொண்டு குப்பியில் வைத்து பூசைசெய்து பின்பு அப்படியான உப்பினுடனே முப்பூவைச்சேர்த்து நாத நீர் என்னும் மாதவிடாய் நீரினால் அரைத்து பில்லைசெய்து வெய்யலில் உலர்த்தி முழுப்புடத்தில் புடம்போட்டு அது ஆறின பின்பு எடுத்து குப்பியில் வைத்து பூசை செய்துக்கொள்வாயானால் இந்த முப்பூவின் சுண்ணத்தால் ஜெயமாகக்கூடிய தொழில்களெல்லாம் அடியில் வருமாறு சித்தியாகும். (எ-று.)

## ர ச க் க ட் டு.

சித்தியாம் ரசக்கட்டு சொல்லக் கேளு
சிறப்பான பன்றியின் பாலாற் கட்டும்
புத்தியாம் குட்டியெல்லாம் அடைத்து வைத்து
பொங்கமுடன் உதையாதி துடங்கும்போது
வெற்றியாம் குட்டியொன்று குடிக்காவிட்டால்
விதமாகப் பால்நிரம்பி மூக்கிற் சிந்தும்
பத்தியாம் கவனமுடன் பிசைந் தழுத்தி
பாங்காகச் சுத்தியாம் ரசத்தை வாரே. (8)

வாரேநீ விராகனிடை யைம்பத் தொன்று
வளமாக முன்சொன்ன முப்பூச் சுண்ணம்
பாரேநீ விராகனிடை யொன்று தூக்கு
பதமாகச் சத்தியுட பூசை செய்து
சீரேநீ வாயிலிட்டுச் செலுத்திப் போடு
செம்மையாய் வாய்மூக்குங் காதுந் தைத்து
தேரேநீ புதுப்பாண்ட மதிலே யிட்டு
திங்கள் பொறுத் தெடுக்கரச மணியுமாமே. (9)

ஆமேநீ நாகமொன்று தங்க மொன்று
அடைவாக ரசக்கட்டு ஒன்றுங் கூட்டு
வாமேநீ தங்கமதை யுருக்கிக் கொண்டு
வளமான ரசக்கட்டு நாகஞ் சேரு
தாமேநீ செம்பதிலே பத்துக் கொன்று
தான்கொடுக்க ஒன்பதரை மாற்று மாகும்
நாமேநீ கெந்தியிட்டுச் செந்தூரித் தால்
நாயகனே நவலோக வேதை யாமே. (10)

(போ-ரை.) இனி ரசக்கட்டு சொல்லுகிறேன் கேள், அதாவது பன்றியின் பாலால் கட்டும், பன்றியின் குட்டிகளையெல்லாம் பால்குடிக்காதபடி அடைத்துவைத்து காலையில், ஒரு குட்டியும் குடிக்காதிருப்பதால் பாலானது மூக்குவழியாகச்சிந்தும், அப்போது அந்தபாலைப் பிசைந்து அழுத்தி அதில் சுத்திசெய்த ஐம்பத்தொரு விராகனெடை ரசத்தை வார்த்து ஒரு விராகனெடை முப்பூ சுண்ணமுஞ் சேர்த்து சத்திபூசை செய்து அந்தப் பன்றியின் வாயிலிட்டு வாயையும் மூக்கையும் காதையும் தைத்து ஒரு புதிய பாண்டத்திலிட்டுவைத்து ஒருமாதம் பொருத்து எடுக்க ரசம் மணியாகும், அப்படியான ரசக்கட்டு ஒரு எடையும், நாகம் ஒரு எடையும், தங்கம் ஒரு எடையுமாக எடுத்து முதலில் தங்கத்தை உருக்கி அது உருகும்போது மற்ற இரண்டு சரக்கையுஞ் சேர்த்துக் களங்காக்கி வைத்துக்கொண்டு பத்தெடை செம்பை உருக்கி அதில் இந்த மருந்தை ஒரு எடை கொடுக்க ஒன்பதரை மாற்று காணும், அதில் கெந்தகஞ் சேர்த்துச் செந்தூரஞ் செய்தாலோ நவலோக வேதையாகும். (எ-று)

## திலகமுறை.

ஆமேநீ வசியமென்ற மையைக் கேளு
அமைவான கஸ்தூரி மஞ்சளப்பா
வாமேநீ யூசியென்ற காந்தந் தானும்
வளமான கோரோசனை கிறும்பு கூட்டித்
தாமேநீ பச்சையென்ற பூரத்தோடு
தயவான சாதிக்காய் விராகன் கால்தான்
நாமேநீ யிவையெல்லாம் பொடியாய்ச் செய்து
நாயகனே வெண்டுகிலில் நீபரப்பே. (11)

பரத்தியே தலைமஞ்சங் கொடியுங் கூடப்
பண்பான குருபாதந் தனைவணங்கி
அரத்தியே திரியாக்கிக் கருச்சீலைசுத்தி
அப்பனே தாமரைநூல் மேலேசுத்தி
வரத்தியே காராவி நெய்யைத் தானும்
வளமான சிரசோடு தன்னிலிட்டு
சிரத்தியே சிரசோட்டில் நெய்யைவார்த்து
சிவசிவா விளக்கேற்றி மையை வாங்கே. (12)

வாங்கியே புழுகுடன் சவ்வாதுங்கூட்டி
வளமாக மத்தித்து சிமிளில் வைத்து
பாங்கியே மோகினிக்குப் பூசை செய்ய
பண்பான மந்திரந்தான் சொல்லக்கேளு
தாங்கியே பூசையது வாலைபூசை
தயவாகப் பூசித்துத் தியானமோது
ஆங்கியே ஸ்ரீம் இரீம் கிலீ மென்றோதி
ஆக்ருஷ்ணீ மோகினீயென் றங்கென் றெண்ணே. (13)

எண்ணவே தியானமொரு லக்ஷமோது
என்னசொல்வே னுலகமெலாம் வசியமாகும்
நன்னவே தங்கத்தால் வெள்ளியாலும்
நல்லசிமிள் குச்சிசெய்து திலகம்போடு
பண்ணவே தேவராக்ஷதர்கள் சித்தர்
பண்பான புருஷரொடு மாதர்யாரும்
அண்ணவே கேட்டதெல்லா மீவார்பாரு
அப்பனே பகையெல்லா மற்றுப்போமே. (14)

போமேதான் மாற்றமொன்று சொல்லக்கேளு
பொலிவான ஐங்கோலப் பிண்டம்வாங்கி
நாமேதான் சூரணித் தெடுத்துக்கொண்டு
நாயகியாள் சிலைமேல வைத்துருட்டி
ஆமேதான் சிரசோட்டிற் காராவி நெய்யில்
அப்பனே மையெரித் தெடுத்துக்கொண்டு
வாமேதான் திலர்தமிட மரையும்பாரு
வளமான மான்மார்க்க சித்திதானே. (15)

(போ-ரை.) இனி வசிய மையைச் சொல்லுகிறேன் கேட்பாயாக (சொத்தை சொள்ளையில்லாத) கஸ்தூரி மஞ்சள், ஊசிக்காந்தம், கோரோசனம், லவங்கம், பச்சைக் கற்பூரம், சாதிக்காய் இவைகள் வகைக்கு கால் வராகனெடை எடுத்துப் பொடிசெய்து வெண்மையாகிய துணியில்பரப்பி குருவின் பாதத்தைவணங்கி அவருடைய மூலமாகக் கண்டறிந்து தலைபிண்டக் கொடியைக் கொண்டுவந்து அதனுடன்வைத்துத் திரிதிரித்து மேலே கறுப்புத் துணியைச்சுற்றி அதற்குமேல் தாமரை நூலைச்சுற்றி கறுப்புப்பசுவென்னும் காராம்பசுவின் நெய்யை மண்டையோட்டில் வார்த்து அந்தத்திரியை அதிலிட்டுக் கொளுத்தி

மைவாங்கவும், அப்படி வாங்கின மையுடன் புனுகு ஜவ்வாது இவைகளைச்சேர்த்து நன்றாய்க்கலந்து வைத்துக்கொண்டு மோகினிக்கும் வாலைக்கும் பூசைசெய்து ஸ்ரீம் இரீம் கிலீம் என்று தியானஞ்செய்து மோகினிதேவி நீ ஆக்ருஷ்ணீ அங் றங் என்று மனதில் எண்ணிக் கொண்டு ஷை மந்திரத்தை ஒரு லக்ஷந்தடவை ஜெபித்தால் வசியமாகும், இந்தமையை வெள்ளியாலாவது தங்கத்தாலாவது கம்பிசெய்து அதிலெடுத்து மையிடவும், அப்படி செய்தால் தேவர்கள், ராக்ஷதர்கள், சித்தர்கள், புருஷர்கள், பெண்கள் இவர்களெல்லாம் என்ன கேட்டாலும் கொடுப்பார்கள். இன்னமொன்று சொல்லக்கேளு !!! ஐங்கோலமென்னும் அழிஞ்சிலின் சமூலம் வாங்கிச் சூரணஞ்செய்து அதை ஒரு பெண்ணின் சீலையில்வைத்துத் திரியாக்கி மண்டையோட்டில் காராம்பசுவின் நெய்யைவிட்டு அதில் இந்தத் திரியைப்போட்டு எரித்து மைவாங்கி திலர்தமிட்டால் சர்வமும் மறையும். (எ-று.)

## அஞ்சனம்.

சித்தான அஞ்சனந்தான் சொல்லக்கேளு
சிறப்பான மூலிகையொன் றுரைப்பேன்மைந்தா
முத்தான ஆடாதோடை மூலியப்பா
முதன்மையா மதினுடைய கிழங்கைக் கண்டு
பத்தான எண்பேத மட்டுஞ்செய்து
பண்பான வதினுடைய கிழங்கைவாங்கி
வித்தான குழியம்மி தன்னிலப்பா
விதமான கிழங்கதிலே வராகன்போடே. (16)

போட்டப்பா வதினுடைய பழந்தானையா
பொங்கமுடன் கோரோசனைப் புழுகுகூட்டி
ஆட்டப்பா விளக்கிட்டு சாரைநெய்யால்
அன்பாக வெட்டுண்ட சிரசினோட்டில்
கூட்டப்பா மையெரித் தெடுத்துக்கொண்டு
கூர்மையாய் சற்குருவின் பாதம்போற்றி
நீட்டப்பா முக்காலும் பூசைசெய்து
நினைவாகப் புற்றினிட தேனிலாட்டே. (17)

ஆட்டையிலே குழியம்மி வெடித்துக்காணும்
அப்பனே பாதாளம் ஜெகமாய்த்தோணும்
கூட்டையிலே வழித்தெடுத்துச் சிமிளில்வைத்து
குருவான கணபதிக்குப் பூசைசெய்து

நீட்டையிலே யஞ்சனு தேவி யனுமாருக்கும்
நிக்ஷயமாய்ப் பூசைசெய்து கண்ணிற்போடு
காட்டையிலே நிதிகளெல்லாங் கண்ணிற்ரேன்றுங்
கனிவாகக் கிண்டியதை யெடுத்துக்கொள்ளே. (18)

(போ-ரை.) வேருெரு அஞ்சனஞ் சொல்லுகிறேன்கேள். ஆடாதோடை என்னும் மூலிகையின் முதிர்ந்த கிழங்கைப்பார்த்து மந்திரோச்சாடனஞ்செய்து அந்தக் கிழங்கை எடுத்துக்கொண்டுவந்து கல்வத்தில் ஒரு வராகனிடைபோட்டு, அத்துடன் அதினுடைய பழமும், கோரோசனையுங் கூட்டித் திரியாக்கி சாரைப்பாம்பின் நெய்யை மண்டையோட்டிலிட்டு அதில் திரியைப்போட்டு எரித்து மையை எடுத்துக்கொண்டு ஆசானுடைய திருவடிகளை நமஸ்காரஞ்செய்து புத்துத்தேனுல் அரைத்தால், இவ்விதம் அரைக்கும்போது கல்வம் வெடித்துக் காணும், அப்போது பாதளமும் காணும், இது கண்டு அவைகளையெல்லாம் வழித்தெடுத்து ஒரு பாணியில் வைத்து கணபதிக்குப் பூசைசெய்து அஞ்சனுதேவியையும் ஆஞ்சனேயரையும் பூசித்து கண்ணிற் போட்டால் உலகத்திலுள்ள நிதிகளெல்லாம் கண்ணுக்குத் தெரியும் (எ-று.)

## மாரணம்.

கொள்ளவே மாரணத்தைச் சொல்லக்கேளு
கொடிதான பாவமடா சொல்லொணுது
அள்ளவே மாரணசக் கரத்தைக்கீறி
அடைவாக நீர்மலமுங் காற்கீழ் மண்ணும்
விள்ளவே கருவதிலே யரைத்துப்பூசி
விதமான வவன்பேரு மழுந்தநாட்டித்
தள்ளவே நாகத்தின் வாயினுள்ளே
தான்செலுத்தித் தலைகீழாய்த் தூக்கிக்கட்டே. (19)

கட்டியே சமர்த்தென்ன வெட்டியப்பா
கருவான நிம்பநெய்யி லோமம்பண்ணு
நட்டியே தென்முகமா யிருந்துக்கொண்டு
திரமாக சபிக்கும் மந்திரத்தைக்கேளு
கிட்டியே மசிநசி யென்றேயோது
கிருபையுட. னெட்டுநாள் செபித்தாயானுல்
நெட்டியே வாங்குமடா ஆரானுலும்
நிமிஷத்திற் கொல்லுமடா கண்டுபாரே. (20)

(போ-ரை.) இனி மாரணத்தைச் சொல்லக் கேளு:—இதைச் ✍ சொல்வது மிகவும் பாவமாகும், அதாவது மாரணசக்கரம் ஒன்றைக்கீறித்து வரிசையாக நீரும், மலமும், காலின்கீழ்மண்ணும், அதில் கருவை அரைத்துப்பூசி அவனுடையபேரையும் அதில்எழுதி ஒரு பாம்பின் வாயினுள்ளே செலுத்தி தலைகீழாய்த்தூக்கிக்கட்டி, அதன்பிறகு வேப்பெண்ணையால் ஓமம் பண்ணி தெற்குமுகமாக விருந்துக்கொண்டு மசி நசி என்று தினம்மூன்றுக்கு ஆயிரத்தெட்டு வுரு எட்டுநாள் ஜெபித்தாயானல் நிமிஷத்திற்போகும் இதைக்கண்டுபார். எ-று.

## பேதனம்.

பாரப்பா பேதனத்தைச் சொல்லக் கேளு
　　பண்பான வூமத்தங் காய்தான் ரெட்டை
சேரப்பா வதி லிடக்கா லடிகீழ் மண்ணும்
　　சிறப்பாக வதிற்செலுத்தி யவன்பேர் நாட்டி
வீரப்பா பேதனத்தை நன்று யோது
　　விதமாக வவனிருக்கு மூரைச்சுற்றி
கூறப்பா மயானத்திற் புதைக்கும் போது
　　குருவான கருகூட்டிப் புதைத்துப் போடே. 21

புதைத்தவுடன் பக்கமதிற் பிரமை கொள்ளும்
　　பொல்லாத கோஷ்டியெல்லா மனைகஞ் செய்யும்
வதைத்தமட்டுந் தேசமெங்குஞ் சுற்றி மாள்வான்
　　வையகத்தோர் தான்பழித்துச் சிரிப்பார் பாரு
பதைத்து பதைத் தலைந்தலைந்து அழுவானப்பா
　　பழிகாரன் பாவியவ னென்ன சொல்வேன்
கதித்தமனத் துடன்வந்து காலில் வீழ்ந்தாற்
　　கருவான வதையெடுத்து ஆற்றிற்போடே. 22

(போ-ரை.) இனி, பேதனத்தைச் சொல்லுகிறேன் கேள்:—அதாவது இரட்டை ஊமத்தங்காயைபிளந்து அதில்எதிராளியின் இடது காலடியின்கீழ் மண்ணை அந்த காய்க்குள் வைத்து அவனுடைய பெயரை மேற்படி மண்ணில் எழுதி வேறொரு பிளப்பை அதின்மேல்வைத்து மெல்லிய நூலால் இருபிளப்பையுஞ் சேர்த்துக்

✍ அப்படிச் சொன்னலும் புலிப்பாணி ஜாலத்திரட்டு 10-வது பாட்டின் உரைப்படி அநுசரித்து நடக்கவேண்டும்.

கட்டி பேதன மந்திரத்தைச் சொல்லி அவன் இருக்கும் ஊரைச் சுற்றி மயானத்தில் குருவான கருவைக்கூட்டி புதைத்து விடவும். இவ்விதமாகப் புதைத்தவுடனே சமீபத்தில் மயக்கமுண்டாகும், அனேக கோஷ்டங்களையெல்லாஞ் செய்யும், ஊரெல்லாஞ் சுற்றி றிப்பான், உலகத்தோர்களெல்லாம் பழித்துச் சிரிப்பார்கள், பதைபதைத்து அழுவான் இப்படிப்பட்டவன் வந்து காலில் விழுந்தால் மயானத்திற் புதைத்திருந்த காயை யெடுத்து ஆற்றில் ஓடுகின்ற ஜலத்திற்போட அவனுக்குச்சுகமாகும். எ-று.

## வித்து வேஷணம்.

போடவே வித்துவேஷணத்தைக் கேளு
பொலிவான வேம்பின்மேற் காக்கை கூடு
நாடவே கழுதையுட சடையுங் கூட்டி
நாயகியா ளறுத்தகயி றதுவுஞ் சேர்த்து
கூடவே பஞ்சுவெட்டி யறுந்து போன
குணமான நரம்பதுவும் பன்றி ரோமம்
சாடவே பித்தநகம் பித்தக்கூறை
சலாயனச் சுளகுடனே சித்தி யாமே. 23

ஆமேநீ முச்சந்தி மீதின் மண்ணி
லப்பனே யுட்கொளுத்தி யடுப்பில் வைத்து
தாமேநீ தென்முகம் நிர்வாண ரூபந்
தயவாகத் தான்சுட்டுச் சாம்ப லாக்கி
வாமேநீ யறுகோண மீதிற் கீறி
வளமாக நசிமசி யென்று நாட்டி
நாமேநீ மந்திரந்தான் தூம்தூம் சீசீ
நண்ணியோம் நசிநசி யென்றே யோதே. 24

ஓதியே யெடுத்துவந் தெதிரி பேரை
ஒளிவாகத் தான்முடிந் திரப்பில் வைக்க
பாதியே படிவாசல் தாண்டிப் போனால்
பதிகெட்டு இருவருமே பிரிந்து போவார்
வாதியே வடமொழியில் முன்னோர் சொன்ன
வளமான வழியெல்லாந் தமிழி லப்பா
நீதியே தப்பாம லெடுத்து நன்றாய்
நீணிலத்தோர் தான்பிழைக்கப் பாடினேனே. 25

பாடியே நரம்பெலும்பு மயிருங் கூட்டு
பண்பில்லாச் சுடலையுட சாம்பல் சேரு
ஆடியே யுடும்பினது தலையுங் கூட்டி
அப்பனே நாய்ப்பல்லு மதனிற் சேர்த்து
சூடியே யெட்டியிலே மாடன் செய்து
சுகமான புதுக்கலசந் தன்னில் வைத்து
நாடியே யிதுவெல்லா மனிதற் போட்டு
நலமான மாடனைவிட் டோது வாயே. 26

ஓதவே வண்ணார வுதிர மாடன்
ஒளிவான வக்கினி சாமுண்டி விஞ்சை
வாதாகக் கறுகறுத்தாப் போலு மிக்க
வளமான குரங்குபோல் பூனை போலும்
ஆதரவாய்ப் புலிபோலுங் காடி போலும்
அடைவான பெரும்பன்றி போலு நிற்கும்
பேதையே பேய்போலும் பூதம் போலும்
பிடித்திழுத்துக் கடிப்பதுபோற் செய்யு மாடன். 27

மாடனைத்தா னுருவேற்றி வைத்து நீயும்
மைந்தனே பூசைசெய் தெதிரி னிற்கில்
தாடனமாய்க் கலசமதை யுடைத்த போது
தட்டழிந்தே யவன்குலமு நாச மாகும்
வீடவே வியாதியிலே அழுந்து வார்கள்
விதம் விதமாய் மாடுகெண்க ளுயிருஞ் சேதம்
யீடலையத் திரவியமு மழிந்து போகும்
யினியவே ளாண்மைமுதல் நாச மாமே. 28

ஆமேதா னெதிரினின்ற பேரை யெல்லாம்
அடைவான காரியத் தகட்டிற் கீறி
வாமேதா னைங்காய மரைத்துப் பூசி
வளமான கலசமதில் தாக்கிப் போடு
தாமேதான் சத்துருக்கள் வணங்கி வந்தால்
தயவாகத் தானெடுத்து பாலிற் போட்டு
நாமேதான் ஓடுகிற சலத்திற் போடு
நலமாக நிவர்த்தியாய்ப் போகும் பாரே. 29

**(போ-ரை.)** இனி வித்துவேஷணத்தைச் சொல்லுகிறேன் கேள்:—வேப்ப மரத்தின்மேலிருக்கின்ற காக்கைக்கூண்டும், கழுதை

ஜடையும், நாயகியாள் அறுத்த தாலிக்கயரும், (பஞ்சு கொட்டுபவர் வெட்டுவதால் அறுந்துபோன) பஞ்சுகொட்டும் நரம்பும், பன்றிமயிரும், பயித்தியக்காரனுடைய நகமும், அவனுடைய துணிகந்தையும், சலாயன விறகு இவைகளை, முச்சந்தி கூடும்மண்ணின்மேல் ஓர் அடுப்பை வைத்து தெற்கு முகமாக நிர்வாணமாக இருந்து அடுப்புக்குள் இதையெல்லாம் போட்டு சுட்டு சாம்பலாக்கி அந்த சாம்பல் அடுப்புக்குள் ளிருக்கும்போதே அந்தச் சாம்பலின்மேல் அறுகோணம் போட்டு அதின்மத்தியில் தூமசி என்றுநாட்டி தூம் தூம் சிசி ஓம் நசிநசிஎன்று ஆயிரத்தெட்டுதரம் சரியாய் மேற்படி மந்திரத்தை ஜெபஞ்செய்து, அவைகளையெல்லாம் எடுத்துக்கொண்டுவந்து எதிரியினுடைய பேரை ஒருதுண்டு சீட்டில் எழுதி அத்துடன் சேர்த்து மறைவாக முடிந்து இரப்பில் வைக்க அப்படி வைக்கப்பட்ட வாசற்படியை அவன் தாண்டினால் இருவரும் பிரிந்து போவார்கள். இவைகளை யெல்லாம் வடமொழியிலிருந்து தமிழினால் சொன்னேன், இன்னும் முன்சொன்ன நரம்பும் பன்றியின் எலும்பும், மயிரும், சுடுகாட்டுச் சாம்பலும், உடும்பின் தலையும், நாய்ப்பல்லும் ஆகிய இவைகளையெல்லாஞ் சேர்த்து எட்டி மரத்தினாலே மாடன் செய்து புதிய கலசத்தில் வைத்து இவைகளை யெல்லாம்அதில்போட்டு மாடனை மந்திரஞ் செய்ய அப்போது வண்ணார உதிர மாடன், அக்கினி, சாமுண்டி, விஞ்சை இவைகளால் குரங்குபோலவும், பூனைபோலவும், புலிபோலவும், கரடிபோலவும், பெரும்பன்றி போலவும், பேய்போலவும், பூதம்போலவும், பிடித்திழுத்துக் கடிப்பதுபோலவும் செய்யும். இப்படி மாடனை உருவேற்றிவைத்து எதிரியானவன் நிற்கும்போது அவனெதிரில கலசத்தை உடைத்தால் அவனுடைய குலம் நாசமாகும், வியாதியினால் வருந்துவார்கள், மாடு கன்றுகளெல்லாம் சேதமாகும், திரவியமெல்லாம் அழிந்து போகும், வேளாண்மை முதல் நாசமாகும். பிறகு எதிரியினுடைய பேரையெல்லாம் காரீயத் தகட்டிற்கீறி ஐங்காயம் அரைத்து பூசிக் கலசத்திலிடவும், சத்துருக்கள் வணங்கி வந்தால் அதை எடுத்து பாலிற்போட்டுக் கழுவி ஓடுகிற சலத்திற்போட்டால் சகலமும் நன்றாக நிவர்த்தியாய்ப் போகும்.

## கள்ளனை பிடிக்க.

பாரப்பா நிலவாகை மலைகள் தோறும்
பண்பாகத் தானிருக்கு மறிந்து பாரு
வாரப்பா வதினுடைய விரையைத் தானும்
வளமாகப் பத்துபல மெடுத்து வந்து

சீரப்பா தலைமஞ்சங் கொடியு மாவுஞ்
சிறப்பாக முப்பூவும் வராகன் கூட்டித்
தேரப்பா வில்லைதட்டி யுலரப் போடு
திறமாக வுலர்த்தியதைத் தயிலம் வாங்கே. 30

வாங்கியே ஆள்காட்டி முட்டை தன்னை
வளமான சிற்றண்டத் தயிலம் போலே
தாங்கியே வாங்கியந்தத் தயில நேரே
தயவாகத் தானெடுத்துச் சிமிளில் வைத்து
ஓங்கியே களவுமுதற் சூன்யம் யாவும்
உற்றுப்பார் தோற்றுமடா கள்ள மெல்லாம்
நீங்கியே யதுகண்டு பிடித்துக் கொண்டு
நினைவாகக் குருபாதம் பணிவாய்த் தானே. 31

(போ-ரை.) மலைகளி லெல்லாம் இருக்கின்ற பெருநிலவாகைஎன்னும் செடியைக் கண்டு பிடித்து அதன் விரையில் பத்துபலம் நிறுத்துஎடுத்துத் தலைமைந்தன் கொடியும், மாவும், முப்பூ வென்னும் பூநீற்றுக் குருவும் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வராகனெடையாகஎடுத்துஅந்த விரையுடன் கூடச்சேர்த்து அரைத்தாவது இடித்தாவது பில்லைபில்லையாகத்தட்டி உலரப்போட்டு ஒரு பானையிலிட்டுக் குழித்தயிலம்வாங்கவேண்டும். அதன் பிறகு ஆள்காட்டி என்கிற குருவியின் முட்டைகளைச் சேகாரஞ் செய்து அண்டத் தயிலம் இறக்குவதுபோல் இரக்கி அந்தத் தயிலத்தை முன்தயிலத்தின்அளவாகவே எடுத்து இரண்டையும் ஒன்றுகக்கலந்து ஒரு சிமிளில் வைத்துக்கொண்டு களவுசூன்யம்இவைகளுக்குஇந்தத்தயிலத்தைஒரு வெற்றிலையில் கொஞ்சம்தடவி உற்றுப்பார்த்தால் சகலமும் நன்ருய்த்தெரியும். உடனே அவர்களை பிடித்துக்கொண்டு ஆசானுடைய திருவடிகளை தியானஞ் செய்யவேண்டும். எ-று.

## குறி சொல்லல்.

தானேதான் குறிசொல்லும் விவரங் கேளு
தயவாகப் பச்சையென்ற புழுகு கோஷ்டம்
மானேதான் பச்சையென்ற பூரத் தோடு
மைந்தனே சந்தனமுஞ் சமனுய்ச் சேர்த்து
பானேதான் சலம்போட்டு மைபோ லாட்டிப்
பண்பாகத் தரைதனிலே பூசிப் பின்னே
வீணேதான் போகாமல் திரிகோண மிட்டு
விதமான ஸ்ரீங்காரம் உள்ளே நாட்டே. 32

நாட்டியே மந்திரத்தைச் சொல்லக் கேளு
 நலமாகத் தான்செபிக்க மூன்று காலம்
ஓட்டியே * ஓம் நமோ பகவதே ஓம்
 உக்கிரமா காளி சாமுண்டி யாயி
நீட்டியே வயிரவி சாம்பவி யோங்காரி
 நிமலி மஹாசத்தி நமஹா நமஹா வென்னே
ஆட்டியே லக்ஷமுட ளுயிரத்தெட்
 டன்பாகத் தான்செபிக்க சித்தியாமே. 33

சித்தியாய் வருமளவு மூன்று காலம்
 சிறப்பாகத் தலைமுழுகித் தியான மோது
பத்தியாய் ஒருபொழுது அமுது கொள்ளு
 பாங்காக முன்னெடுக்கும் கவாளந் தன்னை
நத்தியாய் முன்னிற்பப் பின்மேல் வைத்து
 நலமாக வேஷ்டியிலே படுக்க வேணும்
வெத்தியாய் வஸ்துடனே சுத்தி வைத்து
 விதமாக முதற்பூசை செய்குவாயே. 34

செய்யவே மண்டலத்தில் சித்தி யாச்சு
 செய்தொழில்க ளின்னதென சொல்ல லாச்சு
பையவே முன்னடந்த சேதி யெல்லாம்
 பண்பாக நினைத்ததெலாஞ் சொல்லும் பாரு
அய்யனே புகையதுவுங் குடிக்க லாகா
 தடைகாயும் வெற்றிலையு மிகுந்து போடு
கையவே கன்னத்திற் கையை வைத்து
 கடந்தொரு சேதியெலாஞ் சொல்லு வாயே. 35

சொல்லவே நின்றதொரு வேங்கைக் கட்டை
 சோபிதமாய் செய்தபின்பு சொல்லக் கேளு
வெல்லவே யோணன்தோ லுரித்துக் கட்டி
 விதமான பேதனச் சக்கரத்தைக் கீறி
நல்லவே சலாகையிற் சக்கரத்தைச் சுற்றி
 நாயகனே யுட்பதித்துக் கட்டித் தீரு
மெல்லவே யடைத்திடவே யெதிரி யெல்லாம்
 மதிமயங்கி வாய்புலம்பப் பகரு வேனே. 36

---

* இக்குறி போட்டிருக்கும் மந்திரத்தை ஓம் நமா பகவதே ஓம்உக்கிரமா காளி சாமுண்டியாயி வயிரவி சாம்பவி வோங்காரி நிமலி மஹாசத்தி நமஹா நமஹா வென்று சொல்லவேண்டியது.

(பொ-ரை.) இனி குறிசொல்லும் விபரத்தைக் கேட்பாயாக: புனுகு, கோஷ்டம், பச்சைக்கற்பூரம், சந்தனம் இவைகளைச் சமஎடையாகச் சேர்த்து குளிர்ந்த ஜலம் விட்டு நன்றாயரைத்து அதற்காக ஏற்படுத்தியிருக்கின்ற இடத்தில் (பூமியில் அதைப்பூசி அதின்மேல் முக்கோணம் போட்டு அந்த முக்கோணத்தின் மத்தியினில் ஸ்ரீம் என்னும் மந்திரத்தை எழுதி, அவ்விடத்தில் உட்கார்ந்து அத்திரிகோணத்திற்கு புஷ்பந்தரித்து, காலை உச்சி மாலை என்னும் மூன்று வேளைகளிலும் ஓம் நமோ பகவதே, ஓம், உக்கிரி, மாகாளி, சாமுண்டி, ஆயி, வயிரவி, சாம்பவி, ஓங்காரி, நிமலி, மகாசத்தி நமஹா, நமஹா வென்று ஒரு லக்ஷத்து ஆயிரத்தெட்டு உரு செபிக்க அது சித்தியாகும, இந்த காரியம் கைக்கூடும் வரைக்கும் மூன்று வேளைகளிலும் தலைமுழுகி ஒரு பொழுது புசித்து, அப்படி புசிக்கும் போஜனத்தில் முன் கவளம் கடைசி கவளம் இவைகளை ஒன்றின்மேல் ஒன்றாகவைத்து காகத்திற்கிட்டு இரவில்வஸ்திரத்தின் மேல் படுத்துறங்கி வஸ்துவான கள், சாராயமும்வைத்து முதற்பூசை செய்யவேண்டும். இவ்விதம், ஒருமண்டலம் செய்துக்கொண்டு வந்தால் இத்தொழில் கைக்கூடும். கைகூடி விட்டபிறகு எதிராளிகள் நாடிவந்தால் அவர்கள் கோருகிற சங்கதிகளை எல்லாம் அந்தக் குறியின் சித்தியானது உண்மையாக எடுத்துச்சொல்லும் ஆதலால் குறி சொல்பவன் சுருட்டு பிடிக்கக்கூடாது, வெற்றிலைப் பாக்கு எவ்வளவும் குறையாமல் போடலாம், இதைச்சொல்லுவோன் கன்னத்தில் கையை வைத்துக்கொண்டு சொல்லவேண்டும். அதுதவிர வேங்கை மரப் பலகையை நன்றாய் நாலுக்கு நாலங்குலமிருக்கும்படி சுத்தி செய்து ஓனுனுடைய தோலையுரித்து கட்டிஅதில் பேதனத்திற் குறிய சக்கரத்தைபோட்டு சரோகையினால் சக்கரத்தைச் சுற்றி உள்ளே பதியச்செய்து அடைக்க எதிரிகளெல்லாம் மதிமயங்கிப் புலம்புவார்கள். எ-று.

## சொக்கு தூள்.

பகரவே பொடியொன்று சொல்லக்கேளு
　　பாங்கான செருக்குடைய பாக்கை வாங்கி
திகழுவே யப்பையுட மூலத் தோடு
　　சிறப்பான நிலப்பனையுந் தாளி வேரும்
திகழுவே பேயத்தி யாலவேரும்
　　பொலிவான குப்பையுட மேனி வேரும்
அகலவே வேளைவேர் கழற்சி வேரும்
　　அப்பனே யூமத்தம் வித்துஞ் சேரே. 37

சேரப்பா தலைமஞ்சங் கொடியுங் கூடி
செயலான மாதவிடாய் சீலை கூட்டிப்
பாரப்பா பித்தனுட சாம்பல் மண்டை
பாங்கான வூமைமண்டைப் பொடியுஞ் சேர்த்து
தீரப்பா விதுவெல்லாஞ் சமனாய்க் கூட்டித்
திறமாகப் பொடிசெய்து வைத்துக்கொண்டு
கூரப்பா பேயத்தி யாலம் பாலும்
கூடவே தான்சேர்த்துப் பொடித்திடாயே. 38

பொடியெடுத்துத் தூவிவிட்டாற் சகல பேரும்
பொறிகலங்கி மதிமயங்கிக் கிடப்பார் பாரு
மடிபிடித்துத் தான்விரட்டிப் பொருள் கொண்டாலும்
மங்கையரைப் புணர்ந்தாலு மறிவிராது
தடியெடுத்தே யடித்தாலும் நினைவிராது
தயவாகச் சலமங்கே தெளிக்கு மட்டும்
வடிவெடுத்த போகருட கடாக்ஷத் தாலே
வழுத்தினேன் புலிப்பாணி சொக்குத் தூளே. 39

(போ-ரை.) ஒருபொடியைச் சொல்லுகிறேன் கேள்:—சொக்குள்ளபாக்குகளை வாங்கி அப்பைக் கோவைக் கிழங்கு, நிலப்பனங்கிழங்கு தாளிவேர், பேயத்திவேர், ஆலம்வேர், குப்பைமேனிவேர் வேளைவேர், கச்சைக்காய்வேர், ஊமத்தன் விறை இவைகளை மேற்படிபாக்குடன் சேர்த்து அவைகளுடன் நஞ்சுக் கொடி, மாதர்களுடையமாதவிடாய் சீலையும், பித்தனைக் கொளுத்திய சாம்பலும், ஊமைமண்டை ஓட்டுப்பொடி இவைகளை யெல்லாம் ஓரே அளவாகச் சேர்த்துப் பொடிசெய்து வைத்துக்கொண்டு அதில் பேயத்திப் பால், ஆலம்பால், இவைகளைக் கூடச்சேர்த்து அரைத்துப் பொடி பாக்கி அந்தப்பொடியை யார்பேரிலாவது கொஞ்சம் எடுத்துத்தூவிவிட்டால் யாவரும் அறிவு மயங்கிப்போவார்கள். அப்பாழுதுஅவர்களிடத்திலுள்ள பெருள்களை அபகரித்துக் கொண்டாலும், பலாத்காரமாகப் புணர்ந்தாலும், தடியெடுத் தடித்தாலும் அறிவிருக்காது இது தெளியவேண்டுமானால் அவர்கள் மேலே கொஞ்சம்ஜலம் தெளித்தால் மயக்கம் தெளிந்து விடும், இது போக முனிவருடைய கிருபையினால் புலிப்பாணி முனிவர் சொன்ன சொக்குத்தூள். எ-று.

## விந்து ஸ்தம்பனம்.

தூளேவிட்டு இன்னமொன்று சொல்லக் கேளு
துலக்கமுள்ள பாளேவித் தெடுத்து வந்து
பாளேயென்ற விந்துதா னிருத்தி வைக்கும்
பண்பான பூமி சர்க்கரையின் மூலம்
காளேயென்ற பூனேயுட காலி வித்தும்
கனிவாக வகைவகைக்கு விராகன் ரெண்டு
ஆளவே யாவின்பால் தன்னு லாட்டி
அடைவாகப் பன்னிரண்டு நாள்தான்கொள்ளே. (40)

கொள்ளவே யந்திசந்தி கொண்ட போது
கோடிபெண்ணே யணேந்தாலுங் கழிந்திடாது
தள்ளவே மாற்றதுவுஞ் சொல்லக் கேளு
தயவாகத் தண்ணீரிற் கழுத்து மட்டும்
விள்ளவே நின்றக்கால் கெலிக்குந் தேகம்
விதமாக வெலுமிச்சம் பழத்தை யுண்ணு
அள்ளவே போகருட கடாக்ஷத்தாலே
அடைவாக புலிப்பாணி விளம்பி னேனே. (41)

(போ-ரை) உலகோர் மெச்சும்படியானஒன்று சொல்லுகிறேன் கேள்;—அதாவது ஆடுதின்னுப்பாளே விரையைக் கொண்டு வந்து விந்துவை நிறுத்தும்படியான குணமுடைய பூச்சக்கரைக் கிழங்கு (அதாவது பூமிசர்க்கரைக்கிழங்கு) பூனேகாலிவிரை இவைகள் வகைக்கு இரண்டிரண்டு விராகனெடை எடுத்து பசும்பாலால் நன்ருய்யரைத்து பன்னிரண்டு நாள் வரைக்கும் இரண்டுவேளேயும் சாப்பிட்டால் கோடி பெண்களேச் சேர்ந்தாலும், இந்திரியம் கழியாது. அதற்கு மாற்றுவது கழுத்துவரைக்கும் தண்ணீரிலிருந்துவரலாம். தவிர எலுமிச்சம்பழத்தைச்சாப்பிடவேண்டும். ஆகையால் போகமுனிவருடைய கிருபையினுல் புலிப்பாணியாகிய நான் சொன்னேன். (எ-று)

## வசியம்.

விளம்பவே யின்னமொன்று சொல்லக் கேளு
விதமான சூரிய காந்திப் பூவுந்
தளும்பவே செங்கழுநீர் பூவினேடும்
தயவான முல்லேப்பூ மாம்பூ கூட்டி

குளம்பவே கோழியா வாரைப் பூவுங்
கொடிதான வெள்ளைக் காவளையின் பூவும்
இளம்பவே செவ்வலரிப் பூவுங்கூட்டி
கெணிதமுடன் கறிப்பன்சார் கூடச்சேர்த்தே, (42)

சேர்த்தப்பா பூவையெல்லாஞ் சார் பிழிந்து
சிறப்பாக வோரெடையா யொன்றில் வாரு
பார்த்தப்பா கொம்புத்தேன் கூடச் சேர்த்து
பண்பாக கல்வத்தி லரைக்கும் போது
கூர்த்தப்பா பெண்ணுடைய மதுவுங் கூட்டிக்
குணமாக கொடுஞ்சினையுங் கூட்டி யாட்டு
கோர்த்தப்பா புழுகுடனே பச்சைப்பூரங்
கொடிதாக வகைவகைக்கு விராகன் காலே. (43)

காலான விதுவெல்லாம் அரைத்து மைபோற்
கட்டாகச் சிமிழதனி லடைத்துக்கொண்டு
பாலான மயானமதிற் றன் புதைத்து
பண்பாக மூன்றுநாள் மோகினியை யோது
சேலாக முன்சொன்ன மந்திரந் தான்
செப்புவாய் தினமொன்றுக் காயிரந்தான்.
வாலாய மோகினியைப் பூசை செய்து
வளமாகத் திலகமிட வசியம் பாரே. (44)

பாரடா வையகத்து மாதரெல்லாம்
பார்த்தவுடன் மதிமயங்கி முறையுங்கெட்டு
சேரடா வென்பாருங் காலில்வந்து
சிறப்பாக விழுவாரும் வணங்கு வாரும்
கூரடா குலமழிந்து வல்துகெட்டு
குடிகெடுத்த காமவெறி கொண்டுபின்னே
தீரடா பொருள்கொடுப்பார் வேணமட்டும்
திறமான வசியமிது திண்ணந்தானே. (45)

(போ-ரை.) வேறொன்றான வசியத்தைச்சொல்லுகிறேன்கேள்:— சூரிய காந்திப்பூ, செங்கழுநீர்ப்பூ, முல்லைப்பூ, கோழியவரைப்பூ, வெள்ளைக்காவளைப்பூ, செவ்வலரிப்பூ இவைகளோடுகூட கரிசலாங்கண்ணிச்சார் மேற்சொன்ன புஷ்பங்களை யெல்லாஞ் சாறு பிழிந்து ஓரே எடையாக ஒரு பாத்திரத்தில் வார்த்து கொம்புத்தேனையுங் கூடச்சே

ர்த்து கல்வத்திற்போட்டு அரைக்கும்போது பெண்ணினுடைய மது வையுங்கூட்டி இவைகளுடன் கோரோஜனம், புநுகு, பச்சைக்கற்பூரம் இவைகள் ஒவ்வொன்றும் கால்விராகனிடையாகச்சேர்த்து இவைகளையெல்லாம் நன்றாக மைபோலரைத்து ஒரு டப்பியில் வைத்துக்கொண்டு சுடுக்காட்டில் புதைத்து மூன்றுநாள்வரைக்கும் மோகினி மந்திரத்தை நாளொன்றுக்கு ஆயிரம்உருஜெபித்து பின்னர் அதை எடுத்து பொட்டிட்டுக்கொள்ள பார்க்கின்ற பெண்களெல்லாம் புத்திகெட்டு, சேருவாயென்று சொல்லுபவரும், காலில் வந்து விழுபவரும், வணங்குபவரும் ஆக அநேகமான திரவியத்தை உனக்குக் கொடுப்பார்கள்.

## கற்பம்.

திண்ணந்தான் கற்பமொன்று சொல்லக்கேளு
திறமாக விழுதியிலை கிழங்கு முண்டு
வண்ணந்தான் அதையறிந் தெடுத்துக்கொண்டு
வளமாகக் கொண்டுவர மண்டலந்தான்
நண்ணந்தான் காயசித்தி யாகும்பாரு
நலமாக வெள்ளறுகுக் கிவ்விதமே பாரு
வண்ணந்தான் வேறில்லைக் கொத்தானுக்கு
வண்பாக வதிநேரே கிழங்குண்டாமே. (46)

ஆகுமே காயசித்தி மண்டலத்தில்
அப்பனே யாகுமடா கண்டுபாரு
போகுமே நோய்களெல்லா மகன்று போகும்
பொன்னுலகிற் றேவரெல்லாம் வசியமாவார்
வாகுமே ஜெகவசிய மாகும்பாரு
வளமான சித்தரெல்லாங் கண்ணிற் றோற்றும்
நாகுமே போகருட கடாக்ஷத்தாலே
நலமாக புலிப்பாணி பாடினேனே. (47)

பாடினேன் யின்னமொன்று சொல்லக்கேளு
பண்பான காயசித்தி சுறுக்கு மெத்த
ஆடினேன் மலைதோறும் உண்டுவுண்டு
அடைவான பொற்சீந்திக் கிழங்குமைந்தா
தேடியே யுண்ணநரை திரையு மாறுந்
தெளிவான வயததுவும் பாலையாவாய்
நாடியே போகருட கடாக்ஷத்தாலே
நலமாகப் புலிப்பாணி சொன்னேன் பாரே, (48)

(போ-ரை.) இனி ஒருகற்பத்தைச் சொல்லுகிறேன்கேள்:—விழுதியிலையையும் அதின்கிழங்கையும் கொண்டுவந்து ஒருமண்டலம்வரைக்கும்பசுவின்பாலிலரைத்துத்தின்றுவந்தால்காயசித்தியுண்டாகும், வெள்ளறுகுக்கும் இந்த குணம் உண்டு,(செடியின்பேரில் படர்ந்திருக்கும் கொத்தானென்கிற கொடிக்கு வேரில்லாதிருந்தாலும் அது எந்தச் செடியின்பேரில் படர்ந்திருக்குதோ அந்தச்செடியின் அடிபுரத்தில் எங்கு அந்தக்கொடி நின்றுவிடுகின்றதோ அதற்கு நேராக பூமியில் கொத்தான் கொடிக்கு மூலமென்கிற கிழங்குண்டு) அந்த கொத்தான் கொடியின் கிழங்குக்கும் காயசித்தி செய்யும்படியான குணமுண்டாதலால் மேற்படி கிழங்கையும் பாலிலரைத்து உண்ணில் காயசித்தியுண்டாகும். இவ்விதம் ஒரு மண்டலத்தில் காயசித்தியானால் சரீரத்திலுள்ள நோய்களெல்லாம் ஓடிப்போகும், தேவர்களெல்லாம் வசியமாவார்கள், உலகவசியமாகும், சித்தர்களெல்லாங் கண்ணுக்குத் தெரிவார்கள் அதுவுமன்னியில் காயசித்தியின் சுருக்கை நான் மலைகள் தோறும் மிகவும் ஆடினேன்:—அதாவது பொற்சீந்தில் கிழங்கைத் தேடிப் பசும்பாலிலரைத்துச் சாப்பிட்டுக்கொண்டுவந்தால் நரைதிரைகள் மாறும், பாலியவயதாகக்கூடும், போகமுனிவர் கிருபையினால் இவ்விஷயங்களை யெல்லாம் நான் சொல்லிவிட்டேன். (எ-று)

## பாதரசத்தின் குணம்.

வெண்பா.

விழிநோய் கிரந்திகுன்ம மெய்ச்சூலை புண்குட்
டழிகாலில் * விந்துவினாலத்தை—வழியாப்
புரியும் விதியாதும் புரியினோ யெல்லா
மிரியும் விதியாது மிலை. (49)

(போ-ரை.) சீவவீரியம் என்கிற ரசத்தை, ரச ஜீவரக்ஷாமிர்த சாஸ்திரமுறைப்படி செய்யத்தக்க சுத்தியெல்லாஞ்செய்து பிரயோகித்தால், நேத்திரநோய், நரம்புகிரந்தி, அஷ்டகுன்மம், கீல்பிடிப்பு, மகாவிரணங்கள், பெருவியாதி, க்ஷீணவாதம் இவைமுதலிய ரோகங்களும் விலகும்,(இதைச்சொல்லாத சாஸ்திரங்கள்யாதொன்றுமில்லை.) (எ-று)

## பாதரச தோஷம்.

கலையைக்கிழிக்கு மவிழ்த் தெறியுங்
கல்லைத்தேடி யெடுத்தெறியு
மலையிற்குதிக்கும் புனன் மூழ்கி
மருள்சேர் பித்தந் தனைக்கொடுக்கும்

* விந்துஎன்பது பாதரசம்.

உலேயி னனல்போ லுடல் வெதும்பும்
ஓயா வுழலே வியர்வாக்கும்
பலகாலமுமே வாய் பினற்றும்
பாதரச தோஷமு மிஃதே. (50)

(போ-ரை) பாதரசத்தை சுத்திசெய்யாமையால் வருந்தோஷங்களாவன, துணியைக்கிழித்தல், அதனை யவிழ்த்தெறிதல், கல்லாலடித்தல், மலேயினின்றுங் குதித்தல், தண்ணீரில்முழுகிமுழுகிக்கிளம்பல், மயங்கிப் பித்துகொள்ளல், தேகத்தில் அழலேயுண்டாக்குதல்,மாறாது வாயில் சலமூறல், அதிவேர்வை பெருகல், எப்போதும் பிரலாபித்தல் (முதலாகியகுணங்களே உண்டுபண்ணுமாதலால்)பாதரசத்தை சுத்திசெய்தே தீரவேண்டும். (எ-று)

## பாதரசம் சுத்தி.

பாதரசத்தை எருக்கன்பாலில் ஒருநாள் ஊரவைத்து செங்கத்தாள் கொட்டை சக்கரை இதுகளில் அரைத்தெடுக்க சுத்தியாகும்.

## பாதரசத்தின் பத்தியம்.

வெண்பா.

மச்சமுப்பு சிதோட்டின் மந்தாதி வத்தெண்ணே
துச்சமத்திபங் கைப்பு தொங்குபுளி—யைச்சாற்றுங்
கூட்டாமற் சூதங் கொடுப்பருண்டா ரைச்சமன்பாற்
காட்டாமற் றுமிருத்தப் பார். (51)

(போ-ரை) பாதரசத்திற்கு மீன், லவணம், சீதள வெப்பமுள்ள பண்டங்கள், அக்கினிமந்தவஸ்து, எண்ணே, கள்ளு, சாராயம், கசப்பு பண்டம், புளிப்பு இவைகள் கூடாவாம். (எ-று)

## ரசபற்பம்.

பாரப்பா ரசபற்பஞ் சொல்லக்கேளு
பண்பான சுத்திசெய்து ரசத்தை யப்பா
சேரப்பா குழியம்மி தன்னிற் போட்டுச்
சிறப்பான விடத்தலேயி னிலேதான் வாங்கிக்
கூறப்பா வாயிலிட்டு மென்று மென்று
கூசாம லுமிநீரை விட்டு ஆட்டு
தீரப்பா நாற்ஜாம மரைத் தெடுத்துத்
திறமாக பில்லேசெய்து ரவியிற் போடே (52)

போடப்பா விடத்தலையைக் கவசங்கட்டிப்
பொங்கமுட னோட்டில்வைத்துச் சீலைசெய்து
சாடப்பா குக்குடத்தில் வெளுத்துப் போகுஞ்
சார்வாக வதையெடுத்து வைத்துக்கொண்டு
ஈடப்பா வியாதியென்ற குணத்துக்கெல்லாம்
இதமாகப் பணவிடைதான் ஒன்றேயாகும்
நாடப்பா பனையினுட கருப்புக்கட்டி
நலமான பசுவெண்ணை தேனுமாமே. (53)

ஆமென்ற யாறுநா ளிரண்டுவேளை
அப்பனே கொண்டவுட னெரிவுகாணும்
வாமென்ற வாவின்பால் நெய்யுமாகும்
வளமான சீனியுடன் இளநீராகும்
தாமென்ற குளிர்ந்த நீர் வாரு வாரு
தயவாக வீரஞ்சு மூவாறுக்கும்
போமென்ற பத்தியந்தா னீரா ரப்பா
பொங்கமுடன் கொண்டபின்பு வியாதிபோமே. (54)

(போ-ரை) இனி ரசபற்பத்தைச் சொல்லுகிறேன்கேள்:—ரசத்தை வாங்கி சுத்திசெய்து கல்வத்தில்விட்டு விடதாரிஇலையைப்பறித்து மென்றுமென்று வாயிலடக்கிக்கொண்டு அந்தஉமிழ்நீரைவிட்டுஷைரசத்தை நான்குசாமம்வரைக்கும் நன்றாகயரைத்துப்பில்லைசெய்து உலரப்போட்டு, அப்படி உலர்த்தினபில்லைக்கு அந்த இலையையே அரைத்துக் கவசங்கட்டி ஓட்டில்வைத்துச் சீலைசெய்து 10 எருவில் புடம்போட்டால் வெளுத்துப்போகும், அதை யெடுத்து வைத்துக்கொண்டு சகல வியாதிகளுக்கும் ஒரு பணவிடை வீதம் பனைவெல்லத்திலாவது பசுவின் வெண்ணெயிலாவது தேனிலாவது கொடுக்கவேண்டும். இவ்விதம் ஆறுநாள் இரண்டுவேளையும் கொண்டவுடன் தேகம் எரிச்சலுண்டாகும், பசுநெய், பசும்பால், சீனி, இளநீர் இவைகளை அதிகமாகஉபயோகிக்கவேண்டும், பத்தியம் ஆறுநாளுமிருந்து (சாக்கிரதையாக) காத்தால் சர்வரோகங்களும் போய்விடும். (எ-று)

## வசிய மூலிகை.

போமடா மூலியொன்று சொல்லக் கேளு
பொங்கமுடன் மிளகுசா ரணையின் மூலம்
ஆமடா வெள்ளியிலே காப்புக்கட்டி
அடைவாகப் பொங்கலிட்டு பலிகொடுத்துத்

தாமடா சத்தியில்தான் அடைத்துக்கொண்டு
தயவாக அணிந்திடவே பலனைப்பாரு
வாமடா பெண்களெல்லாம் வசியமாவார்
வந்தபெண்கள் தான்தியங்கி மயங்குவாரே. (55)

(பொ-ரை.) இனி வசியமூலிகையொன்று சொல்லுகிறேன்கேள்:- மிளகு சாறணையின் வேரை வெள்ளிக்கிழமையில் காப்புக்கட்டிபொங்கலிட்டு பலிகொடுத்து பிடுங்கி குளிசத்திலடைத்து கட்டிக்கொள்ள சகல பெண்களும் வசியமாவார்கள். (எ-று.)

## புருஷ வசியம்.

மயங்குவார் புருஷரெல்லாம் வசியமாவார்
மைந்தனே யூமத்தை பொன்னுங் கண்ணி
தியங்குவார் செம்முள்ளி சிவந்தகஞ்சா
திறமான செங்குவளைப் பொன்னுவாரை
கயங்குவார் புழுகு ரசமையோடு
கரிய கோரோசனைப் புல்லாமணக்கு
வயங்குமிம் மூலியெல்லாஞ் சாறுவாங்கி
வளமாக சரக்கெல்லாம் விராகனென்றே. (56)

ஒன்றானமூலி செந்நா யுருவிமூலம்
உத்தமனே வகைவகைக்கு விராகன் சாறு
பன்றான குழியம்மி தன்னிலிட்டு
பண்பாக மைபோலே யரைக்கும்போது
கன்றான கொம்புத்தேன் காராவெண்ணெய்
கருவென்ற சிற்றண்ட முடைத்துவிட்டு
நன்றான சிமிளதனி லெடுத்துவைத்து
நாயகியாள் திலகமிட வசியமாமே. (57)

வசியமப்பா புருஷரெல்லாம் மயங்குவார்கள்
வளமாகக் கேட்டதெல்லா மீவார்பாரு
உசிதமாய்ச் சேர்ந்தோர்கள் பிரியார்பாரு
உத்தமனே யவள்வாசல் காத்துநிற்பான்
அசிதமாய் கண்டாக்கால் மயங்குவானே
அழுதுநிற்பான் சிணுங்குவான் அய்யோவென்பான்
நிசிதமா யிருந்தபெண்ணும் ரதியேயாகும்
நிமைகண்டால் மோகிப்பான் கண்டுபாரே. (58)

(பொ-ரை.) புருஷரெல்லாம் மயங்கி வசியமாகுதற்கு, ஊமத்தை, பொன்னுங்கண்ணி, செம்முள்ளி, செகப்பு கெஞ்சா, செங்குவளை, பொன்னவாரை, புல்லாமணக்கு, சிகப்புநாயுருவிவேர் இவைகளிலெல்லாம் சாறு எடுத்து வகைக்கு ஒரு விராகனிடையாக அந்தச் சாறுகளையெல்லாம் கல்வத்தில் விட்டு புனுகு, சவ்வாது, கருப்பு கோரோசனம் இதுகளும் ஒவ்வொரு விராகனிடைபோட்டு மைபோலரைத்து கொம்புத்தேன், காராம்பசுவின் வெண்ணெய், சிற்றண்டக்கரு இவைகளைவிட்டு நன்றாயரைத்துக் கலந்து டப்பியில் வைத்துக்கொண்டு ஸ்த்ரீபொட்டிட புருஷரெல்லாம் மயங்கி வசியமாவது மன்னியில் கேட்ட பொருள்களையெல்லாம் கொடுப்பார்கள், கூடினவர்கள் பிரியமாட்டார் அவளுடைய வாசலைக் காவல்சென்று நிற்பார்கள், அவளைக் கண்டவுடன் மதிமயங்கிபழுவான், பார்க்க விகாரரூபத்தையுடைய பெண்ணாகயிருந்தாலும் புருஷர் கண்ணுக்கு ரதியைப்போலொத்த அழகு பொருந்தியவளாக தோற்றுவது மல்லாமல் அவளைக்கண்ட வுடன் புருஷர்கள் மோகிப்பார்கள். (எ-று.)

## பல்லு விழுதல்.

பாரடா உக்கானைப் பிடித்துவந்து
பாவியென்ற சத்துருதம் பலத்தைவாங்கி
சோடா வதின்வாயிற் செலுத்திப்போட்டு
செம்மையாய்க் கருகூட்டி பேரும் நாட்டி
வீரடா பாதையிலே தலைமையான
விதமான தலைவாசல் தன்னிற்றுக்குச்
சீரடா மண்டலத்திற் பற்களெல்லாம்
சிதறியே விழுந்துவிடுந் திண்ணந்தானே. (59)

(பொ-ரை.) நீ உக்கானைப் பிடித்துக்கொண்டுவந்து பகைவனுடைய தம்பலத்தைவாங்கி அதின் வாயிற்செலுத்தி கருவைச்சேர்த்து அவனுடைய பேரைநாட்டிதலைவாசலில்வைத்துவிட்டால் அவனுடைய பற்களெல்லாம் ஒரு மண்டலத்திற்குள் உதிர்ந்துபோகும். எ-று.

## கண் கெடுதல்.

திண்ணமா யின்னமொன்று சொல்லக்கேளு
திறமான நீரட்டை யரசன்பாலும்
வண்ணமாய்ச் சீலையிலே திரியதாக்கி
வஞ்சகமாய்ச் சத்துருவின் விளக்கிற்போடு

நண்ணயமாய்த் திரியெரிய எதிரி கண்ணும்
நல்மான திஷ்டியது மறைந்து போகும்
நிண்ணயமாய் நாலெட்டு அந்தி காலம்
நினைவாகத் தானெரிக்கக் குருடு மாமே. (60)

(போ-ரை.) இன்னமொன்று சொல்லுகிறேன் கேள்:—நீரிலிருக்கும் அட்டை, அரசன்பால் இவைகளைச் சீலையில் வைத்து திரியாக்கி சத்துருவின் விளக்கிற்போட முப்பத்திரண்டுநாள் அந்தத் திரியெரிந்தால் அவனுடைய கண்ணொளி குறைந்து குருடனாவான். (எ-று.)

## வியாதி யுண்டாகுதல்.

ஆமடா முஞ்சூரைப் பையை வாங்கி
அப்பனே எதிரிநீர் மல மிரண்டும்
வீமடா அதிற்செலுத்தி பஞ்சு வெட்டும்
விதமான நரம்பதினு லிருக்கிக் கட்டி
தாமடா ஓம் நமோ பகவதி காளி
தயவாக யோகிநீ சுவாகா வென்று
வாமடா லக்ஷமுரு வோதச் சித்தி
வளமாக புத்திகெட்டு வோத மாமே. (61)

(போ-ரை ) முஞ்சூரைப்பிடித்துப் பைபோலாக்கிஅதில்எதிரியினுடைய மலத்தையும் நீரையும் அதிலேயுட்டு பஞ்சுவெட்டும் நரம்பினால் நன்றாய்க்கட்டி நாற்பதுநாள்வரைக்கும் ஓம் நமோபகவதிகாளி ஓம் யோகிநீ சுவாஹா என்று லக்ஷமுரு ஜெபித்துவிட அவனுடைய புத்திகெட்டு வியாதியுண்டாகும். (எ-று)

ஓதமே யின்னமொன்று சொல்லக்கேளு
ஒளிவான கருநாபி பச்சை நாபி
வாதடா ஊர்தனிலே காத்து வாட்டம்
வளமாக வெருவடுக்கிப் புடத்தைப் போடு
நாதடா புகைபட்ட மனித ரெல்லாம்
நடுநடுங்கிக் காய்ச்சலால் வியாதி கொள்வார்
ஆடா அவ்வூரில் நீதான் சென்றே
அவிழ்தத்தைத் தான்கொடுத்துத் தீர்ப்பேனென்னே.(62)
தீர்ப்பதற்கு கீலிவேர் சிறுகீரை வேரும்
திறமாக மிளகிட்டுக் கியாழம் வைத்து

காா்ப்பதுதான் பஸ்பமென்று விபூதிப் போட்டுக்
கருவாகத் தான்கொடுக்க மூன்று வேளை
சேர்ப்பதடா மூவிரண்டு மொருவர் காணச்
செய்யாதே பாஷாண மாற்றென் பார்கள்
ஆர்ப்பாக சொன்னபணங் கையில் வாங்கு
அன்பாக யின்னமொன்று சொல்லக்கேளே. (63)

(போ-ரை.) இன்னொன்று சொல்லுகிறேன் கேள்:—கருநாபி,பச்சைநாபி இவைகளை ஊர்தனில் காற்றுவாட்டமாக எருவடுக்கி புடம்போடு, அப்பொழுது உண்டாகும் புகைபட்ட மனிதர்களெல்லாம் சுரத்தால் வருந்து வார்கள் அப்பொழுது நீ அவ்வூரிற்போய்மருந்துகொடுத்துச் சொஸ்தப்படுத்துகிறேன் என்று சொல்லி, அந்தச் சுரத்தை நீக்க அவிரிவேர், சிறுகிரைவேர், மிளகு இவைகளை கியாழம்வைத்து அதில் கொஞ்சம் விபூதியைப் பற்பம் போடுவதுபோல் போட்டு மூன்றுவேளைகொடுக்கத்தீரும், யாராவதுபார்த்தால்பாஷாணத்திற்கு முறிப்பென்று சொல்லுவார்கள், ஆகையால் உடனே பணத்தைவாங்கிக்கொள்வாய். (எ று.)

## இதுவுமது.

கேளப்பா கள்ளிச்சார் கார்த்திகையின் மூலங்
கெண்திமுடன் பாஷாணந் துருசு சேர்த்து
பாளடா நேர்வாளங் கருத்த நாபி
பண்பாக விவையெல்லா மிடித்துக் கொண்டு
வீளடா கலசத்தில் சீலையிலே கட்டி
விதமான கழுத்தளவு தண்ணீருக் குள்
ஆளடா தெரியாமல் கல்லைக் கட்டி
அடைவாக வுரைக்கிணத்தில் வைத்திடாயே. (64)

வைத்தவுட னீர்குடித்த பேர்க ளெல்லாம்
வாந்தியும் பேதியுமா மயங்கு வார்கள்
கத்தவுட னவ்வூரில் நீயே சென்று
கடினமாம் தேவதைக ளிருக்க வேண்டும்
ஒத்தவுட னிருத்தி வைப்போ முருள்ளோரே
உத்தமரே பொன் கொடுப்ப தின்னதென்று
நைத்தவுட னதை யெடுத் தெறிந்துபோடு
நலமான கிணற்று நீ ரிரைக்கச் சொல்லே. (65)

சொன்னபின்பு கணபதிக்கு வீடு தோறுஞ்
சொகுசாக நூறுகுடஞ் சலத்தை வாரு
நன்னயமாய் நீலிவே ரிடித்துக்கொண்டு
நலமாகக் கிணற்றிலறி யாமற் போடு
என்னபடி விபூதிதனை தியானித்தேதான்
எல்லார்க்கும் நீகொடுக்கத் தெளிந்து போகும்
அன்னபடி யூரெல்லாம் பொங்கலிட்டு
அடைவாகக் காய் வெட்டத் தீரு மென்னே. (66)

(போ-ரை.) கள்ளிச்சாறு, கார்த்திகைக்கிழங்கு, பாஷாணம், மயில் துத்தம், நேர்வாளம், கருநாபி இவைகளை யெல்லாம் இடித்துக் கொண்டு ஒருகலசத்தில் தண்ணீர்விட்டு அதில் சீலையில்முடிந்து டை கலசத்திற்போட்டு ஒரு சீலையால் வாய்ப்புரங்கட்டி கழுத்தளவு சலத் திற்குள் கல்கட்டி யாருக்குந்தெரியாமல் உரைகிணத்தில் வைப்பாய், அவ்விதம் செய்யப்பட்ட அந்த சலத்தைச் சாப்பிட்டவர்களெல்லாம் வாந்தியும் பேதியுமுண்டாய் வருந்துவார்கள் அப்பொழுது அங்கு நீயேபோய் ஏதோ கடினமான தேவதைகள் இவ்வூரில் வந்து அண்டி யிருக்குதென்றும் அதை யொழிக்க இவ்வளவு பணம் வேண்டுமென் றும் பேசிக்கொண்டு அந்த உரைகிணற்றிலிருக்கும் கலசத்தை எடுத் துப் போட்டுவிட்டு அந்த ஜலத்தை இரைத்து விடும்படி செய்யவே ணும் அந்த ஜலத்தை இரைத்துவிட ஓர் உபாயமாவது என்ன வெ னில் அந்த கிணத்திற்கு அருகாமையில் விநாயகரைக் கொண்டுவந்து வைத்து சில பூசைகள் போடுவதுபோல நடித்து இந்த விநாயகருக்கு வீடொன்றுக்கு நூறுகுடம்ஜலம் அபிஷேகம் செய்யவேண்டுமென்று அதுவும் ஒரே கிணற்று நீராக யிருக்கவேண்டுமென்று அந்தக் கிணற் றின் ஜலம் கொஞ்சம் வற்றும்படிசெய்து பிறகு நீலிவேரை யிடித்து யாவரு முணராதபடி கிணற்றில் போட்டு விபூதியையும் போட்டு எல் லார்க்கும் விபூதிகொடுக்க தெளிந்துபோகும் அப்போது ஊரெல்லாம் பொங்கலிட்டுத் தேங்காய் உடைத்தால் தீருமென்று சொல்லு. எ-று

## துரிசின் குணம், இதுவே மயில் துத்தம்.

புண்ணுற்றுங் காமியத்தின் புண்ணுற்றுங் கண்ணேயை
விண்ணேற்று முத்தோட வீறடக்குஞ்—சண்ணுகின்ற
வாந்தியொடு பேதிதரும் வாமநோய் சுரந்தணிக்கும்
காந்தி தருந் துரிசிகாண். 67)

(போ-ரை.) துரிசி, வாதாதி தோஷ விரணத்தையும், அவுமந்த குய்ய விரணத்தையும், திரிதோஷங்களையும்: சிலேஷ்மமுகபாகம்,வாத

சீத சுரம் இவைகளை நீக்கும் வமனம், (வாந்தி) விரோசனம், தேஜசு இவைகளை யுண்டாக்கும்.

## துரிசி சுத்தி.

துரிசை தயிரினால் அரைத்து அடையாகத்தட்டி ஒரு பானை ஓடு காயவைத்து அதில்போட்டு பிரட்டி எடுத்துக்கொள்ளவும். அல்லது துரிசை தயிரில் 1-ஜாமம் ஊரப்போட்டு எடுக்க சுத்தியாச்சு.

## துரிசி சுன்னம்.

தீருமே துரிசதுதான் வேண மட்டும்
திரமான ஒரு கட்டி வாங்கிவந்து
வீருமே கல்வத்திற் சுன்னக் கல்லை
விதமாகக் காற்கலச முள்ளே போட்டு
நீருமே கட்டி தனை மேலே வைத்து
நிச்சயமாய்க் காற்கலசங் கல்லைப்போட
சீருமே பாஷாண மிடிச்சத் தண்ணீர்
சிறப்பாகத் தான்றெளிப்பாய் சிறுகத் தானே. (68)

தானென்ற கலசமதி லோடு மூடி
தயவாக மண்சீலை வலுவாய்ச் செய்து
தேனென்ற ரெண்டுமுழக் குழியை வெட்டிச்
சிறப்பான வானைலத்தி கழுதை லத்தி
பானென்ற கொடிகள்ளி பயரு போலே
பண்பாகக் கொண்டுவந்து மூன்று நற்கே
கானென்ற குழியாதி கலந்து கொட்டி
கனிவாக யிருலத்திக் கலந்து வையே. (69)

வையப்பா கலசத்தையதின் மேலேநீ
வகையாக யிருலத்தி கலந்து கொண்டு
செய்யப்பா கள்ளியுடன் கலந்த லத்தி
சிலப்பாகக் குழிநிறையக் கொட்டிப் போடு
பையப்பா மண்போட்டு மூட்டு போடு
பண்பான மண்டலந்தான் கழிந்த பின்பு
கையப்பா வைத்ததனைத் திறந்து நீதான்
கருவாகக் காற்றில்லா விடத்தில் வைத்தே. (70)
வைத்தகட்டி தனையெடுத்து புது சுண்ணக்கல்
வளமாகப் பாஷாணச் சார்விட் டாட்டிச்

துரிசின் குணம், இதுவே மயில் துத்தம்.

செத்தபின் பதையெடுத்துத் திறமாய் மூடிச்
செம்மையாய் மண்சீலை வலுவாய்ச் செய்து
வைத்தபின்பு குக்குடத்திற் சுண்ண மாகும்
பண்பாக வதையெடுத்துப் பவழம் வாங்கி
நைந்தபின்பு பீங்கானில் வைத்து மைந்தா
நாயகனே காற்றுடா திடத்தில் வையே. 21

வைத்தபின் பெடுத்துப்பார் துருசு சுன்னம்
வகையாகப் பொருமியது சுண்ணும் பாகும்
செத்த பின்பு சரக்கெல்லாம் யிதனால் நீரும்
செயமாகு மிச்சுன்னம் ரசத்திற் போடு
நைந்தபின்பு யுமிநீரால் மத்தித்தே தான்
நலமாக ரவியில்வைக்க இறுகும் பாரு
உய்த்து நீ யுருக்கிடவே வெள்ளி யாகும்
உற்றமுறை தப்பாது கண்டு பாரே. 72

(போ-ரை.) மயில்துத்தத்தை வேண்டியவரைக்கும் ஒருகட்டியாக எடுத்து ஒருகலசத்தில் கல்சுண்ணும்பு கல்வாசிபோட்டுமத்தியில் துருசைவைத்து மேலும் கால்கலசம்சுண்ணும்புக்கல் போட்டு பாஷாண சலத்தைக்கொஞ்சமாகத்தெளித்து பிறகு அந்தக்கலசத்தின்மேல் ஒரு ஓடுமூடி சீலைமண்வலுவாகச்செய்து ஒரு இடத்தில் 2-முழம் ஆழமிருக்கப்பட்ட ஒரு குழியை வெட்டி அதில் ஆனைலத்தி குதிரைலத்தி, கொடிக்கள்ளி இவைகளை நன்றாய்ப் பொடியாக்கி மூன்றையும் ஒன்றாய்க்கலந்து அந்தக்குழியில் கொட்டி அதின்மேல் கலசத்தை வைத்துமேலேயும் அந்தலத்தி கலந்திருப்பதை போட்டு குழியை நிரப்பி மண்ணால் மூட்டுபோட்டு ஒருமண்டலம் அப்படியே வைத்திருந்து பிறகு அதை எடுத்துத் திறந்து காற்றில்லாத விடத்தில் வைக்கவும், அப்படி வைக்கப்பட்ட கட்டியையெடுத்து சுண்ணக்கல்லையும் பாஷாணத்தையும் பழச்சாறு விட்டரைத்து அதனால் கவசஞ்செய்து பிறகு சீலை மண் செய்து 10-எருவில் புடம் போட்டெடுத்தால் சுண்ணமாகும், அதையெடுத்து காற்றில்லாத விடத்தில் பீங்கானில் வைத்து ஒருநாள் கழிந்தபிறகு எடுத்துப்பார்த்தால் துருசி சுண்ணமானது சுண்ணும்பைப்போல நீற்றிருக்கும் இதனால் மற்றச் சரக்குகளெல்லாம் நீறும், இவ்விதம் ஜெயமடைந்த இந்தச் சுண்ணத்தை ரசத்தில்போட்டு உமிநீரால் அரைத்து பில்லை தட்டி வெயிலில் வைக்க ரசங்கட்டும், அதையுரு

6

க்கிப்பார்க்க வெள்ளியாகும், இந்த முறையானது தவறுதாகையா ல் செய்து பார் எ-று.

## சவ்வீரத்தின் குணம்.

குன்மமொடு குட்டங் கொடியவ னிலத்திரட்டு
துன்மாங்கிசப் பெருக்கஞ் சூலைநோய்-வன்மையுறு
காமியப்புண் ணுதியநோய் கண்டாற் சவ்வீரனெனுஞ்
சாமியினுமத்தையுச் சரி. 73

போ-ரை. சவ்வீரத்தினால் குன்மம், குறைநோய், மகாவாதங் கள் வளருகின்ற துர்மாமிசங்கள், கீல்பிடிப்பு அரிசோரோகம் இ வை நீங்கும். எ-று.

## சவ்வீரசுத்தி.

ஒரு இளநீரில் கற்பூரம் ஒண்ணேகால் விராகனிடை போட்டு கரைத்து ஒருசட்டியில் ஊற்றி அடுப்பின்மீதேற்றி ஷை வீரத்தை தொலாந்திரமாக கட்டி எறித்து எடுத்துகொள்ள வீரசுத்தியாச்சு.

## வெங்காரத்தின் குணம்.

சொறிபடை யெண்குன்ம நன்மை சோரிய ரசம்
பறிகிரணி கல்லூனம் பன்னோய்—நெறியைத்
தடங்கணங் கபங்கிருமி சர்ப்பவிடஞ் சந்நி
*யிடங்கணங்கலக்கிப்போமெண்*யிடங்கணம் வெங்காரம்

(போ-ரை.) வெங்காரத்தினால், தவளைச்சொறி, படை, அஷ்ட குன்மம், தினவு, இரத்தமூலம், ஒழுக்கு கிரகணி, *அம்ஸரி, பங் குவாதம், தந்தேநோய், நாளவழியைத் தடுக்கின்ற மூத்திரகிரிச்ச ரங்கள், கபாதிக்கம், புழு பாம்பு முதலிய விஷம், சந்நிபாதம் ஆகிய இவைகள் விலகும். எ-று.

## வெங்காரம் சுத்தி.

வெங்காரத்தைப் பொறித்துக்கொள்ள வேணுமானால் எலு மிச்சம்பழ ரசத்திலாவது, காடியிலாவது அரைத்து பில்லைதட்டி உலர்த்தி யெடுத்துக்கொண்டு உபயோகப்படுத்திக்கொள்ளவும்.

## ரசகற்பூரத்தின் குணம், இதுவே பூரம்.

இடைவாத சூலை யெரிசூலை குன்மம்
தொடைவாளை வாதமாஞ் சோணி-யிடையதோ
வொக்கும் ரசகர்ப்பூர மொன்றே யளவொடுநல்
லொக்கு வெல்லத் தேழுநா ளீ. 75

---

*அம்ஸரி-கல்லடைப்பு.

(போ-ரை.) சுத்திசெய்த ரசகர்ப்பூரத்தைப் பணிகளின் வன்மைக்கொப்ப நல்ல வெல்லத்தில் பிரமாணமாக வைத்துப்பத்தியத்தோடு ஏழுநாள் கொடுக்கச் சகலவாத வாதப்பிடிப்பு, பித்தசூலை, வயிற்றுநோய், சிலேஷ்மவுருஸ், தொடைவாழை, தம்பவாதம், வாதாதிக்க சோணிதவாதம் இவைபோம். எ-று.

## பூரசுத்தி.

பூரத்தை மிளகு, வெற்றிலைக் கியாழமிட்டு கிளிகட்டி அதில் மூன்றுநாள் ஊரவைத்து யெடுக்க சுத்தியாச்சு.

## வீரச்சுன்னம்.

பாரப்பா சாரமிட்டு வீரமோடு
பண்பாகக் காரமிட்டு பூரங்கூட்டுச்
சேரப்பா துரிசு சுண்ணஞ் செயநீர் தானுஞ்
சிறப்பாக சரக்குகளை யரைத்துப்போடு
வீரப்பா சரக்குகளுஞ் சுண்ணமாகும்
விதமான சரக்குகளுஞ் செந்தூரிக்குந்
தீரப்பா தனித்தனியே வேதையாகுந்
திரமான ஜெயநீரின் செய்கை தானே. 76

தானென்ற வீரத்தைக் கல்வத்திட்டுத்
தயவாக விலைகள்ளி யிலைச்சார் விட்டு
கானென்ற யரைத்தவுடன் முசுறு முட்டை
கனிவாகத் தான்பிழிந் தரைத்துப் போடு
கோனென்ற வில்லைதட்டி யுலரும் போது
கொடிதான சிற்றண்டக் கருவாம் மஞ்சள்
தேனென்ற கருத்தடவி காயவைத்துத்
திறமான கள்ளியுட சாம்பல் வாரே. 77

வாரடா வைத்தெரிக்கும் வகையைக் கேளு
வளமான நாழிகைதான் யிரண்டாம் பாரு
சீரடா கமலம்போ லெரிக்கச் சுண்ணஞ்
செயமாக வாறவிட் டெடுத்துக்கொண்டு
பாரடா ரசஞ்சேர்த்தே யுருக்க வெள்ளிப்
பண்பான சரக்கெல்லாம் பஸ்ப மாகுஞ்
சீரடா முப்பூவைச் சேர்த்துக் கொள்ளத்
திறமான நவலோகம் வேதையாமே. 78

(போ-ரை.) வீரம், காரம், சாரம், பூரம் இவைகளைக்கூட்டி துருசு சுண்ண ஜெயநீரா லரைத்துப் போட்டால் சரக்குகளெல்லாஞ்சுண்ணமாகும், இப்படியான சரக்குகளெல்லாம் செந்தூரஞ்செய்யலாகும், அந்த தனித்தனி சரக்குகளால் ரசவேதையாகும். இவ்வளவும் ஜெயநீரின் செய்கையே, ஆதலால் போதுமான அளவு வீரத்தைக் கல்வத்திட்டு அதை இலைக்கள்ளி யிலைச்சாற்றாலரைத்து பிறகு முசுறுமுட்டையை பிழிந்து அதனாலரைத்து பில்லைதட்டி அது உலரும்போது, கோழிமுட்டையின் மஞ்சள் கருவை அதில் தடவி காயவைத்து வல்லமையுள்ள கள்ளியைச் சாம்பல்செய்து, அந்தக் கள்ளிச் சாம்பலைக்கரைத்து அதில்வார்த்து இரண்டு நாழிகைவரைக்கும் கமலாக்கினியாக எரித்தால் சுண்ணமாகும், அதை யாரினவுடனே எடுத்துக்கொண்டு அத்துடன் ரசத்தைச்சேர்த்து யுருக்கினால் வெள்ளியாகும், இதனால் சரக்குகளெல்லாம் பஸ்பமாகும், அத்துடன் முப்பூவைசேர்த்துக்கொண்டால் நவலோகவேதையாகும்.

## வங்கச்சிந்தூரத்தின் குணம்.

வங்கச் சிந்தூரம் மதுமேகம் நீரிழிவோ
டங்கமுறுதாப மகற்றுங்காண்—பொங்கிவரு
மோது வுதிரத்தா லுருவுரண நோய்போக்குந்
தாதுவை யுண்டாக்குமது தான். 79

(போ-ரை.) வங்கச்சிந்தூரம் மதுநீர், அதிமூத்திரம், சுரம் இரத்த விருத்தியினாற்பிறந்த புண், இவைகளை ஒழிக்கும், சுக்கிலத்தை வளர்க்கும். எ-று.

## வங்க சுத்தி.

வங்கத்தை தேங்காயெண்ணெயிலாகிலும், இலுப்ப எண்ணெயிலாகிலும் நவாசாரத்தூள் தூவி அதில்ஏழுதரம் உருக்கி உருக்கிசாய்க்க சுத்தியாச்சுது. அல்லது எலுமிச்சம்பழ ரசம், மோர் புளித்த காடி கோமியம் இதுகளில் ஏழுதரம் உருக்கி சாய்க்க சுத்தியாகும் இப்படியே நாகத்தையும் சுத்திசெய்துக்கொள்ளலாம்.

## கருவங்க சுத்தி.

கருவங்கத்தை பிரண்டைவேரை அரைத்து வெள்ளாட்டுமூத்திரமும் நல்லெண்ணெயும் விட்டு கலக்கிக்கொண்டு அதில் பத்துதரம் உருக்கி சாய்க்கவும் சுத்தியாம்.

## வங்க வேட்டை

ஆமடா உருவியுப்பு மேனியுப்பு
அடைவான உன்வுமிநீர் தன்ளுலாட்டி
தாமடா கருவங்கக் கட்டிக்கப்பா
தயவாகக் கவசமிட்டு மண்சீலை செய்து
வாமடா குக்குடத்தில் வங்கவெட்டை
வளமாகத் தங்கமொன்று வங்கமொன்று
காமடா வுருக்கியதை பின்னும்பாரு
கருவாகச் செம்பொன்று வெள்ளிமூன்றே. 80

மூன்றுடனே தங்கமொன்று தகடுதட்டி
முன்குருவில் விராகனிடை யிதிலே சேர்த்து
ஏன்றநீ கொடுத்திடவே மாற்றேழாகும்
இதமாகச் செந்தூரஞ் செய்தாற் கேளு
நான்றதோர் நவலோக வேதையாகும்
நாலாறு மாற்றுரும் கண்டு பாரு
வான்றெழுஞ்சீர்ப் போகருட கடாக்ஷத்தாலே
வழுத்தினேன் புலிப்பாணி விளங்கத் தானே. 81

விளங்கவே சிப்பிபுட சுண்ணந் தன்னில்
விதமான வெண்காரம் வைத்தெரித்து
துளங்கவே யதையெடுத் துமிநீராலே
சுகமாகத் தானரைத்துக் காரீயத்திற்
புளங்கவே கவசமிட்டுச் சிப்பிசுண்ணம்
புகழுடனே கீழ்மேலும் வைத்து மூடி
அளங்கவே யோட்டில் வைத்துச் சீலைசெய்து
அடைவாகப் புடமிரண்டில் வெட்டையாமே. 82

ஆமப்பா நாழிகைதான் யிரண்டாம்பாரு
அடைவாக முன்வெட்டைப் படியே செய்நீ
வாமப்பா வங்கவெட்டை தங்கவெட்டை
வளமான லிங்கத்தின் கட்டுச் சேர்த்துத்
தாமப்பா ரசங்கெந்தி கூட்டியேதான்
தயவாகச் செந்தூரஞ் செய்துபாரு
நாமப்பா வென்னசொல்வோம் வேதைமார்க்கம்
நவலோக மெல்லாமும் தங்கமாமே. 83

(போ-ரை·) நாயுருவி உப்பு, குப்பைமேனி உப்பு இவைகளைகை பாமாக எடுத்து உமிநீரால் அரைத்து கருவங்கக் கட்டிக்குப்பூசி சீலைமண் செய்து (10) எருவில் புடம்போட வங்கம் வெட்டையாகும்அந்த வெட்டை யொரு எடை, தங்கம் ஒருஎடை சேர்த்து உருக்கி மறுபடியும் செம்பொன்று வெள்ளிமூன்றும், அவைகளுடன்தங்கம்ஒன்றுங் கூட்டி முன்குருவில் ஒரு விராகனெடை அதில் சேர்த்துஉருக்கு முகத்தில்கொடுக்கஏழு மாற்றாகும், இதைச்செந்தூரஞ்செய்தால் நவலோகங்களையும் வேதிக்கலாம் அப்படி வேதிக்கும் நவலோக வேதையானது போகருடைய கடாக்ஷத்தாலே 10-மாற்றுகாணும், இன்னும் சிப்பிச் சுண்ணத்தில் வெங்காரம் சேர்த்து எரித்து அதை எடுத்து உமிநீரில் அரைத்து காரீயத்திற்குக் கவசமிட்டுச் சிப்பிச் சுண்ணத்தைக் கீழுமேலும் வைத்து நடுவில் இதை வைத்து ஒரு ஓடுமூடி மண்சீலை செய்து இரண்டு புடம்போடக் காரீயம் வெட்டையாகும். இவ்விதம் செய்ய இரண்டு நாழிகை நேரமாகும்ஆகையால் முன்செய்த வெட்டையைப்போலவே செய்த வங்க வெட்டை, தங்கவெட்டை, லிங்ககட்டு இவைகளைச்சேர்த்து அதில் ரசம்,கந்தகம் இவைகளைச்சேர்த்து செந்தூரஞ்செய்துபார் இதனால் நவலோகமெல்லாம் தங்கமாம். எ-று.

## நவாசாரத்தின்குணம் இதுவேசாரம்.

குன்மங் குடற்சூலை கொல்லு மகோதரத்தை
வன்மையுறு கல்லடைப்பை மாற்றுங்காண்-சன்மக்
கவிச்சு மூத்தோடங் கனவாதம் நீக்கும்
நவாச்சார மாதே நவில். 84

(போ-ரை.) நவாச்சாரம், வயிற்றுவலி, குடலிற்குத்தல், பெருவயிறு, * அஸ்மரி, சருமத்திற் புலால்வாசம், திரிதோஷம், வாதரோய் இவை விலக்கும். எ-று.

## சாரக்கட்டு.

தங்கவே திருகுகள்ளிச் சாம்பல் வாங்கி
தயவாக யீரேழு பலந்தானப்பா
பங்கமிலாச் சிப்பிசுண்ண மீரேழாகும்
பாங்கான வெடியுப்பு மீரேழாகும்
அங்கமாய்ச் சாம்பலது கீழேயாகும்
அடவான சிப்பியது மேலதாகும்

சங்கமாயுப்பதுவு மதின்மேலாகும்
சார்வாக வடுக்கடுக்கா யதனைவையே. 85

வையப்பா சாரமது பலந்தான் ரெண்டு
வளமாக வுப்பிட்டு முன்போல் வைத்து
பையவே மண்சீலை யேழுஞ் செய்து
பாங்கான தீபமொரு ஜாமமப்பா
கையவே கமலமது சாம மொன்று
கருதரிய காடாக்கினி சாமம் ரெண்டு
உய்யவே யாரவிட்டெடுத்துப் பாரு
உத்தமனே தங்கம்போற் கட்டுந் தானே. 86

தானடா நாகமது விராகன் பத்து
தயவாக வுருகையிலே சாமம் ரெண்டு
வேனடா கொடுத்திடவே நாகங் கட்டும்
விதமாக செம்பிலே பத்துக் கொன்று
கோனடா வயததுவு மெட்ட தாகுங்
குணமான ரசங்கெந்தி சேர்த்து மைந்தா
மானடா செந்தூரஞ் செய்தா யானல்
மைந்தனே நவலோகம் வேதை யாமே. 87

(போ-ரை.) திருகுகள்ளிச் சாம்பல் பதினன்குபலம், சிப்பி சுண்ணம் பதினன்குபலம், வெடியுப்பு பதினன்குபலம் இவைகளின்சாம்பல் முதலியவைகளை முதல் சாம்பலைக் கீழாகவும், அதன்மேல் சிப்பியையும், அதன்மேல் உப்பையும் அடுக்கடுக்காக வைக்கவேண்டும் பிறகு நவாச்சாரம் இரண்டுபலம் எடுத்து உப்புசேர்த்து முன்போலவேவைத்துஏழு மண்சீலை செய்துஒருசாமம்வரைக்கும் தீபாக்கினியாகவும்,கமலாக்கினி ஒருசாமமும், காடாக்னி இரண்டுசாமமுமாக எரித்து ஆறவிட்டு எடுத்துப்பார்த்தால் தங்கத்தைபோல் உருகிக்கட்டும்நாகம் ஒரு பலத்தை உருக்கும்போது இரண்டுசாமம் வரைக்கும் முன்மருந்தைகொடுக்க நாகமானது கட்டும், அதை செம்பு பத்துக்குஒன்று கொடுக்க வயது எட்டாகும், அதில் ரசமும் கந்தமும் சேர்த்து செந்தூரஞ்செய்தால் நவலோகங்களும் வேதிக்கலாகும்

## துத்திநாகத்தின் குணம்.

மேகங் கிளர்பேதி வெட்டையழலைத் தணிக்கும்
வேகங் கிருணி விலக்குங்காண்-போகாப்

பரிய முளைப்புண்ணைப் பயித்தியத்தைப்போக்கும்
அரிய துத்தி நாகமது. 88

(போ-ரை.) துத்தி நாகம், விரணமேகம், அதிசாரம், வெள்ளை, உட்சூடு, சீதரத்தக்கழிச்சல், முளை விரணம், பித்தம் இதுகளைநீக்கும். இதுவே சிறு கண்ணுகத்தின் குணமாம். எ-று

## நாகசுத்தி.

நாகமாவது, சிறுகண்ணுகமாவது வெள்ளாட்டின் நெய்கொண்டுவந்து உருக்கிப் பழச்சாறு, சிறுநீர்கூட்டி சாரம் கல்சுண்ணமிட்டுகலக்கிவைத்துக்கொண்டு அதில் மேற்படி நாகங்களை பத்துதிரம் உருக்கி சாய்க்கசுத்தியாம்.

## சிறுகண்ணுகச் செந்தூரம்.

வேதையிலே யின்னமொரு போக்கைக் கேளு
வீரான சிறிய கண்ணுகமப்பா
பேதையிலே கருவங்க ரசமுங்கூடப்
பொங்கமுடன் கவுரியப்பா விந்த நாலும்
ஆகையிலே சமனிடையாக்கூட்டி நீயும்
அன்பாகப் பனங்கள்ளிற் சாமம் நாலு
தீதையிலே பொற்கையான் சாமம் நாலு
திறமையுடன் தானரைத்து வில்லை தட்டே. 89

தட்டியே யுலர்ந்தபின் போடு மூடி
தபவாகச் சீலைசெய்து குக்குடத்திற்போடு
கட்டியே யாறவிட் டெடுத்துப்பாரு
களங்கமிலாச் செந்தூரமென்ன சொல்வேன்
தொட்டிநீ செம்பதுவும் ஏழுங் கூட்டித்
தொழுதுவெள்ளி யதுவுந்தான் மூன்ற தாகுஞ்
சட்டமாய் நாடோறுங் கூடுமென்று
சார்வாகக் கொடுத்தவுன் வேதை யாமே. 90

(போ-ரை) சிறுகண்ணுகம், வங்கம், ரசம், கௌரி இந்த நான்கு சரக்குகளையும் சம எடையாகயெடுத்து பனங்கள்ளினுல் நான்கு சாமமும், கரிசிலாங்கண்ணிச் சாற்றினுல் நான்கு சாமமுமறைத்து வில்லைதட்டி அந்த பில்லையானது உலர்ந்த பின்பு ஒரு அகலில்வைத்து மேலோடு மூடி மண்சீலை செய்து பத்தெருவில் புடம்போடச் செந்தூரமாகும். அது ஒன்றும், செம்பு ஏழும், வெள்ளிமூன்றுஞ் சேர்க்க வேதையாகும். எ-று.

## தாளகத்தின் குணம்.

தாளகத்தின் பேருரைக்கத் தாளு கணுநோய் குட்டங்
நீளக் குளிர்காய்ச்ச நீர்க்கபங்க-ணுணங்கொள்
துட்டப் பரங்கிப்புண் சூழழுகண் மண்டைநோய்
கிட்டப்படுமோ கிளத்து. (91)

(பொ-ரை.) தாளகத்தினால், அதிஜிக்வாரோகம், தாளு, கணு நோய், குட்டரோகம், நடுக்சற்சுரம், க்ஷயகாசசுவாசம், துஷ்டவிரணம், ஜலஸ்ராவம், சிரஸ்தாபரோகம் ஆகிய இவைகள் விலகும்.

## தாளகசுத்தி.

தாளகத்தைச் சிறுதுண்டுகளாகசெய்து சிறு கலசத்திற்போட்டு மேலே மூடுகிற ஓட்டில் மூன்று துளைகள்செய்து கரி நெருப்பின்மீதுவைத்து விசுருகையில் முதல் கருப்புப் புகைவரும், பிறகு சிகப்புப் புகைவரும் அந்த சமயம்பார்த்து எடுத்துக்கொள்ளவும்.

## இதுவும் தாளக சுத்தி.

தாளகத்தைச்சுண்ணும்புகல்லுக்குள்வைத்துகமுதைமூத்திரம் விட்டு ஏழுதிரந்தாளித்தெடுத்து சுன்னநீர், கொள்ளுக்கியாழம், தயிர் *பூசினிக்காய்நீர், காடி, அகத்திக்கீரை விரைதயிலம் இவைகள்கூட்டி இரண்டுஜாமம் சுருக்குகொடுக்கவும், கரந்தை சாற்றில் இரண்டுஜாமம் சுருக்குகொடுத்தெடுத்து, சத்தி, சாட்டரணைவேர், குக்கில் இவைகளை முருங்கயிலை ரசத்தாலரைத்து கவசஞ்செய்து லகுபுடமிட மிகுந்த சுத்தியாம், பிறகு சகல அவிழ்தத்திற்கும் உபயோகப்படுத்தலாம்.

## தாளக பற்பம்.

ஆகுமே தாளகத்தைச் சுண்ணக் கல்லில்
அப்பனே யமுரிவிட்டுச் சுத்தி ஏழு
வாகுமே தும்பையிலைச் சாறுபடி யொன்று
வளமான சுருக்கிட்டு கட்டி யொன்றாய்
தாகுமே சாவல் ரத்த மிதக்க விட்டுத்
தயவாக ரவிதனிலே காயக் காய
நாகுமே ரத்தமெல்லாங் கட்டியிற்றுவட்டி
நலமாகக் காயவைத்தோடு மூடே. (92)

---

* பூசினிக்காய் நீர் என்பது, பூசினிப்பழத்தை மேலே கீரி (3) விராகனிடை இந்துப்புபோட்டு அடியில் எழுத்தாணியால் துவாரஞ்செய்து மேலே தூக்கிகட்டி அடியில் பீங்கான்வைத்தால் அதிலிருந்து நீர் இரங்கும் அந்தநீர்தான் பூசினிக்காய் நீர்.

மூடியே மண்சீலை வலுவாய்ச்செய்து
முழப்புடத்திற் பஸ்பமா யிருக்கும்பாரு
வாடியே க்ஷயமெட்டும் விஷபாகங்கள்
வளமான சோகையொடு பித்தபாண்டு
ஆடியே காய்ச்சலென்ற வகைகளெல்லாம்
அப்பனே எலிக்கடியும் பிரமை தீரும்
நாடியே போகருட கடாக்ஷத்தாலே
நலமாகப் புலிப்பாணி பாடினேனே. (93)

(பொ-ரை.) தாளகத்தைச் சுண்ணும்புக்கல்லில் அமுரிவிட்டு ஏழுமுறை சுத்திசெய்து, தும்பையிலைச்சாறுபடி ஒன்று அந்தத் தாளகத்திற்குச் சுறுக்குகொடுத்து அந்தக் கட்டிக்குச் சாவல்ரத்தம் மிதக்கவிட்டு வெயிலில்காயவைத்து ரத்தத்தையெல்லாம் கட்டியில் துவட்டிநன்றாய்க் காயவைத்து மேலோடுமூடி சீலைமண்ணை வலுவாகச்செய்து முழப்புடம்போட அது பஸ்பமாயிருக்கும், அதனால் எட்டுக்ஷயமும், விஷபாகங்கள், சோகை, பித்தபாண்டு, சுரங்கள், எலிக்கடி, மயக்கம் இவைகள் தீரும். (எ-று)

## சிலாரசத்தின் குணம்.

தலைவலி நீரேற்றந் தநுர்வாதஞ் சந்நி
குலை சூலையுந் தும்மற் குடிபோஞ்-சிலைநுதலே
மாசுடைய வஞ்சுநிறம் வாய்ந்திருப்ப தன்றிமணம்
வீசு *சிலாரசத்தால் விள். (94)

(பொ-ரை.) மலினமேகநிறமும் மணமுமுள்ள சிலாரசத்தால், சிரஸ்தாபம்,ஜலதோஷம், தநுர்வாதம், சந்நி, அதிதும்மற்பீனிசம் இவைகள் போம். (எ-று)

## சிலாசத்து சுத்தி.

சிலாசத்தை ஆவின் பாலில் தொலந்திரம் கட்டி யெரித்தெடுத்துக்கொள்ளவும், அல்லது பழரசத்திற்போட்டு கொதிக்கவிட்டு எடுத்து பிறகு எருக்கம்பாலில் மூன்றுநாழிகை ஊரியபின் கழுவி எடுத்துக்கொள்ளவும், அல்லது அல்லிப்பூ ரசத்தில் ஊரவைத்து எடுத்துக்கொள்ளவும்.

---

* சிலாரசமென்பது, சிலாசத்து, கற்பூர சிலாசத்து எனமருவியது.

## சிலாசத்து பற்பம்.

பாடியே நாயுருவி யிலையை யாட்டிப்
பண்பான சிலாசத்து கவசங் கட்டி
நாடியே சீலைசெய்து புடத்தைப்போடு
நாயகனே பற்பமா யிருக்கும் பாரு
ஆடியே நிச்சயமா யிந்த பற்பம்
அடைவாகப் பாளையுட கிழங்கு நீரில்
சாடியே வெடியுப்பு விராகனென்று
சார்வாகப் பற்பமென்று கொடுக்கப்போமே. (95)

போமப்பா செம்பாலை யரைத்து மைந்தா
பொங்கமுடன் வெடியுப்பை யதனி லிட்டு
ஆமப்பா வெள்வங்கம் வேணமட்டும்
அன்பாக உருக்கியொரு கட்டி வைநீ
தாமப்பா ஓட்டில்வைத் தெருவடுக்கித்
தயவாக கெஜபுடத்திற் பற்பமாகும்
வேமப்பா மேகமது இருபத் தொன்றும்
விதமாகப் பணவெடைதான் வெண்ணெ யாமே. (96)

(பொ-ரை) நாயுருவி யிலையையரைத்து சிலாசத்துக்குக் கவசஞ்செய்து மண்சீலைசுற்றி புடம்போடப் பற்பமாகும், அந்தப்பற்பத்தை பாளைக்கிழங்குனீரில் வெடியுப்பை ஒருவிராகனிடை நிறுத்துப்போட்டுச் செம்பாலையையரைத்து ஒருவிராகனிடை பற்பமும் வெடியுப்பையும் அதனிலிட்டு வெள்வங்கம் வேண்டியவரைக்கும் உருக்கி ஒருகட்டியை அதற்குள் பொதிந்துவைத்து அதைஓட்டில் வைத்து எருவடுக்கிக் கஜபுடத்திற் போடப் பற்பமாகும், இதை ஒரு பணவெடை வெண்ணெயில் தின்ன இருபத்தொரு மேகங்களும் நிவர்த்தியாகும்:—(எ-று.)

## லோகவசியம்.

ஆமையா றீம் ஐயுங் கிலியுமென்றே
அடைவாக ஸ்ரீயுடனே சவ்வுங் கூட்டித்
தாமையா இறீம் கிலீம் ஓமென்று சொல்லித்
தான்செபிக்க லக்ஷத்திற் சித்தியாகும்
வாமையா வறுமையெலா மகன்றுபோகும்
வளமான தேவதையு மன்னர் தாமும்
நாமையா லோகமெல்லாம் வசியமாகும்
நலமாகத் தொழில்களெல்லாஞ் சித்தி தானே. (97)

(பொ-ரை.) றீம், ஐயுங், கிலியும், ஸ்ரீம் சவ்வும், இறீம், கிலீம், ஓம் என்றுசொல்லி ஒருலக்ஷஉருசெபிக்க அம்மந்திரம் சித்தியாய் தரித்திரமெல்லாம்ஒழிந்துபோகும், இதனால்யாவரும் வசியமாவார்கள், சர்வகாரியங்களுஞ் சித்தியாகும்.—(எ-று.)

அஷ்டகர்மம்.

தானென்ற தலைமஞ்சக் கொடியு மாவுந்
தயவாகத் தான்பூசி யுலரப் போட்டு
ஊனென்ற முப்பூவும் ரவிமதியின் பீஜம்
உத்தமனே யுடன்கூட்டித் தயிலம் வாங்கி
ஆனென்ற அஷ்டகர்ம மெட்டெட் டுக்கும்
அடைவான தொழில் முறைக்கு மெல்லா மாகும்
நானென்ற போகருட கடாக்ஷத்தாலே
நலமாக புலிப்பாணி பாடினேனே. (98)

பாடினேன் சிவகிரியில் தண்டாயுத பாணி
பாருலகிற் பூசித்தோர் சொல்லக் கேளு
ஆடினேன் பிர்மாவு மீசனப்பா
அடைவான போகருட கிருபையாலே
நாடினேன் கலியுகத்தில் இருநூற் றைந்தில்
நாயகனே புலிப்பாணி பூசித்தேன் பார்
நீடினேன் பூசைமடந் தன்னில் வாழ்ந்து
நிலைபெற்றேன் போகருட வருள்பெற்றேனே. (99)

அருளாலே பிரமனுட வழியைத் தள்ளி
அடைவாக நாமிருந்தோங் கிரியில் வாழ்ந்து
தெருளாலே ஷட்கோணத் தாலயமுங் கட்டி
நெறிவிளங்க ஆண்டவனை நேசித்தேன் பார்
பொருளாலே வெகுகோடி சித்து செய்து
பூசைமடந் தனில்வந்து போக நாதர்
மருளாலே யாவரையு மயக்கி யாட்டி
மதிமயக்கஞ் செய்யுமென்றார் வேலென்றாரே. (100)

(பொ-ரை.) தலைமஞ்சக்கொடியும், மாவும் பூசி உலரவைத்து முப்பூ, ரவிபீஜம், மதிபீஜம் இவைகளைச்சேர்த்து இறீம், கிலீம், ஓம் என்றுசொல்லி லக்ஷம் உரு ஜெபிக்க சித்தியாகும் இந்த மந்திரம் அஷ்டகர்மம்சர்வதொழில்களெல்லாவற்றிற்கும்உபயோகமாகும் சிவகிரியில்தண்டாயுதபாணியானவரை இவ்வுலகிற்பூசித்தவர்களே

நான் சொல்வதைக் கேளுங்கள்:—பிரமா, ஈசன், போகர் இவர்களுடைய கிருபையினால் நான் இந்த ஆட்டங்களை யெல்லாம் ஆடினேன், கலியுகம் இருநூற்றைந்தாவது ஆண்டில் புலிப்பாணியான நான் பூசை செய்தேன், அப்பொழுதே பூசைமடத்தில் வாழ்ந்து உண்மை நிலையை யடைந்தேன், போகருட கிருபையையும் பெற்றேன், பிரமதேவனுடைய செய்கைகளை நீக்கிக்கொண்டுமலையில் வாழ்ந்துக்கொண்டிருந்தோம், ஆறுகோணத்தால்கோயில்கட்டி ஆண்டவனைத் தெரிசித்தோம், வெகுகோடிசித்திகளைச் செய்துயாவரையும் மயக்கச்செய்து போகநாதருடைய கிருபையால் ஆடினோம். (எ-று) (101)

## மூடமாக்குதல்.

வேலாமேல யின்னமொரு தொழிலைக் கேளு
விதமான கிராணமது தீண்டும்போது
காலான வெட்டிமரங் காப்புக் கட்டி
கருவாகத் தூபமிட்டு வேரை வாங்கி
ஆலான நாகமது விடும்போ தப்பா
அடைவாக வேறொன்று வாங்கி வைநீ
சேலான மற்றவே றுருப்போற் செய்து
செவ்வையா யுருத்தோறும் துவாரம் போடே. (102)

போடப்பா விடுவேரை முளைபோற் சீவிப்
பொங்கமுடன் பாவையுட முளையுங் கொண்டு
ஆடப்பா சாவலது வெள்ளை யாக
அடைவாக நீரருகே சென்று நின்று
சாடப்பா சாவலது மேட்டிற் கட்டிச்
சார்வாகத் தண்ணீரிற் கழுத்து மட்டும்
நாடப்பா ஆ காரமது ஜெபிப்பாய் லக்ஷம்
நலமாக முடிந்தவுடன் சாவல் சாமே. (103)

சாகுமே செபிக்குமட்டும் பாவை தன்னைச்
சார்பாகக் கையில்வைத்து செபத்தை செய்நீ
சேருமே செதுக்குமுளை கூறதாகச்
சிறமான வெதிரியுட கருவைக் கூட்டி
ஆகுமேதுவாரமெல்லா முளையே நாட்ட
அடைவாகக் குற்றலாய் மூடமாய்ப் போவான்
நாகுமே சத்துருவும் வணங்கிவந்தால்
நாயகனே முளைபிடுங்கி நீரா லாட்டே. (104)

(பொ-ரை.) கிராணம் வுண்டான சமயத்தில் எட்டிமரத்திற்கு காப்புகட்டி தூபதீபங்கொடுத்து அதின் வேரை எடுத்து கிராணம்விடும்போது ஒரு வேரை எடுத்துவைத்து மற்ற வேரைஉருவம்போலசெய்து உருக்கோரும் சிறிய துவாரங்கள்போட்டு மற்றவேரை மூளைபோற்சீவி மேற்படி பாவையையும் மூளையையும் ஒரு வெள்ளைச்சாவலையும் எடுத்துக்கொண்டு தண்ணீருக்குசமீபஞ்சென்று மேட்டில் வெள்ளைச்சாவலை கட்டிவிட்டு தண்ணீரிலிரங்கிஸ்தானம்செய்து கழுத்து மட்டும் தண்ணீரில் நின்று ஆ வென்னும் அக்ஷரத்தை ஒரு லக்ஷம்செபித்தால்மேட்டிலிருக்கும்சாவல்சாகும், செபிக்கும்வரையில் மேற்படி பாவையை கையில்வைத்துக்கொண்டு செபஞ்செய்யவேண்டும், பிறகு முன்னர் செதுக்கிவைத்த மூளையைக்கூருயாக்கி எதிரியின் கடவுளைச்சேர்த்து துவாரத்திலெல்லாம் அந்த மூளையைநாட்ட முடமாய்ப்போவான், பிறகு பகைவனுனவன் வணங்கிவந்தால் மூளைகளைப்பிடுங்கிவிட்டு நீரினுல் கழுவி சுத்தஞ்செய்துவிட்டால் சுகமாய்விடும். (எ-று.)

## சூடன் சுண்ணம்.

ஆட்டடா சிப்பியுட சுண்ணந் தன்னில்
அடைவாக சூடனொரு கட்டி வைத்து
நாட்டடா மேனுமிந்த சுண்ணம் போடு
நலமாக சட்டிவாய் சீலைசெய்து
கூட்டடா கமலமது நாலுசாமம்
குணமாக வெரித்தவுடன் சுண்ணமாகும்
வாட்டடா யிந்த சுண்ணஞ் சேற்றிற் போட
வளமான சுத்தஜல மதின்மே லாமே. (105)

(பொ-ரை.) சிப்பிச் சுண்ணத்தில் கர்பூரம் ஒரு கட்டிவைத்து அதற்கு மேலும் இச்சுண்ணத்தைப்போட்டுசட்டிமூடிசீலைசெய்துகமலாக்கினியாக நாலு சாமமும் எரித்தவுடன் சுண்ணமாகும் இந்தச் சுண்ணத்தைச்சேற்றில்போட சுத்த சலமாகும். (எ-று.)

## கெந்தக நீர்.

ஆகுமே கெந்தகந்தான் பலந்தானைந்து
அடைவான குழியம்மி தன்னிற் போட்டு
தாகுமே எருக்கிலையின் பழுப்பின்சாறு
தயவாகத் தான்பிழிந்து ஜாமம் நாலு

வாகுமே வற்றுமட்டு மரைத்து மைந்தா
வளமான வம்மியிலில் தானே வைத்து
நாகுமே யுதயத்திற் பார்க்கும் போது
நலமாகச் சலமதனுள் ளிருக்கும் பாரே (106)

பாரப்பா ஜலந்தன்னைப் பதனம் பண்ணு
பக்குவமா யிம்முறையைப் பார்க்கும்போது
வீரப்பா ராக்காலம் வைத்துப் பார்க்க
விதமான ஜலமதிலே யிருக்கும் பாரு
சீரப்பா வரைத்தரைத்து ஜலத்தை வாங்கி
சிவசிவா குப்பியிலே யடைத்துக் கொண்டு
சாரப்பா லிங்கத்திற் சுருக்கு போட
சார்வாகக் கட்டியது வலுத்துப் போமே. (107)

போமேநீ யரைத்தகெந்தி தனைவழித்துப்
பொங்கமுடன் பீங்கானில் ரவியில் வைக்கத்
தீமேநீ வெயிற்பட்டுத் தயிலமுண்டாந்
திரமாகச் சுருக்கிடவே சரக்கெல்லாங் கட்டும்
தாமேநீ ரசத்துக்கு தாக்கில் மைந்தா
தயவுடனே சமமாக ரசமுங்கட்டும்
நாமேநீ போகருட கடாக்ஷத்தாலே
நலமாகப் புலிப்பாணி பாடினேனே. (108)

பாடினேன் ஜாலமது தொண்ணூற்றுறு
பண்பாக வைத்தியந்தான் ஐந்நூறும்
ஆடினேன் ஜோதிடந்தான் முந்நூறும்
அடைவாக வாடையதின் கூடச்சொன்னேன்
கூடினேன் ஷண்முகத்தின் பூசைமார்க்கம்
குணமாக முப்பதிலே கூறினேன் பார்
நாடினேன் மதனநூல் கிருபையாலே
நலமான நூற்றுடைம் பதுவுமாச்சே (109)

ஆச்சப்பா பலதிரட்டு நூறுமாக
அடைவான சிமிழ்வித்தை யிருபத்தஞ்சு
வீச்சப்பா ஜாலவித்தை யிருநூற்றுள்ளே
விரும்பினுற் கண்ணுடி முகமுமாகும்
பேச்சப்பா சாஸ்திரத்தைப் பேணிப்பாரு
பேதமில்லை பேதமில்லை நூல்கள்யாவும்

வாச்சப்பா போகருட கடாக்ஷத்தாலே
வளமாகப் புலிப்பாணி விளம்பினேனே. (110)

(பொ-ரை.) கெந்தகம் 5-பலம் கல்வத்திலிட்டு எருக்கம் பழுப்பு யிலைச்சாற்றால் நான்கு ஜாமமரைத்துப் பனியில்வைத்துகாலையில் பார்த்தால் சலமாயிருக்கும், அந்த ஜலத்தை எடுத்துவைத்துக்கொண்டுமறுபடியும் மேற்சொல்லியபடி பழுப்புச்சாற்றால் அரைத்து பனியில்வைத்து காலையில் பார்த்தால் சலமாயிருக்கும் இந்தபடி மூன்றுநாள் யெடுத்து சிமிளில் அடைத்து வைத்துக்கொண்டு அந்தச் சலத்தைலிங்கத்திற்குச் சுருக்குகொடுக்கலிங்கம் கட்டி வலிவாகும் அப்படியரைத்த கெந்தகத்தைப் பீங்கானிலிட்டு வெய்யிலில் வைக்கத் தயிலமிறங்கும், அந்தத்தயிலத்தால் சுருக்குகொடுக்க எல்லாச்சரக்குகளும் கட்டும் இதனால் ரசமுங்கட்டும் ஆதலால் ஜாலம்தொண்ணூற்றாறும்,வைத்தியம்ஐந்நூறும்,சோதிடம் முந்நூறும் வாடைவித்தை அவைகளோடுங் கூடச் சொன்னேன், முருகர் பூசைவிதிமுப்பதில் சொன்னேன், மதனநூல்நூற்றைம்பதும் பலதிரட்டு நூறு, சிமிள் வித்தை இருபத்தைந்து ஜாலவித்தை இருநூறு இவைகளை கண்ணாடிபோல் தோன்றும்படிச்சொன்னேன்,இந்தச் சாஸ்திரங்களை யெல்லாம்போகருடைய கடாக்ஷத்தால் சொன்னேன். (எ-று)

## வாலைரசம்.

விளம்பினேன் ரசம்வாங்கி குகையில் வாரு
விதமான குகையதுவும் பறங்கிப் பூப்போற்
தளம்பினேன் சாணத்தைவைத்து மூடில்
தானுமே ரசமேறுஞ் சாணிக்குள்ளே
குளம்பியே சாணத்தை சலத்திற் போட்டுக்
குணமாகக் கரைத்தெடுக்க ரசமுமாகுங்
கிளம்பியே வாலைரசம்போலே யாகுங்
கிருமையுள்ள பற்பமுத லனைத்துமாமே. (111)

ஆமப்பா சாஸ்திரத்தை வெளி விடாதே
அவையடக்கம் வெகுபதனம் ஐயா வையா
வாமப்பா கர்மிகட்குக் காட்டொண்ணாது
வஞ்சகர்க்கும் பொல்லார்க்குஞ் சொல்லொண்ணாது
தாமப்பா தந்தைதாய் குருக்க ளான்றோர்
தயவாக மாதரோடு சிசுக்க ளென்னும்
நாமப்பா இவர்களையே கொலைகள் செய்தோர்
நாசமாய் நரகத்தி லழுந்து வாரே. (112)

அழுந்தியே சாஸ்திரத்தை நிஜமென் றெண்ணி
அடைவான பெரியோரை வணங்கிக் காரு
நழுந்தியே பொய்யொன்றுஞ் சொல்லொணுது
நரகினுக்கே யாளாகா திருப்பா யாகிற்
கொழுந்துபோல் உள்ளொளியை நோக்கிப் பாரு
கோபமொன்று மாகாது குணமே வேணும்
செழுந்தருவாய் போகருட கடாக்ஷத் தாலே
சிறந்த புலிப்பாணி பலதிரட்டு முற்றே. (111)

(பொ-ரை.) ரசத்தை ஒரு மூசையிலிட்டு சாணம்வைத்து மூடில் ரசமானது சாணிக்குள் ஏறும், அந்தச்சாணத்தை சலத்திற் போட்டுக் கரைத்தெடுக்க ரசம் வெளிப்பட்டு வாலை ரசம்போலாகும், இதுபற்பம் முதலியவற்றிற்காகும், ஆகையால் இந்தச் சாஸ்திரத்தை வெளியில்விடாதே வெகு பதனமாயிருக்கவேண்டும், கர்மிகளுக்கு காட்டக்கூடாது, வஞ்சகர்க்கும், கெட்டவர்களுக்கும் சொல்லக்கூடாது, பஞ்சமாபாதகஞ் செய்தோர் முதலியவர்களுக்கும் கொடுக்கக்கூடாது, சாஸ்திரம் உண்மையாமென்று எண்ணி பெரியோர்களை வணங்கிக் கார்த்துக்கொண் டிருக்கவேண்டும், பொய்யொன்றுஞ் சொல்லாமலிருக்கவேண்டும், உள்ளொளியை நோக்கிப்பார், கோபம்வேண்டாம், குணத்தைக் கைப்பற்றும் போகருடைய கிருபையினுல் புலிப்பாணிபாடினேன்—(எ-று.)

புலிப்பாணி பலதிரட்டுமுற்றிற்று.

உ

சிவமயம்.

புலிப்பாணிமுனிவர்

திருவாய் மலர்ந்தருளிய

# ஜாலத்திரட்டு 200

காப்பு - பாயிரம்.

சத்தியே தயாபரியே ஞான நூலில்
சாம்பவியே மனேன்மணியே கபாலி சூலி
முத்தியே வேதாந்த பரையே யம்பாள்
முக்குணமே முச்சுடரே மாயா வித்தி

வெற்றியே மூவருக்கு மருளாய் நின்ற
 வேணியே சாமளையே பொன்னே மின்னே
சித்தியே ஜாலமிரு நூறும் பாடச்
 சின்மயமாங் கணபதிதாள் காப்பாம் பாரே. (1)

(பொ-ரை.) சத்தியே! தயாபரியே: ஞானநூற்களிற் சொல்ல பட்ட சாம்பவியே: மனோன்மணியே: கபாலியே: சூலியே முத்தி கொடுக்கப்பட்ட வேதாந்த பரையேஃ அம்பாளாகிய திரிகுண வஸ்துவே: முச்சுடரே: மாயாவிதியே: வெற்றியே: மூவருக்கும் அருளாய் நின்றவேணியே: சாமளையே: பொன்னே: மினனே: சித்தியாகும்படி இருநூறு பாடலைக்கொண்ட இந்தஜாலத்தைப்பாட ஞானமயமான கணபதியின் திருவடி காப்பாம்—(எ-று.)

பாரப்பா சாலமொடு சல்லி யொட்டியம்
 பரங்கான தொட்டியந் தெட்டான சித்து
சாரப்பா நொடியானு மொடியான் வித்தை
 சார்வான கிரிகருணை யெட்டாரந் தான்
காரப்பா சித்துலக்ஷங் கலகவித்தை
 கருவான கக்கிஷமும் பஞ்சபக்ஷி
வாரப்பா சீனவித்தை மாந்தருக்கும்
 வளமான படுபக்ஷி கைவல்யமாமே. (2)

(பொ-ரை.) ஜாலமென்றால், சல்லியம், ஒட்டியம், தொட்டியம், தொட்டவுடன் நசித்துபோகும் ஜித்து, நொடியான், ஒடியான், கிரிகருணை, எட்டாரம், லக்ஷம்சித்து. கலகவித்தை, கக்கிஷம் பஞ்சபக்ஷி சீனவித்தை, படுபக்ஷி இவைகளெல்லாஞ் சொல்லுகிறேன். (எ-று.)

ஆமப்பா பேதர்வண்ணன் கேசரியதீதம்
 அடைவான அஷ்டகர்ம விநோத ஆரூடந்
தாமப்பா கண்டனம் பேதனமுஞ் செப்பு
 தயவான எக்ஷணியுந் தர்க்க சாஸ்திரம்
போமப்பா பக்ஷணி தக்ஷணியுங் கூடப்
 புகழ்வாதஞ் சோதிடம் காவியத்தினோடு
நாமப்பா வைத்தியத்தோ டிலக்கணந்தான்
 நல்லசூடாமணியு மின்னங் கேளே. (3)

(பொ-ரை.) வண்ணானுடையவெள்ளாய் வேகாதசாலம், கழுதை அடியெடுத்து வைய்யாதசாலம், அஷ்டகர்மம், விநோதமாகிய

ஆரூடம், துண்டு துண்டாகவெட்டும் சாலம், செப்புடுவித்தை, எக்ஷணி, தர்க்கசாஸ்திரம், பக்ஷணி, வாதம்,சோதிடம்,காவியம்' வைத்தியம், இலக்கணம், சூடாமணி இவைகளும்-(எ-று.)

கேளடா சித்தராரூடங் கன்னம்
  கெணிதமாய்ச் சிமிழ்வித்தை கம்பி சூஸ்திரஞ்
சூளடா சூனியமுந் திரவு கோலுஞ்
  சுகமான மந்திரமு நடுக்குச் சல்லியம்
வாளடா மதனநூற் சாஸ்திரந்தான்
  வளமான பெருநூற் சல்லியம தாரும்
தாளடா விருப்பென்ற கடலையப்பா
  தயவாக மலைநிகண்டு சொல்லக்க ாணே. (4)

(பொ-ரை.) சித்தர் ஆரூடம், கன்னம், சிமிள்வித்தை, கம்பி சூஸ்திரம், சூனியம், திறவுகோல்தந்திரம், நடுக்கு சல்லியம், மதனநூல், பெருநூற்சல்லியம், இருப்புக்கடலை, மலைநிகண்டு இவைகளும். (எ-று.)

காணவே சித்தசுத்தி யஞ்சல் மந்திரங்
  கருவான கூட்டுடைய கருத்தானப்பா
மாணவே சலமாட்ட நிகண்டு பாவை
  மலைவளம் பூருவமாய் கண்டத்தோடு
ஊணவே கலைக்கியானம் ரேகைவித்தை
  யுத்தமனே யாகமங்கள் விசுவாமித்திரம்
தோணவே யின்னம் வெகு நூள்களுண்டு
  தொழிலான போகருடவருள்தான் காணே. (5)

(பொ-ரை.) சித்த சுத்தி, அஞ்சல் மந்திரம், கருக்கூட்டு, சலமாட்டநிகண்டு, மலைவளம்,பூர்வகண்டம், கலைக்கியானம், ரேகைவித்தை, ஆகமங்கள், விசுவாமித்திரம், இவைகளும் இன்னும் அனேகநூல்களுமுண்டு, இவைகளெல்லாம் போகருடைய கடாக்ஷத்தினுல் சொன்னதாம். (எ-று.)

காணப்பா விந்நூலி லொன்றுனுங்
  கனிவாக சித்திசெய்வோனவனே நாதன்
ஊணப்பா பரதவித்து பார்த்துபார்த்தே
  யுத்தமனே சித்திசெய்ய விதியில்லாதார்
நாணப்பா சாஸ்திரத்தைப் பொய்யென்பார்கள்
  நலமாக விதியிருந்தால் பலிக்கும் பாரு

ஆணப்பா ஜகஜ்ஜாலக் கூத்து கூத்து
ஆரியப்போகிரு ரப்பாகேளே. (6)

(பொ-ரை.) இந்நூல் வித்தைகளில் ஒன்றையாவது சித்திசெய்பவனே தலைவன், அப்படி சித்திசெய்ய வழியில்லாதவர்கள் சாஸ்திரத்தைப் பொய்யென்று சொல்லுவார்கள், விதியிருந்தால் பலிக்கும், இல்லையாளுல்பலிக்காது,இவைகளெல்லாம் ஜெகஜ்ஜாலக் கூத்தாகும், இவைகளை யார் உணரப்போகிருர்கள். (எ-று.)

கேளப்பா ஞானமொடு பலதிரட்டு வாடை
கெணிதமென்ற சோதிடமும் வயித்தியமுங் கூட
வாளப்பா சிதம்பரத்தின் பூசையோடு
வளமான தேவியுட பூசையப்பா
சூளப்பா ஷண்முகத்தின் பூசைமார்க்கஞ்
சுகமான சிமிழ்வித்தை கொக்கோகந்தான்
வீளப்பா போகாது சாலம் சாலம்
வெகுசுருக்கு இருநூருந் தெளிந்துபாரே. (7)

(பொ-ரை.) ஞானம், பலதிரட்டு, வாடை,கெணிதசோதிடம் வயித்தியம், சிதம்பரபூசை, தேவிபூசை, ஷண்முகத்தின்பூசை, சிமிள்வித்தை, கொக்கோகம் இவைகள் மகாஜாலங்களாகையால் மிகவும் சுறுக்கானவைகளேயாம், இந்தஇருநூறையும் ஆராய்ந்து பார். (எ-று.)

பாரடா யெந்நூல்தான் கோர்வையாகப்
பார்த்தவர்க்குப் பலனுண்டு சித்தியாகும்
வீரடா பலதிரட்டு ஐங்கோலந் தான்
விளம்பினேந் தயிலத்தை யெடுத்துக்கொண்டு
சேரடா தொழில்முறைக் கெல்லாஞ் சேரு
செயமாகும் வித்தையெல்லா மென்னசொல்வேன்
கூரடா கண்கட்டு வித்தை யொன்று
கூறுகிறே னன்றாகக் கேளு கேளே, (8)

(பொ-ரை.) என்னுடையநூலைக் கோர்வையாகப் பார்ப்பவர்கட்குபிரயோஜனமுண்டு, சித்தியாகும் பலதிரட்டு ஐங்கோலத்தால்சொன்ன தயிலத்தை எடுத்துக்கொண்டு எல்லா வித்தையையும் சித்தியடையலாம், இனி கண்கட்டு வித்தையைச் சொல்லுகிறேன்—(எ-று.)

பாயிரம் முற்றிற்று.

---



# கண்கட்டு வித்தை

—(❋)—

கேளேநீ யூர்க்குருவி பிடித்து வந்து
கெணிதமா யபானத்தைத் தைத்துபின்னே
சூளேநீ கால் கழுஞ்சி சூதம்வாரு
சுகமாகக் கால்கழுஞ்சி வெள்ளைபோடு
வரளேநீ வாயைத்தான் தைத்துப்போட்டு
வளமான சிறுபானைக்குள்ளே போடு
பாளேநீ போகாமற் படிதான் கள்ளு
பாங்காகத் தான்வார்த்திட் டெரித்திடாயே (9)

எரிப்பாயே பொருமரத்து விறகுகொண்டு
எட்டொன்றாய் குறுக்கியே பதத்தைப் பார்த்துத்
தெரிப்பாயே அஸ்திமுதல் ரோமந்தள்ளித்
தெளிவாகத் தானெடுத்து கல்வத்திலிட்டுச்
செரிப்பாயே பேய்க்கருப்பஞ் சாற்றைவிட்டுச்
சேர்த்தரைப்பாய் மைபோலே யாகுமட்டும்
விரிப்பாயே துணிமேலே பரப்பி மைந்தா
விதமாகக் காயவிட்டுத் திரியாய்ச்சுற்றே, (10)

சுற்றப்பா ஐங்கோலத் தயிலம்வாரு
சுருக்காகச் சிரசோட்டில் மையைவாங்கி
சிற்றப்பா தயிலத்திலிழைத்து நன்றாய்
சிமிழில்வைத்து ஜாலக்காள் பூசைசெய்து
அற்றப்பா மைமெடுத்து வித்தையாட
அடைவாகச் சொல்லுகிறேனன்றாய்க் கேளு
முற்றப்பா பச்சைவைக்கோல் தன்னிற் றேய்த்து
முன்போடப் பாம்பாகுங் கண்டு பாரே. (11)

பாரடா புளியிலைக்குக் குளவியாகும்
பண்பான வேப்பிலைக்குத் தேளே யாகுஞ்
சீரடா நட்டுவக் காலி யாகும்
சிறப்பான பலகுருவி சிரசிற் பூசிற்
கூரடா அந்தந்தப் பக்ஷி யாகுங்
குணமாக ஓட்டிவிட விராக ளாகும்
வீரடா மண்கிள்ளிப் பூசினக் கால்
விதமான கெந்தப்பொடி வாசந்தானே (12)

தானென்ற அம்மியிலே பூசினாக்கால்
தயவாக அம்மியது நடக்கும் பாரு
ஊனென்ற கழற்சிக்காய் வேண மட்டும்
உத்தமனே பூசியதை கீழே போடு
கோனென்ற கழற்சிக்காய் மோதிக்கொள்ளுங்
கொற்றவனே சிறு *சிலைக்கு மிந்த பாகங்
தேனென்ற போகருட கடாக்ஷத் தாலே
தெளிவாகப் புலிப்பாணி பாடினேனே. (13)

(பொ-ரை.) ஊர்க்குருவியைப் பிடித்துக்கொண்டுவந்து அதன்அபான வாயைத் தைத்துவிட்டு அதில் கால் கழஞ்சு (10-குன்றியிடை) இரசத்தை கால் கழஞ்சு சங்கு பாஷாணத்தோடு கலந்துவிட்டு அதின் வாயில் போட்டு வாயைத் தைத்துவிட்டு ஒரு சிறியபானைக்குள் போட்டு அதில் ஒருபடி கள்ளுவார்த்து மேலே ஓடு மூடி, ஒரு ஜாதியான ஒரேமரத்து விறகினால் எரித்து எட்டுக் கொன்றாக சுண்டும்படி காய்ச்சி பிறகு பதத்தைப் பார்த்து எடுத்து அஸ்தி, உரோமம் இவைகளை நீக்கி எடுத்துக் கல்வத்திலிட்டுப் பேய்க்கரும்புச்சாறுவிட்டு மைபோலாகும் வரைக்கும் அரைத்து ஒருதுணியின் மேல் பரப்பிக்காயவைத்து திரியாக்கிஇலங்கோலத் தயிலம் வாங்கித் திரியில் வார்த்து தலையோட்டில் வைத்து தீபமேற்றி மையைவாங்கி சிமிளில் வைத்து ஜாலக்காள் பூசைசெய்து அந்தமையை எடுத்து பச்சை வைக்கோலில் தேய்த்து முன்னே போடப் பாம்பாகும், கையில் மையைப் பூசிக்கொண்டுபுளியிலையை யுருவிப்போட குளவியாகும், வேப்பிலைக்கு தேளும், நட்டுவக்காலி (நண்டுதொறக்கா) யாகும், பலகுருவிகளின் ரக்கையிற் பூசினால் நீ கோரப்பட்ட பக்ஷிகளாகும், ஒட்டிலிட விராகனும் மண்ணைக்கிள்ளிப் பூசினால் கந்தபொடிவாசனையுமாகும், அம்மியில் பூசினால் அம்மி நடக்கும், கச்சக்காய்கள் வேண்டியவரைக்கும் கொண்டுவந்து அதுகளுக்குப் பூசி அதைக்கீழேபோட்டால் அப்பொழுது அந்தக் கச்சக்காய்கள் ஒன்றோடொன்று மோதிக்கொள்ளும், * சின்ன கூழாங்கல்லுகளுக்கும்இந்தப்பாகம் ஆகும்.

ஜாலக்காள் பூசை.

பாடினேன் ஜாலக்காள் பூசை மார்க்கம்
பண்பான மஞ்சளின் கிழங்கு பாவை
சூடியே பெண்போல ரூபஞ் செய்து
சுகமாகக் கொடிமூல மேலே சுற்றி

ஆடியே பூசையப்பா சத்திபூசை
அடைவாகச் செய்தபின் தியான மோது
தேடியே ஜாகினி டாகினி ஜாலக்காள்
தேவிநீ ரு ரு ரு வென்றே யோதே (14)

ஓதவே மந்திரந்தான் லக்ஷமோது
உன்னிடத்தில் விளையாடி யிருப்பாள் பாரு
வாதமே யிவளுடைய ஜாலம் ஜாலம்
வையகத்தோர் மதிமயங்கி யிருப்பா ரப்பா
சூதுதான் சொல்லவில்லை ஜாலவித்தை
சொன்னபடி தானுடும் கண்டுபாரு
நாதனார் போகருட கடாக்ஷத்தாலே
நலமாகப் புலிப்பாணி பாடினேனே. (15)

(பொ-ரை.) ஜாலங்கள் பூசையாவது மஞ்சட் கிழங்கைப் பாவையாகப் பெண்போல் ரூபஞ்செய்து சித்திரமூலம் கொடியை மேலேபோட்டு சுத்தி சத்திபூசைசெய்தபிறகு தியானமாகஜாகினி டாகினி, ஜாலக்காள் தேவி நீ ரர, ரர, ரர என்று ஓதவும், இவ்விதமாகலக்ஷம்உரு ஜெபித்தால் அவள் உன்னுடன் விளையாடிக்கொண்டிருப்பாள், இந்த ஜாலத்தால் உலகத்தார் மயங்கி யிருப்பார்கள், நான் சூதுசொல்லவில்லை, சொன்னபடியே இது ஆகும். எ-று

## பச்சைப்பாம்பு வித்தை.

பாடினே னின்னமொன்று சொல்லக் கேளு
பண்பான பச்சையென்ற பாம்பைக் கொன்று
ஆடியே யதின்வாயிற் கொட்டைமுத்து
அப்பனே பூநூலின் பருத்திக் கொட்டை
கூடியே யடுக்கடுக்காய் செலுத்திப் போடு
குணமாக மண்ணிலிட்டு நீரை வாரு
மூடியே வித்தெடுத் திந்தப் பாகம்
மூன்றுதிரம் போட்டுநீ யெடுத்துக் கொள்ளே (16)

கொள்ளப்பா மூன்றுதிரங் கயற்சி முத்தின்
குணமான யெண்ணெயதை வடித்துக்கொண்டு
தெள்ளப்பா மூன்றுதிரம் வெடித்த பஞ்சு
தெளிவாகத் தானெடுத்துத் திரியாய்ச் செய்து

தள்ளப்பா திரியெடுத்து விளக்கி லேற்றித்
    தணிவாக வைங்கோலத் தயிலஞ் சற்றே
அள்ளப்பா விளக்குதனி லிந்த வெண்ணே
    அடைவாகத் தான்வார்த்து தீபமேற்றே. (17)

ஏற்றப்பா ராக்கால மனிதர்கூட்ட
    மிருக்கையிலே பொருந்திவிடு பாம்பாய்த்தோணுங்
கூற்றப்பா வெகுபாம்பு பச்சைப் பாம்பு
    கொற்றவனே வெகுபேர்கள் மிரளுவார்கள்
சாற்றப்பா திரியணைக்க மறைந்துபோகுஞ்
    சமர்த்துதா னென்னசொல்வே னிந்த வித்தை
ஆற்றப்பா போகருட கடாக்ஷத்தாலே
    அடைவாகப் புலிப்பாணி பாடினேனே. (18)

(பொ-ரை.) இன்னமொன்று சொல்லுகிறேன் கேள்:—பச்சைப்பாம்பு ஒன்றைக்கொன்று அதினுடைய வாயில்முத்துக்கொட்டை, பருத்திக்கொட்டை இவைகளை ஒன்றன்பின்ஞென்று அடுக்கடுக்காய்ப்போட்டு மண்ணில் வைத்துச் சலத்தை வாரு, இவ்விதம் மூன்று தடவை செய்து எடுத்துக்கொண்டு அந்த முத்துக்கொட்டையை எண்ணெ யாக்கி எண்ணெயை வடித்துக்கொண்டுமூன்றுமுறை வெடித்த பஞ்சுதெளிவாக வெடுத்து திரியாகச்செய்து அந்தத் திரியை எடுத்து விளக்கிற்போட்டு ஏற்றி ஐங்கோலத்தயிலம் விட்டு இராத்திரி காலத்தில் மனிதர்களுடைய கூட்டங்கூடியிருக்கும்போது இந்தத் திரியை விளக்கேற்றினல் வீடு முழுதும் பாம்பாய்க் காணப்படும், இதைக்கண்டு அனேகர்கள் மருள்வார்கள் உடனே திரியை யணைத்துவிட்டால் அதுமறைந்துபோகும், இந்த வித்தையை போகருடைய கடாக்ஷத்தினல் சொன்னேன். எ-று.

## மூலிகைஜாலம்.

பாடினே னின்னமொரு ஜால வித்தை
    பண்பாகச் சொல்லுகிறே னன்றாய்க் கேளு
ஆடியே இருளனென்ற மூலி தன்னை
    அப்பனே காப்பிட்டு பிடுங்கி வேரை
நாடியே காதிலே வைக்கும்போது
    நலமாக ஒரு பொருளைச் சொல்லி வைத்தாற்
கூடியே யவ்வண்ண ரூபமாகும்
    குணமான வதன்பெருமை கூறக்கேளே. (19)

கேளடா புலியாவாய் கரடி யாவாய்
கொடிதான குரங்காவாய் மந்தி யாவாய்
நாளடா யெருமைமுத லெருது மாவாய்
நலமான ஆனையொடு நாயு மாவாய்
ஆளடா பூனையொடு கோழி யாவாய்
அடைவான குதிரையொடு கழுதை யாவாய்
வாளடா பன்றியாவாய் மானு மாவாய்
வளமான ஆடு மரங் கல்லா வாயே. (20)

ஆவாய்நீ யாணுவாய் பெண்ணு மாவாய்
அப்பனே ராஜனொடு குருவு மாவாய்
தாவியே சித்தரென்ற முத்த ராவாய்
தபோதனர்கள் தாமுமாய் தவசி யாவாய்
வாவியே குளமாவாய் கிணறுமாவாய்
வளமான பாம்பாவாய் பக்ஷியாவாய்
மேவிநீ நினைத்தபடி யெல்லா மாவாய்
மேதினியி லின்னமொரு புதுமை யாமே. (21)

ஆமப்பா இஜ்ஜாலஞ் சுருக்கு மெத்த
ஆரறியப் போகிறா ரருமை மெத்த
காமப்பா புண்ணியருக் கெய்தும் பாரு
கன்மிகளுக் கென்னாளுங் காணு தப்பா
தாமப்பா யிம்மூலி வாய்த்த தானால்
தயிலமிட்டு காற்றில் வைக்க வீரமாகும்
வாமப்பா போகருட கடாக்ஷத்தாலே
வளமாகப் புலிப்பாணி பாடினேனே. (22)

(பொ-ரை.) இன்னமொரு ஜாலவித்தையைச்சொல்லுகிறேன் கேள்:—இருளியென்கிற மூலிகையைக் காப்புகட்டி பிடுங்கிஅதின் வேரை ஒருபொருளைச்சொல்லி காதில்வைத்துக்கொண்டால் அப் பொருளாகவேகாணப்படும், அதனால் புலியாவாய், கரடியாவாய், குரங்காவாய், பெருங்குரங்காகிய வானரங்களாவாய், எருமை, எருது, ஆனை, நாய், பூனை, கோழி, குதிரை, கழுதை, பன்றி, மான், ஆடு, மரம், கல்லுமாவாய், இதன்றி ஆண், பெண், இராஜன், குரு, சித்தர், முத்தர், தபோதனர்கள், தபசிகள், குளம், கிணறு, பாம்பு பக்ஷி இவைகளாக இவ்வுலகத்தில் ஆவாய், இந்தஜாலத்தினுடைய சுருக்கு மெத்தவாம், இதன் பெருமையை யாவரறிவர் இது புண்

ணியபுருஷர்களுக்கு கைகூடும், கர்மிகளுக்கு எப்போதும் காணப் படாது, இந்த மூலிகைகிடைத்தால் தைலமிட்டு காற்றில்வைக்க வீரமாகும், இது போகருடைய கடாக்ஷத்தினால் சொன்னேன்.

## புட்டி அல்லது கண்ணாடி இதுகளை நூலால் அறுக்கும் ஜாலம்.

கனத்தநல்ல கண்ணாடி யறுப்பதற்கு
கண்மணியே ரவையுமல்ல கல்லுமல்ல
வனத்தினிலே இருக்குமுருக் கிலைதானப்பா
வண்மையா யதினுடைய ரசத்தைவாங்கி
இனத்துடனே வெள்ளை யுண்டை நூலைவாங்கி
இண்டான ரசத்தினிலே தோய்த்துலர்த்தி
கனத்துடனே சனங்களுக்கு காட்டி நூலால்
கண்ணாடி தனையறுக்கத் துண்டாய்ப் போமே, (23)

(பொ-ரை.) மிகவும் கனதியில்லாதபுட்டி அல்லது கண்ணாடி கொண்டுவந்துகாட்டிவிருக்கப்பட்ட (பொரச இலைஎன்கிற) முருக் கிலையைக் கொண்டுவந்து சார்பிழிந்து ஓர் கிண்ணத்திலேந்தி வெள்ளை உண்டை நூலை வாங்கிவந்து மேற்படி ரசத்திற்போட்டு ஊரவைத்து பிறகு எடுத்து நன்றாய் உலர்த்தி வைத்துக்கொண்டு கண்ணாடியையாவது புட்டியையாவது இந்த நூலால் அறுத்தால் இரண்டு துண்டாய்விடும் நூலைதுண்டாக்காமலேயே உலர்த்தவே ண்டும், (எ-று)

## தெய்வஜாலம்.

பாடினே னின்னமொன்று சொல்லக் கேளு
பாங்கான சிறுமுன்னைக் காப்புக் கட்டி
ஆடியே பொங்கலிட்டுத் தூப தீபம்
அப்பனே பலிகொடுத்து வேரை வாங்கி
கூடியே பொடியாக்கிக் கருச்சீலை தன்னில்
குணமான திரியாக்கி யைங்கோ லத்தால்
வாடியே விளக்கிட்டுத் தீபந் தன்னை
வளமாக ஆவி நெய்யி லேத்திடாயே. (24)

ஏற்றியே கோவிலுக்குள் மாளிகைக்குள்
இன்பமாய்த் தானிருக்கு மிடத்தி லப்பா
பாத்தியே மனுக்களைத்தான் வர வழைத்து
பாரென்று சொல்லிவாய் மூடு முன்னே

பாத்தியே தேவரெல்லாங் கண்ணிற் காணும்
　　வையகத்தோற் தான்மயங்கிப் பார்ப்பார் பாரு
சாத்தியே திரியணைக்க மறையும் பாரு
　　சார்வாகப் போகருட கடாக்ஷந் தானே. (25)

(பொ-ரை) இன்னமொன்றுசொல்லக்கேள், சிறுமுன்னையை காப்புகட்டி பொங்கலிட்டுத் தூபதீபம் பலி இவைகள்கொடுத்து அவ்வேரை எடுத்துவந்து பொடிப்பண்ணி சீலையில் தடவித் திரியாக்கி ஐங்கோலத் தயிலத்தில் நனைத்து ஆவின் நெய்யால் கோயிலுக்குள்ளும், மாளிகையுள்ளும் விளக்கேற்றினால் தேவர்களையெல்லாம் கண்களில் பார்க்கக்கூடும், வையகத்தோர் மயங்கிப் பார்ப்பார்கள், திரியணைக்க சகலமும் மறையும், இது போகருட கடாக்ஷமாகும். (எ-று.)

## சீலை குடை பிடிக்க.

தானென்ற கருவிழிக் காப்பு கட்டி
　　தயவாகப் பொங்கலுடன் பலிபு மிட்டு
தேனென்ற திக்கு பந்தனமோ டிட்டுந்
　　திறமாகச்செய்து வெட்டிக் கிழங்கு வாங்கி
கோனென்ற சோமனிலே விராக னென்று
　　குணமாகத் தானறுக்கி முடிந்துக் கொண்டு
வானென்ற ஆகாசந் தன்னிற் போட
　　வளமாகக் குடைபிடித்து வரும்நீ பாரே. (26)

(பொ-ரை.) கரு விழுதியிலைச் செடிக்குக் காப்புகட்டி பொங்கலிட்டுபலிகொடுத்து திக்குபந்தனஞ்செய்து அதைவெட்டி அதின் கிழங்கை வாங்கி சோமன் அல்லது நாற்சதுரமாகிய குட்டையில் ஒரு விராகனெடை மேற்படிகிழங்கை நறுக்கி முடிந்துக்கொண்டு ஆகாயத்திற்போட அது குடைபிடித்துக்கொண்டுவரும். (எ-று.)

## சீசாவோடு, கண்ணாடி துண்டு மெல்லும் வித்தை.

பாரப்பா யின்னமொன்று பரிந்துக்கேளு
　　பண்பாய்க் கோபுரந்தாங்கி வேரை வாங்கி
வாரப்பா வாய்தனிலே வைத்தடக்கி
　　வண்மையாய்ச் சபைதனிலே வந்து நின்று
சீரப்பா சீசாவின் ஓடெடுத்துச்
　　சிறந்ததொரு வேலையென்று சபைக்குக்காட்டி
கோரப்பா எக்ஷணியைக் கோடித்தாற்போல்
　　கொண்டதொரு ஓடுகளை மென்று பாரே. (27)

(பொ-ரை.) இன்னமொன்று சொல்லுகிறேன் கேள்:—கோபுரந்தாங்கி என்கிற செடியைக்கண்டு அதின் நுனிவேர் அராமல் தூபதீபங்கொடுத்து பிடுங்கிவந்து இரும்பினாற்செய்த கத்தி முதலிய ஆயுதங்கள்படாமல் அதில் ஒரு சிறிய துண்டை எடுத்து வாயில்போட்டு கொஞ்சம் கசகசவென்று மென்று அந்த ரசம் உதடுமுதல் வாயெல்லாம் படும்படியாக நாக்கினாலேயே தடவிக்கொண்டு பிறகு அந்தவேரை வாயில்அடக்கிக்கொண்டு கண்ணாடி துண்டுகளாவது சீசா ஓடுகளையாவது முருக்கைப்போல் கடித்து தூளாக்கிவிட்டு கீழே முழிந்துவிடலாம், (அல்லது நல்லவேளை வேர், அக்கராகாரம் இவைகளையாவதுமுன்போல மென்று வாயிலடக்கிக்கொண்டும் மென்றுவிடலாம்,) கண்ணாடி துண்டுகளை மெல்லும்போது சிறிய துண்டுகள் உள்ளுக்குப் போகவொட்டாமல் வெகு ஜாக்கிரதையாக மெல்லவேணும். அப்படியும் தப்பி ஏதாவது சிறியதுண்டுகள் வயற்றுக்குள்போச்சுதென்று சந்தேகமிருக்கும்பக்ஷத்தில் சுடசுட கேழ்வரகுமாவு களியாவது வெருஞ்சாதத்தை நன்றாய்ப் பிசைந்த உண்டையாவது நாலைந்துஉண்டைகள் உடனே மிழுங்கவேணும். (எ-று.)

## எலுமிச்சம்பழ வித்தை,

பாரேநீ யின்னமொன்று சொல்லக் கேளு
பரங்காகக் * கர்த்தபந்தான் புணரும்போது
தீரேநீ வால்மயிரை வெவ்வேறே வாங்கி
திகழு மோதிரம்போல வெவ்வேறே சுற்றித்
தேரேநீ ஐங்காய மேலே பூசித்
திறமாகத் தங்கத்தை மேலே சுற்றி
கூரேநீ வலவிரலி லாண்தா னப்பா
குணமான யிடவிரலில் பெண்தான் காணே. (28)

காணப்பா வெலுமிச்சம் பழத்தை வாங்கிக்
கனிவாகப் பாதரச மதனிற் போட்டு
வானப்பா விடக்கையை கீழே மூடு
வானிலுள்ள கனியதுவும் வீழா தப்பா
தானப்பா யிடக்கையை நிமிர்த்திக் காட்டத்
தான்வீழுங் கனியதுதான் கண்டு பாரு
வேணப்பா போகருட கடாக்ஷத்தாலே
விதமாகப் புலிப்பாணி பாடினேனே. (29)

---

* கர்த்தபம் என்பது, கழுதை.

(பொ-ரை.) இன்னும் ஒன்று சொல்லுகிறேன்கேள்:—கழுதையானது சம்போகிக்கும்போது அவைகளின் வால்மயிரை தனித்தனியேவாங்கி மோதிரம்போல மாறிப்போகாமல் வெவ்வேறேசுற்றி ஐங்காயம் மேலே பூசி அதின்மேல் தங்கத்தகடைச்சுற்றி, வலது விரலில் ஆண்மயிர்மோதிரம், இடதுவிரலில் பெண்மயிர்மோதிரத்தையும் போட்டுக்கொண்டு, ஒரு எலுமிச்சம்பழத்தைக்கொண்டுவந்து நடுவில் பேனுகத்தியால் சிறியதுவாரஞ் செய்து ஒண்ணேகால் விராகனிடை ரசத்தை அதில்வார்த்து (மெழுகை யுருக்கிஅந்ததுவாரத்தைமூடி மூடினவாய் தெரியாமல் கொஞ்சம் அரிதாரத்தைப் பொடிசெய்து அந்த மெழுகின்மேல்பூசி) இடக்கையைகீழே (பூமிமேல்) மூடிக்கொண்டு வலக்கையினுல் ஆகாயத்தில்விட்டெறிய ஸ்ளம்பினகனியுங்கீழேவிழாது, சல் ஜகஜ்ஜால எக்ஷணீ பழத்தைக் கீழேபோடு என்று இடக்கையை நிமிர்த்திக்காட்ட ஆகாயத்திலிருந்த பழம் கீழேவிழும் போகருடையகடாக்ஷத்தால் புலிப்பாணியானவன் பாடினேன். இந்தஜாலம் ஆடும்போது வெய்யில் அதிகமாயிருந்தால் மிகவும் நல்லது. (எ-று)

## மணலைக் கண்களில் கொட்டிக் கொள்ளுவித்தை.

பாடினேன் யின்னமொரு ஜால வித்தை
　　பண்பானப் பேர்விளங்கச் சொல்வேன் கேளு
நாடியே நத்தைசூரி வேரைக் கண்டு
　　நவிலாமல் தாடையிலே யடக்கிக்கொண்டு
கூடியே கூச்சமனத் திருந்திடாமல்
　　குணமான கண்ணதனில் மணலைப்போட்டு
ஆடியே இருகண்ணும் விரலால் தேய்க்க
　　அன்பான கண்ணும் அருகாது பாரே (30)

(பொ-ரை.) எத்தைச்சொன்னாலுங் கேட்கும் நத்தைசூரி, ஆதலால்) நத்தைச்சூரி வேரை இரும்பு படாமல் கொண்டுவந்து சிறுதுண்டுகளாக்கி ஒரு சிறிய துண்டை வாயில்போட்டு கொஞ்சம் மென்று தாடையில் அடக்கிக்கொண்டு இருகண்களிலும் மணலைப்போட்டு கையால் தேய்த்தாலும் கண்கள் அறுகாது, இந்தவித்தையைசபையோர்களுக்குகாட்டி சல்எக்ஷணிபோ, கீழேபோவென்று குனிந்தால் கண்களிலிருக்கும் மணல் கீழேவிழுந்து விடும், உடனே கண்களைத் திறந்தும் பார்க்கலாம். நத்தை சூரியினுல் இன்னும் அனேகவித்தைகளும் ஆடலாம். (எ-று)

## நோக்குவித்தை,

பாடினே னின்னமொன்று சொல்லக் கேளு
பண்பான குன்றுடைய தாங்கி மூலம்
நாடியே கொழிஞ்சியது போலே யப்பா
நாட்டிலே மெத்தவுண் டறியார் பாரு
கூடியே யதைச்சுருட்டி மேலே யப்பா
குணமான ஆள்பாரங் கல்லைவைக்க
ஆடியே பார்த்திருக்க அந்தக் கல்தான்
அப்புரத்திற் போய்விழுங் கண்டு பாரே (31)

பாரடா கிராணமது தீண்டும்போது
பண்பாக நெருப்பிட்டுப் பொங்கலிட்டு
சீரடா பலியிட்டுத் தூப தீபஞ்
ஜெயமாகக் கொடுத்துமிக வேரை வாங்கி
தீரடா குளிசமா யாடிக் கொண்டு
திரமாக சிரசுதனில் வைத்து நீயுங்
கூரடா பாரமதை யேற்றிப் பாரு
குணமாகத் தானெடுக்க கனக்கா தென்றே. (32)

கனக்காது உலக்கைமுதல் கட்டி லையா
கனிவாகப் பல்லாக்கு கொம்பி னோடு
அனக்காது யிதுகளெல்லாம் நோக்கும் போதில்
அப்பனே வாயிலிட்டு நோக்கிப் பாரு
இனக்காது ஆனையைத்தான் வாலைப் பற்றி
இழுத்தாக்கால் பின்னகர்ந்து வரும்நீ பாரு
நினைக்காது கல்லைத்தான் உதைத்தா யானால்
நகருமப்பா பெரும்பாரம் பின்னைத் தானே (33)

(பொ-ரை.) இன்னு மொன்று சொல்லுகிறேன் கேள்:—மலைத்தாங்கி மூலம்என்பது கொழிஞ்சி செடியைப்போல நாடுகளில் மெத்தவுண்டு, இதை யாரும் கவனித்திருக்க மாட்டார்கள். அதைக்கண்டு எடுத்துச் சுருட்டி. ஆள்பாரமான கல்லைஅதின்மேல்வைக்க; கொஞ்சம் நேரத்திற்குள் அந்த கல்லானதுஅசைந்து அப்பால் போய் விழுந்து விடும், அந்த செடியைக்கண்டு பிடித்து கிராணம் பிடிக்கும்போது நெருப்பிட்டு பொங்கலிட்டு, பலியிட்டுதூபதீபங் கொடுத்து (கிராணம்விடும் முன்னமேயே) வேரைவாங்கி குளிசமாடி சிரசில் வைத்துக்கொண்டு கனத்த பாரத்தைத் தலைமேல் யேற்றிப் பார்த்தால் பளுவில்லாமலிருக்கும், வாயில் வைத்துக்

கொண்டு உலக்கை, கட்டில், பல்லாக்குமரங்கள் இவையெல்லாம் கையாலெடுக்க கனக்கமாட்டாது இதுசெய்பவன் ஆனையின் வாலை பற்றி யிழுத்தால் ஆனை பின்னாலேயே நகர்ந்துவரும், பெருங் கல்லை உதைத்தாலும் நகரும்.(எ-று)

## பாம்புகளை உண்டாக்கும் ஜாலம்.

தேனேதா னின்னமொன்று சொல்லக்கேளு
தயவாகச் சவத்தினுட வாயினுள்ளே
மானேதா னிருப்பாணி யுள்ளேவிட்டு
மைந்தனே மார்பினில்தான் வெள்ளி யாணி
தேனேதா னுந்தியிலே செப்பி னாணி
தெளிவாக தானடித் தின்னங் கேளு
வானேதான் சவங்கிடந்து வெந்த பின்பு
வளமாக மறுநாளி லெடுத்துக் கொள்ளே. (34)

கொள்ளவே காடாற்று முன்னே நீயுங்
குணமாகத்தானெடுத்துப் பூசை செய்து
தெள்ளவே பிரம்பில் வெள்ளிக் கட்டாய்போடு
தெளிவாக யிரும்புதனை முன்னே போடு
கள்ளவே செம்பதுதான் பின்னே போடு
கடிதாக விவ்வகைநீ செய்த பின்பு
அள்ளியே யைங்கோலக் கருவும் பூசி
அடைவாக ஜாலக்காள் தியான மோதே. (35)

ஓதியே லக்ஷமுரு முடிந்த தானல்
ஒளிவான ஜாலக்கால் பூசை செய்து
வாதியே பிரம்புதனை யெடுத்துக் கொண்டு
வளமாகப் பிரம்பதனால் பெட்டி மேலே
பாதியே யன்பாகத் தட்டும் போது
பாம்பெல்லாம் வெளியாகும் கண்டு பாரு
நாதியே பிரம்பைத்தான் திருப்பித் தட்டத்
தானிருக்கும் பெட்டியுள்ளே பாம்புநேரே. (36)

(பொ-ரை.) இன்னுமொன்று சொல்லுகிறேன் கேள்:—பிணத்தினுடைய வாயில் இருப்பாணியும், மார்பில் வெள்ளியாணியும் தொப்புளில் செம்பாணியும் வைத்து அந்தப் பிணம் வெந்தபிறகு மறுநாள்காடாற்றுவதற்கு முன்னமே இந்த ஆணிகளை எடுத்து அவைகளைப்பூசைசெய்து ஒரு பிரம்பில் வெள்ளிகட்டாய்போட்டு இ

ரும்பை முன்னேபோடு, செம்பு பின்னேபோடு, இப்படி நீ செய்தபின்பு ஐங்கோலத்தயிலம்பூசி ஜாலக்காரனை தியானஞ்செய்து இது லக்ஷம் உரு முடிந்ததானால் ஜாலக்கர்ள் பூசையைச்செய்து பிரம்பை எடுத்துக்கொண்டு செம்புபக்கமாக ஒருபெட்டியின்மேல்தட்டினால் அதற்குள்ளிருந்து பாம்புகள் வெளிப்படும், அந்தப்பிரம்பைத் திருப்பித் தட்டினால் பாம்புகள் மறையும். (எ-று)

## இரண்டுவிதமாக ஒரு பசுவில் பால் கரக்க.

நேரப்பா நிக்ஷயமாய்ச் சொல்லக் கேளு
நினைவாகப் பசுவினிடக் கொம்பிலே தான்
சீரப்பா சித்திரமா மூலிவேரை
சினப்பாக மைபோல வரைத்துக் கொண்டு
நீரப்பா வின்பக்கம் கொம்பிற் பூசி
நினைவோடு சபைதனிலே பசு நிருத்தி
ஊரப்பா வுன்பக்கம் பால் கரக்க
உனைமெச்சும் வந்தஜனம் வுண்மைதானே. (39)

(பொ-ரை.) ஒரு பசுவுக்கு சித்திரமூலம் என்கிற வேரை அரைத்து இடதுபுரக் கொம்பிற்பூசி ஆரவிட்டு சபைக்கு கொண்டு வந்து பால்கரக்கப்போகும் செம்பை சபையோருக்குக்காட்டி பசுவின்இடதுபுரமாகக்குந்தி உன்பக்கமிருக்கும் மடியைப் பிடித்துப் பால்கரக்க சிகப்புநிறமாக இரத்தம்போலவிருக்கும், மற்றொருசெம்பில் வேறுபுரம் கரக்க பால் வெண்மையாகயிருக்கும், இதை கரந்து காண்பிக்கும்பொழுதே வேறொருவன் பசுவை மறைவாக பிடித்துக்கொண்டுபோய் வேரை அரைத்துப் பூசிய கொம்பை நன்றாய்க் கழுவிவிடவேண்டும், மறுபடியும் சபையில் கொண்டுவந்து பசுவின் இருபுரமும் தனித்தனி கரந்துகாட்ட ஒரேநிறமாக வெளுமையாக யிருக்கும். (எ-று.)

## வாத்திய ஜாலம்.

தானேதா னின்னமொன்று சொல்லக் கேளு
தயவாகப் பள்ளியர்கள் மரண மானால்
கோனேதா னவர்கையி லிரும்பி னாலே
கொற்றவனே வளையலது போட்டிருப்பார்
தேனேதா னவர்களைத்தான் தகனம் பண்ணச்
தேருகையில் வளையலுடன் வைப்பார் பாரு
வானேதான் காடாற்று முன்னே யப்பா
வகையாகத் தானெடுத்து வைத்துக் கொள்ளே. (38)

கொள்ளப்பா பாக்குவெட்டி யதனாற் செய்து
  கொற்றவனே கிராணமது தீண்டும் போது
தள்ளப்பா சங்கம்வேர் காப்பு கட்டித்
  தயவாக பலிபூசை நடத்தி யப்பா
தெள்ளப்பா வடவேரை வாங்கிக் கொண்டு
  தெளிவான வைங்கோலக் கருவும் பூசி
கள்ளப்பா பாக்குவெட்டி தன்னால் வெட்ட
  கனிவாக வதின்பெருமை சொல்லப் பாரே, (39)

பாரடா பேரிகையும் நகபத்தோடு
  பண்பான நகாருமுதல் மத்தளந்தான்
சேரடா தம்பட்ட கனக தப்பை
  செயலான தபேலாவும் தவண்டையப்பா
கூரடா துத்தி மல்லாரி தாரை
  குணமான பம்பையொடு பூரி யப்பா
தீரடா சந்திரவாத்தியஞ் சூரியவாத்தியந்
  தெளிவான வுடுக்கைமுதல் முழங்குந் தானே. (40)

தானென்ற வுடுக்கைமுதல் தப்பையோடு
  தயவாக யின்னம்வெகு வாத்தியங்கள்
கோறென்ற வேளரத்தா னடுக் கடுக்காய்
  கொற்றவனே வெட்டுகையில் முழங்கும் பாரு
தேனென்ற வாத்தியத்தின் காலம் ஜாலந்
  தெளிவாகக் குருமுறையால் தெளிந்து செய்நீ
ஆனென்ற போகருட கடாக்ஷத்தாலே
  அடைவாகப் புலிப்பாணி பாடினேனே. (41)

(பொ-ரை) இன்னமொரு ஜாலத்தைச்சொல்லுகிறேன்கேள்:—* பள்ளியர்களென்னும் ஓர்வகைசாதியார் மரணமடையும்போது அவர்களுடையகையிலிருக்கும் இரும்புவளையலுடன் தகனஞ்செய் வார்கள், தகனஞ்செய்தபின் காடாற்றுவதற்குமுன் அவ்வளையல் களை எடுத்துக்கொண்டு வந்து அந்த இரும்பினாற் பாக்குவெட்டி யென்னும் ஆயுதத்தைச்செய்து கிராணம்பிடிக்கும்போது சங்கம் வேருக்குக் காப்புகட்டி, பலிமுதலியதுடன் தூபதீபங்கொடுத்து

---

* பள்ளியர்கள் என்போர் ஓர்வகைச் சாதியார், அவர்கள் கையில் இரும்பு வளையம் போட்டிருப்பார்கள் அதினால் அவர்க ளுடைய ஜாதியைக்கண்டு பிடிக்கவேணும்.

பூசைசெய்து (கிரணம் விடுவதற்குள்ளாக அதின்) வடக்கேபோ கிற வேரையெடுத்து ஐங்கோலக்கருவைப்பூசி அந்தவேரை மேற்படி பாக்குவெட்டியினால் வெட்ட பேரிகை, நகாறு, மத்தளம், தம்பட்டம், கனகதப்பை, தபேலா, தவண்டைவாத்தியம், துத்தி, மல்லாரி, தாரை, பம்பை, பூரி, சந்திரவாத்தியம், சூரியவாத்தியம், தப்பைமுதலிய அனேக வாத்தியங்கள் அந்த வேரை வெட்டும் போது சப்திக்கும், இந்த வாத்தியங்களின் காலம், ஜாலம் இவைகளைக் குருவின்கிருபையினால் நீதெரிந்து செய்யவேண்டும், நான் போக முனிவருடைய கிருபையினால் சொன்னேன். எ-று.

## எக்காள ஜாலம்.

பாடியே யின்னமொரு வித்தை சொல்வேன்
பண்பாக ஆம்-ஓம்-சுவாஹய வென்று
ஆடியே லக்ஷமுரு செபித்தா யானால்
அப்பனே ஜாலக்காள் பூசை செய்து
கூடியே நத்தையாஞ் சூரி வேரைக்
கொண்டுவந்தே யைங்கோலக் கருவும் பூசி
நாடியே முன்கையில் வைத்து நீயும்
நலமாக நீட்டியதை முருக்கு வாயே. (42)

முருக்கையிலே மந்திரத் தியான மோது
முனிவாக மண்ணெடுத் தெதிரே போடு
இருக்கையிலே யெக்காளத் தாரை சின்னம்
எளிதான கர்ணவும் வாங்காதப்பா
திருக்கையிலே நாகசுரங் கொம்பினோடு
தெளிவான மகுடியொடு சங்கநாதம்
கருக்கையிலே யிவைகளெல்லாம் புடைக்கும் பாரு
கனிவாகப் போகருட கடாக்ஷந்தானே. (43)

(பொ-ரை.) இன்னும் ஒருவித்தையைச் சொல்லுகிறேன் கேள்:— ஆம்-ஓம்-சுவாஹயவென்று லக்ஷமுருசெபித்துக்கொண்டு ஜாலக்காள் பூசையைச்செய்து நத்தைச்சூரி வேரைக்கொண்டு வந்து ஐங்கோலக்கருவை அதற்குப் பூசி அதை உன்இருகைகளாலும் பிடித்துக்கொண்டு மேற்படி மந்திரஞ்சொல்லி மண்ணெடுத்து எதிரே போட்டுவிட்டு கைகளை நீட்டி முறுக்குவாய், அப்படி முறுக்குவாயாகில் எக்காளம், தாரை, சின்னம், கர்ணடகவாத்தியம், நாகசுரம், கொம்பு, மகுடி, சங்கநாதம் இவைகளெல்லா முண்டாகும் (எ-று)

## ☞ எலுமிச்சம் பழம் குதிக்கும் ஜாலம்.

ஏனப்பா என்னுடைய ஜாலம் போல
எத்தவரும் சொலமாட்டார் இனிதாய்க் கேளு
ஏனப்பா எலுமிச்சம் பழந்தானென்று
எளிதாகத் துளையொன்று யினிதாய்ச் செய்து
ஏனப்பா ரசங்களஞ்சு வுள்ளே வார்த்து
எதிர்வாயை மூடிவிடு மெழுகினாலே
ஏனப்பா ரவிமுகத்தில் வைத்தாயானால்
எலுமிச்சம் பழம் எழும்பி குதிக்குந் தானே. (44)

(பொ-ரை) ஒரு எலுமிச்சம்பழத்தைக் கொண்டுவந்து அதை சிறிய பேனாகத்தியால் சிறு துளைசெய்து நாற்பது குன்றியிடை பாதரசத்தை அதற்குள்விட்டு வெள்ளை மெழுக்கினால் வாயைமூடி மூடினவாய்தெரியாமல் அரிதாரப்பொடியைப்பூசி அந்தபழத்தை வெய்யலில்வைத்தால் சூடுயேறினவுடன் தரையில்நில்லாமல்மேல் எழும்பிகுதிக்கும், இதைவெய்யலில் வைக்கும்போது சல் எக்ஷணி ஓடிவந்து இந்தபழத்தைச் கிளப்புயென்று சொல்லவும்.எ-று.

## ☞ அக்கினி ஜாலம்.

தானையா யின்னமொரு வித்தை சொல்வேன்
தயவாகப் பச்சையென்ற தவளை நெய்யை
மானையா கலசத்தில் வைத்துக் கொண்டு
மைந்தனே துணியதிலே துவைத்து மைந்தா
வானையா மண்வெட்டி பழுக்கக் காய்ச்சி
வளமான வுரலின்மேல் வைக்கச் சொல்லித்
தேனையா யெண்ணையிலே கையை தோய்த்துத்
திறமாகத் தானடிப்பா யினனம் பாரே. (45)

பாரடா அனைவோரும் பார்த்திருக்கப்
பண்பாக துணியதிலே துடைத் துப்போடு
தோடா யெண்ணெயிலே தோய்த்துத் தோய்த்துத்
தெளிவாகத் தானடிப்பா யனைவோர் பார்க்கச்
சீரடா குண்டதனைக் காய்ச்சச் சொல்லி
சிறப்பாக வாய்தனிலே யிந்த யெண்ணெய்
தீரடா நிரம்பவிட் டுமிழ்ந்து விட்டுத்
திறமான குண்டதனைக் கடித்துத் தூக்கே. (46)

---

☞ இக்குறியுள்ள ஜாலங்கள் வெகு சுலபத்திற் செய்யலாம்.

தூக்கப்பா அனைவோரும் பார்க்கும் போது
துணிவாக வைக்கோலில் வைத்துக் கட்டி
வாக்கப்பா வைக்கோலி லெண்ணை தோய்த்து
வகையாகத் தான்கட்டி முன்னே போடு
போக்கப்பா வைக்கோல்தான் வேகாதப்பா
பொலிவாகத் தானவிழ்த்துப் பின்னுங் கேளு
தாக்கப்பா வைக்கோல்மேற் போட்டாயானால்
தயவாகத் தான்பிடித்து வேகும் பாரே. (47)

பாரடா சங்கிலியைக் காயப்போட்டுப்
பண்பாக நெய்யெடுத் துருக்கு வாய்நீ
சீரடா பாதத்திற் றடவிக் கொண்டு
சிறப்பாக வக்கினிமேல் நடக்க லாகும்
கூரடா கைதனிலே தடவிக் கொண்டு
குணமான வக்கினி சட்டி தன்னை
வீரடா வெடுக்கலாங் கண்டு பாரு
விதமான போகருட கடாக்ஷந் தானே. (48)

(பொ-ரை.) இன்னுமொரு வித்தையைச் சொல்லுகிறேன் கேள்:— பச்சைதலையின் நெய்யை அகலில் வார்த்து அதிலே துணியைத் துவைத்து பிழிந்து வைத்துக்கொள்ளவும், மண்வெட்டியைப் பழுக்கக்காய்ச்சி உரலின்மேல்வைத்து எண்ணெயில் கையைத்தோய்த்து அதின்மேலடிப்பாய், பிறகு யாவரும் பார்க்கும்படி அந்தத்துணியில் கையைத் துடைத்துக்கொண்டு மறுபடியும் அவ்விதமேசெய்து அடிக்கவும். யாவரும் பார்க்க ஒருகுண்டைக் காய்ச்சச்சொல்லி வாயில் இந்த எண்ணெயை நிறையவார்த்து உமிழ்ந்துவிட்டு அந்தக் குண்டைக் கடித்துத் தூக்கலாம், அதை வைக்கோலில வைத்துக்கட்டி அந்த எண்ணெயைத்தடவி போட்டாயானால் வைக்கோல் வேகாது அந்த வைக்கோலை யவிழ்த்துவிட்டு வேறெ வைக்கோல்மேல்போட்டால் தீப்பிடித்துவேகும், ஒருஇரும்புச்சங்கிலியை நன்றாய்ப்பழுக்கக்காய்ச்சி இந்தநெய்யை யுருக்கி காலில் தடவிக்கொண்டு அந்த அக்கினியின்மேல் நடக்கலாம், அதேநெய்யைக்கையில் தடவிக்கொண்டு அக்கினிசட்டியை எடுக்கலாம், இவையனைத்தும் போகருடைய கடாக்ஷமேயாகும்.

## ☞ ஆகாயத்தில் எரிந்த இரும்பு குண்டு.

## அந்திரமாக நிற்கும் ஜாலம்.

தானேதான் நத்தைசூரி செடியைக் கண்டு
தயவான அருக்கநாள் சுவாதியுந் தான்
கானேதான் கும்பலக்கினம் கூடும் வேளை
குணமான அச்செடிக்குக் காப்புக் கட்டி

மானேதான் மறுஆதி வாரந்தன்னிற்
மகத்தான சிம்பலக் கினத்திற் சென்று
பானேதான் பலியிட்டுப் பூசை போட்டுப்
பண்பான வேரைத்தான் பதமாய் வாங்கே (49)

வாங்கியே தங்கத்தாற் காப்புச் செய்து
வளமான வேரதனில் வைத்து மூடி
சோங்கியே விநாயகரைப் பூசித்தே தான்
சுந்தரம்போல் வலது கையில் சுகமாய்ப்போட்டு
யோங்கியே இரும்பு குண்டை கையிலெடுத்து
யெதிராக அந்தரத்தில் விட்டெறிந்து
நீங்கியே காப்பு தன்னை இடது கையால்
நிக்ஷபமாய் நிலங்காட்ட நிற்குந் தானே. (50)

(பொ-ரை.) நத்தைச்சூரி என்கிற செடியைக்கண்டு ஆதிவாரமும், சுவாதி நக்ஷத்திரமும், கும்பலக்கினமும் கூடிய வேளையில் அந்தச் செடிக்கு மஞ்சள் நூலால் காப்புக் கட்டி மறு ஆதிவாரத்தில்சிங்கலக்கினத்திற் சென்று பொங்கலிட்டு பலி கொடுத்து பூசை போட்டு (இரும்பாற் செய்த ஆயுதங்க ளெல்லாமல்மரத்தினாற் செய்த கூருள்ளகொம்பினால்) அந்தச்செடிக்குக் காயம் படாமலும்நுனிவேர் முதலியவேர்கள் யாவும் அறாமல் தோண்டி யெடுத்துக் கொண்டு வந்து, பொன்தகட்டினாற் போலாகவளையம்போற் காப்பு செய்து அதற்குள் இந்தவேரை அடைத்துபோட்டு (அல்லது பொன்னாற் றகடுசெய்து வேர்களை நடுவில் வைத்துருட்டி வளைத்து கொள்ளலாம்) விநாயகரைப்பூசைசெய்து வலது கையில் மேற்படி காப்பைப் போட்டுக்கொண்டுசபையில் வந்து ஒரு இரும்பு குண்டை ஆகாயமார்க்கம் விட்டெறிந்துவலது கையிலுள்ள காப்பைக்கழட்டி இடதுகையிற் பிடித்து பூமிபக்கமாக தாழ்த்திப் பிடிக்க அந்தரத்திலேயே குண்டு நிற்கும் சல் எக்ஷணி அந்த குண்டைக் கீழேபோடு யென்று சொல்லி மேற்படி காப்பை வலது கையில் வாங்கி மேலேயிருக்கும் குண்டுக்கு நேராகத் தூக்கிக்காட்ட குண்டுகீழே வந்துவிழும், மேற்படி காப்புக்குள்வேரையடைக்கும் போது பூமிமட்டம் வரையில் செடியை கையால் முறித்துவிட்டுவேரைமாத்திரம் காப்புக்குள் போடவும்-எ-று.

## ஜலஸ்தம்பனம்.

தானாக இன்னமொரு வித்தை கேளு
தயவாகச் சலந்திரட்டுங் கூட்டு மூலி
வானாக உலர்த்தியதைத் தூளாய்ச் செய்து
வளமாக ஐங்கோலத் தயிலந் தன்னில்

மானாக மைபோல வரைத்து மைந்தா
மருவு பாதக்குறடு தன்னிற் பூசிக்
கோனாகத் தண்ணீர்மேல் நடக்க லாகுங்
குளங்கிணறே யல்லாம லாறு காதே (51)

ஆனான வாசனங்கள் தன்னிற் பூசி
அப்பனே ஜலத்தின்மே லிருக்க லாகுங்
கூறான விந்த வித்தை புதுமை மெத்த
கொற்றவனே யுலகத்தோர் நாதனென்பார்
தேறான விந்திர ஜாலந் தன்னில்
தேறி நின்றார் சகலசித்துங் கைக்குள் ளாகும்
வீறான போகருட கடாக்ஷத்தாலே
விதமாகப் புலிப்பாணி பாடினேனே. (52)

(பொ-ரை) இன்னுமொரு வித்தை சொல்லுகிறேன் கேள்:— ஜலந்திரட்டும் மூலிகையை யுலர்த்திப் பொடிசெய்துஐங்கோலத் தயிலத்தால் மைபோலரைத்து பாதக்குறட்டில் பூசிக்கொண்டு ஜலத்தின்மேல் நடக்கலாகும், குளம், கிணறுகளிலும் செய்யலாம், ஆறு உதவாது, பீடங்களின் கீழ்புரம் பூசி ஜலத்தின்மே லிருக்கலாம், இவைகளெல்லாம் அருமையான வித்தைகளாகும், இவைகளை உலகத்தார் கண்டு மிகவும மெச்சுவார்கள்-எ-று.

## எக்ஷணி ஜாலம்.

தானான பச்சோந்தி பிச்சை வாங்கித்
தயவாகத் திசைமயக்குப் பொடியுங் கூட்டு
மானான மதிமயக்குத் தூளுங் கூட்டி
மத்தம்வேர்த் தூளதுவுங் கூடச்சேர்த்து
வானான வைங்கோலத் தாட்டி மைந்தா
வளமாகச் சிமிழதனில் வைத்துக் கொண்டு
கோனான மோகினியைத் தியானஞ் செய்து
குணமான ஜாலக்காள் பூசை செய்யே. (53)

செய்யப்பா மாயமோகினி நமஹா வென்று
செயலாகத் திலர்தமிடப் பெண்போல் தோன்றும்
வையப்பா வுலகத்தோர் வாய் வரண்டு
மதிமயங்கி மோகித்து நிற்பார் பாரு

ஐயப்பா ரம்பையூர் வசிப்பெண் தானோ
அடைவான திலோர்த் தமையோ தெய்வப்பெண்ணோ
கையப்பா பிடிப்பாருங் காலில் வந்து
கனிவாக வீழ்வாருங் கண்டு பாரே (54)

பாரடா திலகத்தை யழித்த போது
பண்பான பெண்ணை யல்லோ காணோமென்பார்
வீரடாயிந்த மங்கை யுலகி லுண்டோ
விதமான மேதினியில் காண லாமோ
தீரடா மனம்பதறி யழுவார் பாரு
தெய்வமே யென்று சொல்லி மயங்குவார்கள்
நீரடா விப்பெண்ணை நினைத்த போதே
நெஞ்சுருகி வேகுதென்று புலம்புவாரே. (55)

(பொ-ரை.) பச்சை ஒணானுடையபிச்சை வாங்கி திசைமயக்குப் பொடியைச் சேர்த்து மதிமயக்குத் தூளையுங் கூட்டி ஊமத்தம்வேர்த்தூளையும் கூடவே சேர்த்து ஐங்கோலத் தயிலத்தா லரைத்து மோகினியைத் தியானஞ் செய்து பிறகு ஜாலக்காள் பூசையுஞ் செய்து, மையையெடுத்து மாயமோகினி நமஹா வென்றுசொல்லி பொட்டிட நீ பெண்போல் காணப்படுவாய், அதைக் கண்ட ஜனங்கள் மருண்டு யிருப்பார்கள் பிறகு தெய்வப்பெண்களாகிய அரம்பை, ஊர்வசி, மேனகை, திலோர்த்தமை இந்நால்வரில் யாரோ தெரியவில்லை யென்று உன்காலிலும், வந்து விழுவார்கள், உனக்கு வேணதெல்லாந் தருவார்கள், பிறகு நீ மைப்பொட்டைக் கலைத்துவிட்டால் ஒன்றுந் தோன்றாது,அப்போது அப்பெண்ணைக் காணோமே யென்று அழுவார்கள், தெய்வமே யென்று சொல்லி மயங்குவார்கள், இப்பெண்ணை நினைத்தபோதே மனமுருகுகின்றதென்று புலம்புவார்களஎ-று.

இதுவுமது.

வாறான வின்னமொரு வித்தை யப்பா
வளமான எக்ஷணியின் மார்க்கங் கேளு
கூறான ஸ்ரீரீம், இரீம், கிலீயு மென்று
குணமான அவ்வும், உவ்வும், மவ்வுஞ் சேர்த்து
வீறான நமசிவய வென்று நீயும்
விதமான ஓம் யென்று சொல்லிப் பின்னை
சீறான சுகந்த பரிமளஞ் சாதிக்காய்
சிறமான கிராம்பு வால் மிளகுந் தானே (56)

மிளகோடு அடக்காய் சர்க்கரை கற்கண்டு
மிதமில்லாக் கனிவகைகள் பலகார மன்னம்
அளகோடு இவையெல்லாம் வேண்டுமென்றே
அடைவாக எக்ஷணியின் தியான மோது
புளகோடு தெப்பக்கால் மூலிகைக்குப்
பொங்கமுடன் வெள்ளிதனிற் காப்பு கட்டி
நளகோடு எட்டுநா ளந்தி சந்தி
நலமாக எக்ஷணியின் தியானமோதே. (57)

ஓதியபின் பொங்கல்பலி தூப தீபம்
ஒளிவாகத் தான்கொடுத்து வேரை வாங்கி
ஆதியாம் ஐங்கோலக் கருவும் பூசி
அடைவாகக் கருசீலை மேலே சுற்றி
நாதியே தங்கத்தி லடைத்துக் கொண்டு
நலமாக எக்ஷணியை லக்ஷமோதி
தீதிலாப் பூசையது பெலக்கச் செய்து
திறமாக விவையெல்லா மழைப்பாய் பாரே (58)

பாரப்பா சபை நடுவே யிருந்து கொண்டு
பண்பான முக்காடு போட்டு நீயும்
சீரப்பா நீலகண்டி தியானமோது
சீக்கிரத்திற் கொண்டுவரு மெக்ஷணிதான்
கூரப்பா வெல்லார்க்குங் கொடுக்கச்செய்நீ
குற்றம் வரும் நீயொன்றும் புசிக்கவேண்டாம்
நேரப்பா போகருட கடாக்ஷத்தாலே
நிச்சயமாய்ப் புலிப்பாணி பாடினேனே, (59)

(பொ-ரை.) இன்னுமொருவித்தைசொல்லுகிறேன் கேள்:— அதாவது எக்ஷணிவித்தையாகும், ஸ்ரீரீம், ரீம்கிலீம்,அவ்வும்,உவ்வும், மவ்வும், நமசிவய, ஓம் என்று சொல்லி வாசனைகள்,சாதிக்காய், லவங்கம், வால்மிளகு இவைகளும், வெற்றிலைப்பாக்கு, சர்க்கரை, கற்கண்டு, பலவகைப் பழதினுசுகள், பலகாரம், சாதம் இவைகள்வேண்டுமென்று முன்தியானத்தைச் சொல்லவும், தெப்பக்கால்மூலிகையைவெள்ளிக்கிழமையில் காப்புகட்டிஎட்டுநாள்காலைமாலைதியானஞ்செய்துஅப்படிதுதிசெய்தபின்பொங்கல்பலிதூபம்தீபம்இவைகளைக்கொடுத்துஅந்தவேரை வாங்கி,ஐங்கோலக்கருவை அதற்குபூசிகருச்சீலைஅதற்குமேல்சுற்றிதங்கத்தாலூர்,கடயம்

செய்து அதில்அடைத்துக்கொண்டு எக்ஷணியை லக்ஷம் உருசெபி த்து சபையின் மத்தியிலிருந்துக்கொண்டு மூக்காடு போட்டு நீல கண்டியின் தியானஞ்செய்தால் எக்ஷணியானவள் சர்வ பொருள் களையும் கொண்டுவருவாள், அதை யாவருக்குங் கொடு, நீ சாப்பி டவேண்டாம். (எ-று.)

## இதுவுமது.

பாடினே னின்னமொரு வித்தை கேளு
பண்பானத் தவளையைத்தா னரவங் கவ்விக்
கூடியே பிடித்திருக்கும் வேளை பார்த்துக்
கூசாமற் றலைவிழவே வெட்டிப்போடு
ஆடியே யரவுடைய தலையுங் கூட
அடைவாகத் தவளையைத்தா னெடுத்துக்கொண்டு
நாடியே வாங்கி கச்சுப் பட்டைக் கொண்டு
நலமாக ஐங்கோலத் தயிலங் கூட்டே. (60)

கூட்டியே சகலாத்தில் வைத்துத் தைத்துக்
குணமாக வுரலின்கீழ் வைத்துக் குத்து
நாட்டியே குத்தையிலே வாயுப் போகும்
நலமாக வதை யெடுத்து வைத்துக் கொண்டு
ஆட்டியே யிப்பாகம் நினைத்தபோது
அடைவாகச் செய்து விளையாடிப்பாரு
வாட்டியே யவமானப் பட்டுப் போவார்
வையகத்தோர் தான்பார்த்து நகைப்பார் பாரே. (61)

(பொ-ரை.) இன்னுமொரு வித்தையைச் சொல்லுகிறேன் கேள்:—தவளையைப் பாம்பு பிடித்துக்கொண்டிருக்கும் வேளை யைப்பார்த்து தலை விழும்படிவெட்டி இரண்டு தலைகளையும் யெடு த்து ஐங்கோலத் தயிலத்தில் தோய்த்து கச்சைப் பட்டையைப் போல்யிருக்கும் சிகப்பு சகலாத்தில் பைதைத்து அதற்குள்இதை வைத்து வாயைத் தைத்துவிட்டு உரலில்வைத்து குத்தினால் வாயு போகும், உடனே அதை யெடுத்துக்கொண்டு சகல வித்தைகளை யும் இதை கையில்வைத்துக்கொண்டு ஆடிப்பார், வையகத்தோர் வெட்கி யிருப்பார். (எ-று.)

## சீலைத் திரைய.

பாரடா கர்த்தபந்தான் புணரும் போது
பரிவாக வாண்சமுதை வாலு ரோமன்

சீரடா பிடுங்கியதை வைத்துக்கொண்டு
சிறப்பான கண்ணில்லாப் புற்று மீதில்
தீரடா கட்டுடைய கொடிதானப்பா
திறமாகக் கிராணத்திற் காப்பு கட்டி
கூரடா பலி பொங்கல் தூபதீபம்
கொடுத்து நீ கொடியதனைப் பிடுங்கிக் கொள்ளே. (62)

கொள்ளவே வளையமாய்ச் சுருட்டிக்கொண்டு
குணமான ரோமமுங் கூடவைத்தே
தெள்ளவே தங்கத்தால் வெள்ளியாலும்
தெளிவாகத் தண்டினுடமேலே சுற்றி
கள்ளவே சுற்றுமுன்னே கருவும்பூசிக்
கனிவாக ஜாலக்காள் பூசை செய்து
மெள்ளவே கைதன்னி லேற்றும்போது
மேன்மையாய்ச் சிலையது திரையும் பாரே. (63)

(பொ-ரை.)கழுதையானது புணரும்போது ஆண்கழுதையின் வால் மயிரைப்பிடுங்கி வைத்துக்கொண்டு கண்ணில்லாத புற்றின் மேல்படர்ந்திருக்கும் கட்டுக்கொடிக்கு கிராணத்திற்காப்புகட்டி. பலி,பொங்கல்,தூபதீபங்கொடுத்து கொடியை பிடுங்கிக்கொண்டு, அந்தக்கொடியை வளையமாடி அதில் கழுதைமயிரையுஞ்சேர்த்து சுற்றி அதின்மேல் ஐங்காயக் கருவைப்பூசி தங்கத்தாலும், வெள்ளியாலும் கொடியின் மேல்சுற்றி ஜாலக்காள் பூசைசெய்து கையில்போட்டு மேலேற்ற சிலைத்திரையும், கீழ்ப்புரந்தள்ள சிலை சரியாகவிழுந்துவிடும். (எ-று.)

## தீவட்டி ஜாலம்

பாரப்பா வெட்டுண்ட முண்டந்தன்னைப்
பதித்திருக்கு மிடம் பார்த்து ஊனைவாங்கி
நேரப்பா திகைப்பூடு பொடித்துப் போடு
நேரான வைங்கோலத் தயிலஞ்சேர்த்து
தீரப்பா தீவட்டி தனில நனைத்து
திறமாகப் பொருந்திவிளக் கெண்ணைவாரு
வீரப்பா ராக்கால மனிதர்கூடி
வீராக வருகையிலே சொல்லக்கேளே. (64)

கேளடா தீவட்டிதான் பிடிக்கக்
கெட்டுதடா வனைவோரு முண்டமாவார்

நாளடா கூட்டங்க ளோடிப் போகும்
நாமென்னசெய்வோமென்று சொல்லி நடுங்குவார்பார்
சூளடா வென்னவிதி யிந்த கூத்து
சொல்லலா மென்பார்கள் அனைவோருந்தான்
ஆளடா யிச்சாலம் அருமை மெத்த
அத்தனார் போகருட கடாக்ஷந்தானே. (65)

(பொ-ரை.) முன்வெட்டுண்ட முண்டத்தைப்பார்த்து அதின் மாமிசத்தைஎடுத்து திகைப்பூண்டு பொடித்துச்சேர்த்து ஐங்கோலத் தயிலமுஞ்சேர்த்து தீவட்டிதனில் வைத்துச் சுற்றி இராக்காலங்களில் மனிதர்கள் வீராப்புடன் வரும்போது மேற்படி தீவட்டியை விளக்கெண்ணைவிட்டுக் கொளுத்தி இந்த தீவட்டியைப் பிடிக்க யாவரும் முண்டங்களாகவே காணப்படுவார்கள். அப்போது கூட்டங்கலைந்து ஓடிப்போகும், இதைப்பற்றி யாவரும் பலவிதமாகப் பேசிக்கொள்ளுவார்கள். (எ-று.)

## மாம்பழ ஜாலம்.

பாடினேனின்னமொரு வித்தை கேளு
பரிவான யேழிஞ்சி வித்தை தானும்
ஆடியே பூத்தயில மாக வாங்கி
அன்பான மாங்கனிதான் கொம்பிலப்பா
சூடியே கனிந்தபழம் கொண்டுவந்து
சுகமாகப் பிழிந்ததனைத் தோலைநீக்கிக்
கூடியே பைங்கோலக் கருவுங் கூட்டிக்
குணமாகத் தயிலத்தி லூரப்போடே, (66)

போடப்பா ஒருநாள் தான் கடந்துவாங்கிப்
பொங்கமுட னிழலுலர்த்தி வைத்துக்கொண்டு
நாடப்பா சபைதனிலே யிருந்து கொட்டை
நலமாக யாவருக்குங் கண்ணிற்காட்டி,
சாடப்பா குழித்தோண்டி வித்தை நட்டுச்
சார்வாகச் சலம்வார்த்து கூடைமூடு
சூடப்பா நாலுதரந் தண்ணீர்வாரு
சுகமாக நாலுதரந் திறந்து மூடே. (67)

மூடவே யிலையாகிக் கொழுந்துமாகி
முக்கியமாய்த் தழையாகிப் பூவுமாகித்
தேடவே பிஞ்சாகிக் காயுமாகி
தெளிவான கனியாகி யுதிரும்பாரு

ஆடவே அனைவர்க்குங் கொடுக்கச் செய்நீ
 அப்பனே நாழிகைதான் மூணே முக்கால்
கூடவே யிதற்குள்ளே மரமு மாகிக்
 குணமான கனியாகி யுதிரும்பாரே. (68)

(பொ-ரை) இன்னமொரு வித்தைசொல்லுகிறேன் கேள்:— ஏரழிஞ்சில் விதையைவாங்கி பூத்தயிலமாக யிரக்கி ஒரு செம்பில் தயிலத்தை வார்த்து ஐங்கோலக் கருவைக்கூட்டி மரத்திலேயே கனிந்த ஒருமாம்பழம்கொண்டுவந்து பிழிந்துவிட்டு அதன்தோலை நீக்கி ஏரழிஞ்சிதயிலத்தில் ஐங்கோலக்கருவுகூட்டி அந்தத்தயிலத்தில் ஒருநாள் ஊரப்போட்டு பிறகு அதையெடுத்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொண்டு சபையில் அந்தக் கொட்டையை எல்லாருக்குங்காட்டி குழிதோண்டி அதில் அதை நட்டுச் சலம்வார்த்து ஒரு கூடையால்மூடி இப்படிநான்குதடவைசலம்வார்த்து நான்கு தடவை திறந்து திறந்துமூடினால், அந்தக்கொட்டை இலை, கொழுந்து முதலியவைவிட்டு பூவு, பிஞ்சு, காய் இவைகளோடு கூடிய செடியாகும் அதை மூன்றேமுக்கால் நாழிகைக்குள் யாவருக்கும் காட்டிவிடவேண்டும், இல்லையானால் அது உதிர்ந்து போய்விடும்.

## மணலை அல்வாவாகச் செய்யுஞ் ஜாலம்.

பாரேநீ பாதம்பிசின் பலந்தா னொன்று
 பண்பான கற்கண்டு பலந்தா னொன்று
கூரேநீ குங்குமப்பூ விராக னரிக்கால்
 கொண்டுவந்து யிம்மூன்றும் பொடியாய்ச்செய்து
சீரேநீ யிதைவேறே வைத்துக்கொண்டு
 சுண்டைப்போ லிருக்குமண லெடுத்துக்காட்டி
தாரேநீ தந்திரமாய் மணலைவிட்டு
 தண்மையாய்க்கூட்டு மூன்று மொன்றுய்த்தானே. (69)

(பொ-ரை.) பாதம்பிசின் பலம் ஒண்ணு, சீனி கற்கண்டு பலம் ஒண்ணு, குங்குமப்பூவிராகனிடை அரிக்கால் இந்தமூன்றையும் மணல்போல தூளாய்ச்செய்து வைத்துக்கொண்டு ஒரு பீங்கான் தட்டில் மணலைப்போட்டு சபையோருக்குக்காட்டி இந்த மணலை அல்வாசெய்கிறேன் பாருங்களென்று ஒரு பெரிய துணியாக மேலேமூடிவிட்டு தந்திரமாக அந்தமணலை கிழேநழுக கொட்டி கையால் தரையில் மெழுகினைப்போல கலைத்துவிட்டு மேலே மூடிய துணியில் ஒரு கள்ளஅறையில் மேற்படி தூள்களை ஒளித்து வைத்திருந்து சாக்கிரதையாக பீங்கானில் கொட்டிக்கொண்டு

ஏதாவது வாயில் வந்தபடி மந்திரஞ்சொல்லி துணியைத்திறந்து சபையோர்களுக்குக் காட்டினால் அதுமணல்போலவே யிருக்கும் அப்பொழுது என் மந்திரத்தை இங்குயாரோ கட்டிவிட்டார்கள், ஆகிலும்பரவாயில்லை இதோ எக்ஷணி மந்திரத்தினால் ஒரு நொடியில அல்வா செய்குறேனென்று கொஞ்சம்ஜலமெடுத்து ஜலத்தை மந்திரித்து விடுகிறதுபோல் கொஞ்சம்ஜலம் விட்டு மூடி கொஞ்ச நேரங்கழித்து திறந்து பார்க்க பாதம்அல்வாவைப்போல கெட்டியாக யிருக்கும் இதைஅறுத்து சபையோர்களுக் கொடுக்கவும். ஆனால் ஜலம் அதிகம் விடாமல் நிதானத்துடன் வார்க்கவேண்டியது (எ-று.)

## இந்திர ஜாலம்,

தானேதா னின்னமொரு ஜாலவித்தை
　　தயவாகச் சொல்லுகிறேன் நன்றாய் கேளு
மானேதான் மாயனென்ற பூனையொன்று
　　மைந்தனே பாவையென்ற கிளியொன்று
தேனேதா னிரட்டைவா லறணையொன்று
　　தெளிவான திகைப்பூடு பூச்சிப்பத்து
கோனேதான் பேய்ப்பீர்க்கன் விதைதானப்பா
　　குணமாக ரெண்டுபலம் நிறுத்துப் போடே (70)

போடவே புல்லாமணக்கு விதைதானப்பா
　　பொங்கமுட னிரண்டுபலம் நிறுத்துப்போடு
ஆடவே யிவையெல்லாம் நறுக்கியப்பா
　　அடைவாகப் பேய்க்கருப்பஞ் சாற்றிற்போடு
நாடவே ஜாமமது கடந்து வாங்கி
　　நலமாக நிலந்தனிலே யுலரப்போடு
கூடவே யாதனையின் பாலை வாங்கி
　　குணமாக ஒரு ஜாம மூறப்போடே. (71)

போட்டப்பா யிவையெல்லாம் பாண்டத்திட்டுப்
　　பொங்கமுடன் பூத்தயிலமாக வாங்கி
தேட்டப்பா யைங்கோலத் தயிலம் நேரே
　　தெளிவாகச் சேர்த்துநீ யரைப்பா யப்பா
தாட்டியா யரைக்கையிலே ரசமும் வெள்ளை
　　தயவாக வகை வகைக்கு கழஞ்சிப்போடு
வாட்டமிலா முப்பூவுங் கழஞ்சி போட்டு
　　வளமாக வரைத்தெடுத்துச் சிமிளில் வையே. (72)

வைப்பா ஜாலக்காள் பூசை செய்து
வளமான நீலகண்டி தியான மோது
கையப்பா ஸ்ரீரீம் கிரீம் கிலீயும் சவ்வும்
கனிவான ஐயும் அவ்வு மூவ்வுங் கூட்டி
அய்யமின்றி யவ்வுடனே கூகூவென்றே
அடைவான நீலகண்டி யம்மா வென்று
பையவே லக்ஷமுரு செபித்தா யானுற்
பாங்கான மையதுவு முயிரதாச்சே. (73)

ஆச்சப்பா நீலகண்டி பூசை செய்து
அடைவாக மையெடுத் தாட்டக்கேளு
பாச்சப்பா நூலேணி யொன்று செய்து
பாங்காக மேற்போடப் படியாய் நிற்கும்
வீச்சப்பா மையெடுத்து கையில் தேய்த்து
விதமாக மண்ணை யள்ளி திசையிற் போடு
கூச்சப்பா வெகுபடைகள் வருகு தென்று
கூறுவாய் வெகுபடைகள் வருகும் பாரே. (74)

பாரடி நீலகண்டி யம்மா நீயும்
பாங்காக நூலேணி தன்னைக் கொள்ளு
சாரடி யென்று நூலேணி தன்னை
சார்பாகச் சொல்லிநீ மேலே போடு
தீரடி யந்திரத்திற் சண்டையாகத்
தெளிவாகச் செய்யென்று தியான மோது
கூரடி படையெல்லாம் போகுதென்று
குணமாகத் தானுரைக்கப் போகும் பாரே (75)

பாரடா நூலேணி மேலே யப்பா
பாங்காக வெகு படைகள் போகும் பாரு
சீரடா வெல்லார்க்குங் கண்ணிற் காணுஞ்
சிறப்பாக யாவருமே புதுமை யென்பார்
கூரடா மையெடுத்துத் திலர்த மிட்டுக்
குணமாக நீலகண்டி தியான மோது
ஆரடா அந்தரத்திற் சண்டையாக
அடைவாக நீநினைத்துக் குலாவச் செய்யே. (76)

செய்யயிலே வானத்திற் முழக்க மெத்த
செயலாக வான்பரிகள் கனைக்கும் பாரு

கையிலேவா ளுடன்கதலி தண்டை வாங்கிக்
கனிவாக மைபூசி வெட்டும் போது
ஐயமின்றிப் பொடிப் பொடியாய் வெட்டிவீசு
ஆள்தலைகள் வருகுதென்பா ரறிந்து பாரு
மையிலே கூழ்ப் பாண்டந்தடவி வெட்ட
மகத்தான ஆனையுட தலை யென்பாரே. (77)

பாரடா பூசினிக்காய் பூசி வெட்டப்
பாங்கான குதிரையுட தலை யென்பார்கள்
காரடா கெச்சக்காய் தன்னிற் பூசி
கடிதாகத் தான்வெட்ட சொல்லக் கேளு
ஆரடா கோடிபடை யிறந்த தென்பார்
அப்பனே இந்திர ஜாலந்தான் ஜாலம்
நேரடா தலைகளெல்லாம் யெடுத்துமூடி
நிச்சயமாய்ப் படைகளெல்லாம் போவென் பாயே. ()

(பொ-ரை.) இன்னுமொரு ஜாலவித்தையைச் சொல்லுகிறேன்கேள்:—மாயப்பூனையும்,(அதாவது வெண்மை நிறமானரோமம் ஒன்றுவதுயிராதசுத்தகரும்பூனை.) பாவை யென்னும் கீறிப்பிள்ளையும், இரட்டைவாலரணையும், திகைப்பூண்டுப்பூச்சிபத்தும், பேய்ப்பீர்க்கன்விதைஇரண்டுபலம், புல்லாமணக்குவிரை இரண்டுபலம் இவைகளையெல்லாம்நறுக்கிப் பேய்கரும்புச்சாற்றில் ஒருஜாமம் ஊறப்போட்டுப் பிறகெடுத்து உலரப்போட்டு பின்புதும்மட்டக்காயையிடித்துச் சாறுவாங்கி அதில் ஒருஜாமம் ஊரப்போட்டு, இவைகளையெல்லாம் ஒரு பாத்திரத்திற் போட்டுக் குழித்தயிலமாகவாங்கி ஐங்கோலத் தயிலத்தைச் சரியாகச்சேர்த்து, ரசம், வெண்மையான சங்குபாஷாணமும் முன் சொல்லியிருக்கும்முப்பூவும் வகை யொன்றுக்கு ஒரு கழஞ்சு சேர்த்து அரைத்து வைத்துக்கொண்டு ஜாலக்காள் பூசை செய்து, ஸ்ரீரீம், கிரீம், கிலீயும், சவ்வும், ஐயும், அவ்வும், உவ்வும், அவ், கூ கூ நீலகண்டியம்மாவென்று லக்ஷமுரு ஜெபித்தால் மைக்கு உயிருண்டாகும், இவ்விதம் நீலகண்டி பூசைசெய்து மையெடுத்து திலர்தமிட்டுக்கொண்டு நூலேணி ஒன்று செய்துப்போடப் படியாய் நிற்கும், அந்தமையை எடுத்து கையில் தடவிக்கொண்டு மண்ணையள்ளித் திசைகளிற் போட்டு வெகு சேனைகள் வருகின்றன வென்றால் அனேக படைகள்வரும், நீலகண்டியம்மா நீ இந்த நூலேணியை கைக்கொள்ளென்று சொல்லி (ஒரு முனையை மேலேபோட்டால் அது மேலே அந்திரத்தில்நிற்கும், அடிமுனையைத் தரையில் ரெண்டுமூளைக

எடுத்து அதில்கெட்டியாகக் கட்டி விடவும் கட்டாவிடில் மேலே யேபோய்விடும்) அந்தரத்தில் சண்டைகள் செய்யென்றுதியானஞ் செய்வையானால் அப்படியே அந்தரத்தில் சண்டைநடக்கும்,படை களெல்லாம் போகுதென்றுசொல்லு, அவ்விதமே அந்தநூலேணி யின்மேல் அனேகபடைகள்போகும்,இது எல்லாருடையகண்களு க்குந் தெரியும்,இதையாவரும் புதுமையென்றே சொல்லுவார்கள் பிறகு அந்த மையை எடுத்துபொட்டிட்டுக்கொண்டுநீலகண்டியின் தியானஞ்செய்து அந்தரத்தில் சண்டை போடுவதாக நீ நினைத் தால் அவ்விதமே ஆகாயத்தில்குதிரைமுதலியவைகள் கனைக்கும், நீ கையில் வாள்பிடித்துக்கொண்டு யாருக்குந் தெரியாமல் வாழை த்தண்டை மடியில் கட்டிக்கொண்டு நூலேணியின் மேலேயேறி தண்டுக்கு மைபூசி வெட்டும்போது சந்தேகமில்லாமல் பொடிப் பொடியாய் வெட்டி வீச ஆளின் தலைகள்வந்து விழும், கலியாண பூசினிக் காய்க்கு தடவி வெட்டினால் ஆனைத்தலை யென்றும், பூசி னிக்காயில்தடவி வெட்டினால் குதிரைத்தலை யென்றும், செச்சைக் காயிற்பூசி வெட்ட அனேக சேனைகள் இறந்ததென்றுஞ் சொல்லு வார்கள். இதுவே உயர்ந்த இந்திரஜாலமாகும், அந்தத்தலைகளை யெல்லாமெடுத்து மூடி போவென்று சொல்ல மறைந்துவிடும் ()

## மயேந்திர ஜாலம்.

என்னப்பா யிதுகளெல்லா மறைந்துபோகும்
எழில்நீல கண்டிநூ லேணியீவாள்
தென்பாகத் திலர்த்தத்தை யழித்துப்போடு
தெளிவாக வின்னமொரு வித்தைகேளு
வன்பான ஜாலக்காள் தியானமோதி
வளமான மையெடுத்துக் கையிற்பூசி
அன்பான மண்ணள்ளித் திசையிற்போடு
அடைவான மலையாகத் தோற்றும்பாரே. (79)

பாரடா அஷ்டகுல பர்வதங்கள்
பாங்கான மகமேரு கைலையப்பா
சீரடா பொதிகைமுதல் மலைகள்தோற்றுஞ்
சிறப்பாக வதிலிருக்குந் தேவர்சித்தர்
நேரடா முத்தரொடு முனிவர் தாமும்
நெடிய விருக்ஷங்கள் குகை வாசல்தானும்
கூரடா விதுகளெல்லாங் கண்ணிற்றோன்றுங்
குணமான போகருட கடாக்ஷந்தானே (80)

(போ-ரை.) அப்படிச் சொன்னவுடனே அவைகளெல்லாம் மறைந்துபோய்விடும். அதன்பின் சிலகண்டியும் நூலேணியைக்கொடுப்பாள். அப்பொழுது பொட்டைக் கலைத்துவிடு. இன்னுமொரு விதையைக்கேள்:—ஜாலக்காலைத் தியானஞ்செய்து மேற்படி மையை எடுத்துக் கையிற்பூசிக்கொண்டு மண்ணையள்ளி அஷ்டதிசைகளிலும் போட அதுவே மலையாகக் காணப்படும். அஷ்டகுலபர்வதங்கள், மகமேரு, கயிலை, பொதிகை இவை முதலாகிய மலைகள் காணப்படும். அவைகளிலிருக்கும் குகைவாசல்களும், சித்தர், முத்தர், முனிவர், நெடியவிருக்ஷங்கள் இவைகளெல்லாம் கண்ணுக்குக் காணப்படும், போகருடைய கடாக்ஷத்தினாலேயேயாகும். (எ-று.)

## சமுத்திர ஜாலம்.

தானென்ற மகேந்திரத்தின் ஜாலமாச்சு
தயவாகச் சாகரத்தின் ஜாலங்கேளு
வானென்ற மையெடுத்துக் கையிற் பூசி
வளமாக மண்ணள்ளித் திசையிற் போடு
கோனென்ற சப்த சாகரமோ ரேழும்
குணமாக முன்காண வருகும் பாரு
தேனென்ற தீவாந்திர மெல்லாந் தோற்றுந்
திருமாலும் லட்சுமியுந் தோற்றும் பாரே. (81)

பாரடா கப்பலொடு படகு தோணி
பலமச்சம் நீர்வாழுஞ் சாதி யெல்லாம்
நேரடா ஜெகத்தோர்க ளெல்லாம் பார்த்து
நிச்சயமா யிவனல்லோ தேவனென்பார்
ஆமடா சாகரத்தின் ஜாலஞ் ஜாலம்
அன்பான ஜாலக்காள் வித்தை யப்பா
தீரடா போகருட கடாக்ஷத்தாலே
திறமான புலிப்பாணி பாடினேனே. (82)

(போ-ரை.) மகேந்திர ஜாலம் முன் சொன்னோம். இனி சமுத்திர ஜாலம் சொல்லுகிறேன்கேள்:—அந்தமையை எடுத்துக்கையிற் பூசிக்கொண்டு ஏழுசமுத்திரங்களும் யெல்லாருக்குந் தென்படவேண்டுமென்று ஜாலக்காளை மனதில் நினைத்து மண்ணையள்ளி அஷ்டதிக்குகளில்போடு ஏழுசமுத்திரங்களும் காணும்படிவரும். தீவாந்திரங்களெல்லாங் காணப்படும், விஷ்ணுவும் லட்சுமியுங் காணப்படுவார்கள், கப்பல், படகு, தோணி, மச்சங்கள், நீரில் வாழப்பட்ட ஜெந்துக்கள் இவைகளெல்லாங் காணப்படும். இவைகளை உலகத்தவர்கள் பார்த்து இவனல்லோ தேவன் என்று சொல்லுவார்கள், இது ஜாலக்காளுடைய வித்தையாகும். (எ-று.)

## சங்கிலி ஜாலம்.

பாடியே யின்னமொரு வித்தை சொல்வேன்
பாங்கான மையெடுத்துக் கையிற்பூசி
ஆடியே நூல்கயறு சங்கிலிதா னப்பா
அறியகெட்ட பாரை மந்திரவாளுங்
கூடியே வாய்மேலே கையை வைத்துக்
குணமாகப் பின்னிழுத்துக் கீழேபோடு
நாடியே யனைவோரும் பார்த்துப் பார்த்து
நலமாக விழுங்கிவிட்டா னென்பார் தானே. (83)

(போ-ரை.) இன்னமொரு வித்தை சொல்லக்கேள்:—மையை யெடுத்துக் கையிற் பூசிக்கொண்டு நூல் கயறு. அல்லது சங்கிலி, கெட்டப்பாரை, பட்டாகத்தி இவைகளில் ஏதேனுமொன்றை சனங்களுக்குக்காட்டி வாய்மேல்வைத்து பின்னே இழுத்துப்போடு யாவரும் அதுகளை விழுங்கிவிட்டானென்று சொல்லுவார்கள். எ-று.

## பட்டண ஜாலம்.

தானென வின்னமொரு வித்தை கேளு
தாங்கி ராக்காலம் வெளியிற் சென்று
மானென வோரிடத்தி லிருந்து கொண்டு
மைந்தனே மையெடுத்துக் கையிற்பூசி
வானென மண்ணள்ளித் திசையிற் போடு
வளமான பட்டணமாய்த் தோற்றும் பாரு
தேனென தெருக்களொடு தெருவுந் தோற்றுந்
திறமாகக் கடைவீதி தோற்றும் பாரே. (84)

பாரடா மனுக்கூட்ட மனந்தந் தோற்றும்
பருத்த கோபுரங் கோவிற் குளமுந் தோற்றும்
சீரடா வேதியர்கள் வீதி தோற்றுஞ்
சிறப்பான ராஜருட சமுகந் தோற்றுங்
கூரடா சதுரங்க சேனை தோற்றுங்
குணமான செந்நெல் முதல் தோப்புந் தோற்றும்
வீரடா போகருட கடாக்ஷத்தாலே
விதமாகப் புலிப்பாணி பாடினேனே. (85

(போ-ரை.) இன்னுமொரு ஜாலத்தைக்கேள்:—யாவருங் காணுதபடி இராக்காலம் ஊருக்கு வெளியிற் சென்று ஒருமறைவான ஓரிடத்திலிருந்துக்கொண்டு மையை எடுத்துக் கையிற்பூசி மண்ணள்ளி திக்குகளில் போடு அப்பொழுது அதுயாவருக்கும் பட்டண

மாய்க்காணப்படும். அதில் தெருவு தெருவாகவும் தெரியும், மனுஷாள் கூட்டம் அனேகர் தெரியும், பெரிய கோபுரம், கோவில், குளம் இவைகள் தெரியும். பிராமணவீதி, ராஜசமுகம், சதுரங்க சேனை, செந்நெல், தோப்பு இவைகளெல்லாங்காணப்படும். எ-று.

இதுவுமது.

பாடினே னின்னமொரு தொழிலைக் கேளு
பண்பான கொடிதனி லைங்கோலஞ் சேர்த்து
நாடியே சாம்பிராணி தயிலங் கூட்டி
ந,ம,சி,வ,ய, ஓங் கிலீம், சவ்வும், ஐயும்
கூடியே சர்வபாசா சாக்குருணி யென்று
குணமாக லக்ஷமுரு செபித்துத் தீரு
ஆடியே யிதை செபித்துத் தூபம் போட
ஆடுவார் புகைபட்ட ஜெனங்கள் தானே. (86)

(போ-ரை.) இன்னுமொரு வித்யையைக்கேள், ஒருகொடியில் ஐங்கோலத் தைலத்துடன் சாம்பிராணியுங் கூடச்சேர்த்து பூசி, ந,ம,சி,வ,ய,ஓம்,கிலீம்,சவ்வும்,ஐயும், சர்வபிசாசு ஆக்ருஷ்ணி என்று லக்ஷமுரு செபஞ் செய்து தூப தீபங் கொடுக்க இந்தப் புகைபட்ட ஜெனங்களெல்லாம் ஆடுவார்கள். (எ-று.)

## குறளி தியானம்.

தானென்ற குறளியுட தியானங் கேளு
தயவாக ஓம் அவ்வும் உவ்வு மவ்வும்
தேனென்ற ஸ்ரீம் உடனே இரீம்முங் கூட்டித்
தெளிவான கிலியுடனே வயநமசி யென்று
கோனென்ற குறளியே வருவாய் நீயும்
குணமாகச் சொன்னதெல்லாஞ் செய்வாயென்று
வானென்ற இந்திரஜால மையை யப்பா
வகையாகத் தானெடுத்துச் சொல்லக் கேளே. (87)

(போ-ரை.) இனிக் குறளி தியானத்தைக்கேள், ஓம், அவ்வும், உவ்வும், மவ்வும், ஸ்ரீரீம், இரீம், கிலியும், வயநமசி ஓம் குறளி வருவாய், வந்து நான் சொன்னதெல்லாஞ் சொல்வாயென்று சொல்லி இந்திர ஜால மையை எடுத்துப்போடு (எ-று.)

## கோகரண ஜாலம்.

கேளப்பா குறளியைத்தான் லக்ஷமோதி
கெணிதமாய்ப் பலிபூசை நடத்தி யப்பா
சூளப்பா மையெடுத்து விரலிற் றெட்டுச்
சுகமாகக் குறளியைத்தான் தியான மோது

வாளப்பா மேலெங்குந் தொட்டா யானல்
வகையாகத் தொட்டவிடங் கிழிக்க வேண்டும்
ஆளப்பா செய்யென்று நினைத்துக்கொண்டால்
அப்பனே தொட்டவிடங் கிழிக்கும் பாரே. (88)

(போ-ரை.) மேற்கண்ட விதமாக லக்ஷம் உரு செபித்து பலி, பூசை, இவைகள் செய்து மையை விரலிற்றொட்டு குறளியைத் தியானஞ்செய்து மேலே எவ்விடங்களிலுந் தொட்டு அப்படி தொட்ட விடமெல்லாம் கிழிக்க வேண்டுமென்று நினைத்தால் அவ்விடங்களெல்லாம் கிழியும். (எ-று.)

## கஜகர்ண ஜாலம்.

பாரென்ற கோகரண மதுதானப்பா
பண்பான கெஜகரணஞ் சொல்லக்கேளு
சேரென்ற மையெடுத்து விரலிற் றொட்டு
செம்மையாய்க் குறளியுட தியானஞ் செய்து
வேரென்ற யிருகாதுந் தொட்ட போது
விதமான விருகாது மாடும் பாரு
தாரென்ற கெஜகரண மிதுதா னப்பா
தயவான போகருட கடாக்ஷந்தானே. (89)

(போ-ரை.) முன்னே சொன்னது கோகரண வித்தை இனி கெஜகர்ணஞ் சொல்லுகிறேன் கேள்:—முன்சொல்லிய மையை எடுத்து விரலிற்றொட்டு குறளியை தியானஞ்செய்து உன்னுடைய இரண்டு காதுகளையுந் தொட்டால் இரண்டுகாதுகளும் ஆடும் இதுவே கெஜகர்ணவித்தையாகும். (எ-று.)

## காளி தியானம்.

தானையா காளியுட தியானங் கேளு
தயவான அரிகாளி யாகாச காளி
ஊனையா ஓடி காளி வீரகாளி
உற்பனமாஞ் சூல கபால காளி
மூனையா மோடிதேவி பூமி காளி
முதன்மையாம் ஓங்காளி வேம் பிடாரி
வானையா மாகாளி போடி காளி
வளமான மந்திரமா காளி யெண்ணே. (90)
எண்ணவே ஓம்-ஆம்-கோதண்ட ரூபி
எளிதான யாளிவா கனத்திலேறி
வெண்ணவே யாசரொடு சபைகள் மெச்ச
விருதலகை கொடியுடன் வேதாளஞ் சூழ

அண்ணவே யாங்கார சத்தி கொண்டு
அடைவாக வாவென்று லக்ஷமோதி
பண்ணவே பூசை செய்து வெள்ளி தோறும்
பாங்காகச் செய்தாக்காற் சித்தி யாமே. (91)

(போ-ரை.) இனிகாளியினுடைய தியானங்கேள்:— அரிகாளி ஒடிகாளி, சூலகபால காளி, மோடிதேவி, பூமிகாளி, ஓம்காளி, ஓம்பிடாரி, மாகாளி, போடிகாளி, மந்திரமாகாளி, ஓம், ஆம், கோதண்டரூபி, ஆளிவாகனததின்மேலேறிச் சபையோர்கள் மெச்ச இருபக்கமும் கொடி முதலியவைகள் பிடித்துக்கொண்டு வேதாளங்கள்சூழ ஆங்கார சத்திகொண்டு, வாவென்று லக்ஷமுரு செபித்து பிறகு வெள்ளிக்கிழமை தோறும் பூசை செய்தால் சித்தியாகும். (எ-று.)

## செப்பிடு வித்தை.

சித்தியாம் வித்தை யொன்று சொல்லக் கேளு
செம்பஞ்சால் பந்தஞ்சு கோல்தானொன்று
வெற்றியாய் சபைதனிலே யிருந்து கொண்டு
விளையாடுங் காளியுட தியான மோது
பத்தியாய் ஜாலமையைக் கோலிற் றேய்க்கப்
பண்பான செம்பஞ்சு பந்து மாடும்
சத்தியாய் யைந்து பந்தும் லக்ஷம் பந்தாய்
சார்வாக ஆடுமப்பா தாழ்வில் லாதே. (92)

(போ-ரை.) இன்னு மொருவித்தையைச் சொல்லுகிறேன் கேள்: செம்பருத்தியின் பஞ்சினாலே செய்த பந்து ஐஞ்சும், கோல் ஒன்றும்கொண்டுவந்து சபையில் இருந்துக்கெண்டு உன்னுடன் விளையாடுகின்ற காளியை தியானஞ்செய்து மேற்படி ஜாலமையைக் கொஞ்சம்கோலிற்றடவிபிறகு நீ கோலைக்கொண்டு இந்த பந்துகளை ஆட்டினால்லக்ஷம்பந்துகள்வந்து ஆடினப்போல்சபையோர்களுக்கு காணும் (எ-று.)

## எட்டி முளை வித்தை.

இல்லப்பா அறுபத்து நாலு மோடி
இதமக வாடுமடா விந்தக்காளி
வல்லப்பா இன்ன மொரு வித்தைகேளு
வளமான மாக்கொடியுஞ் சீலை சேர்த்து
கொள்ளவே சவத்தினுட தயிலங் கூட்டிக்
குணமான யைங்கோலத் தயிலஞ் சேரு
சொல்லவே மூன்றையுந்தான் கருக்கிக்கொண்டு
செம்மையாய்க் குழிக்கல்லி லரைத்திடாயே. (93)

அரைத்தெடுத்துச் சிமிழதனில் வைத்துக்கொண்டு
அடைவாக மந்திரத்தைச் செல்லக் கேளு
திரைய நம்-யங்-வங்- சிங்- சுவாகாஹாவென்று
திரமாக லக்ஷமுரு செபித்துப் போடு
கருத்தடவி எட்டிமுளை தன்னைச் சீவி
கனிவாக மந்திர மாயிரந்தா னோதி
நிரைத்தமகா பூசை பலி பெலக்கச் செய்து
நினைவாக முளையெடுத்துக் கடாவு வாயே. (94)

கடாவுவாய் கடைமுன்னே கடைநில்லாது
கனிவாகச் செக்கடியி லெண்ணெ யில்லை
அடாவுவா யாலையடி சாறு மில்லை
அப்பனே இன்னமொரு வஸ்து பட்டி
கிடாவவே வஸ்துவது மிறங்காதப்பா
கிருபையுள்ள சூளையது வேகாதப்பா
நடாவியே கொல்லனுலை சுண்ணும்புச் சூளை
நலமான செங்கல்லின் சூளைதானே. (95)

தானேதான் மயானமுன்பு பிணம் வேகாது
தயவான மக்கமடி யிசைவு மில்லை
தேனேதான் தச்சனொடு கன்னுன் தட்டான்
தெளிவாகப் பட்டடைமுன் தாக்கிப் போடு
மானேதான் பரிகாரி சிரைக்கும் பக்கல்
மைந்தனே யடுப்படியில் வேகா தென்றும்
வானேதா னிதுகளெல்லாம் ஸ்தம்பனமே செய்யும்
வளமான போகருடகடாக்ஷந் தானே. (96)

தானென்ற வெள்ளாவி முன்னே வைக்க
தயவான வெள்ளாவி வேகா தப்பா
கோனென்ற நெற்களத்தில் ராசிகுன்றுங்
குணமான உப்பதுவும் விளையாமற்றுன்
தேனென்ற ராசியது குரையும் பாரு
தெளிவான மீன்கரையில் மீன் கிட்டாது
ஆனென்ற கொட்டணத்தில் நெற்க ளெல்லாம்
அப்பனே மசியாது கண்டு பாரே. (97)

பாரடா காவிதன்னைச் சுட்டகோலும்
பண்பான முளை செதுக்கி உகாரம் நாட்டி
சீரடா வைங்காயக் கருவும் பூசி
சிறப்பான வெதிரிமலந் தன்னிற்ருக்க

வீரடா முன்பின்னு மடைக்கும் பாரு
விதமாக காரணமாய்ப் போவானையா
கூரடா முளைபிடுங்கி நீரிற்போடக்
குணமாகு மடிந்த தெல்லாம்நிவர்த்தி தானே. (98)

(போ-ரை.) இந்தக் காளி அறுபத்து நான்கு மோடிவித்தைகளை ஆடும். இன்னமொரு வித்தையைக்கேள், கொடியுஞ்சீலையுஞ்சேர்த்துசவத்தின் தயிலமும் ஐங்கோலத் தயிலத்தையுங் கூடச்சேர்த்து இவைமூன்றையுங் கருக்கிக்கொண்டு கல்வத்தில் அரைத்தெடுத்து சிமிளில் வைத்து யநம, யங், ரிங், சிங், சுவாகாஹா வென்று லக்ஷமுரு செபித்து கருவைத்தடவி எட்டி முளையைச் சீவி ஆயிர மந்திரஞ்சொல்லி பூசை பலி முதலியவை செய்து முளையை யடிப்பாய்இப்படி செய்தால் ஒரு கடைமுன் ஒரு கடை நில்லாது, செக்கடியிலும் எண்ணெயிராது, கரும்பாலையில் சாறுமில்லை, திராவகங்கள் இரக்குமிடத்திலும் வஸ்துவும் யிரங்காது, கொல்லனுலை, சுண்ணும்புச்சூளை, செங்கல் சூளை வேகாது, பிணம், தச்சன், கன்னன், தட்டான், இவை முதலியவர்கள் அடுப்பில் ஒன்றும் வேகாதபடி யிவைகளையெல்லாம் ஸ்தம்பனஞ் செய்யும், வெள்ளாவி வேகாது, நெற்களம், உப்பளம், இவைகளில் செய்தால் அவைகள் ராசிகாணமற் குறையும், மீன்கரையில் மீன் அகப்படாது, நெல் கொட்டணத்தில் மசியாது, நாபியைச் சுட்டகோலும், முளைசெதுக்கி அதில் உகாரம் நாட்டி ஐங்கோலக் கருவையும் பூசி எதிரியின் மலத்தில்போட மலசலங்களை யடைத்துவிடும், உடனே முளையை ஜலத்திற் போட்டுவிட அவையெல்லாம்நிவர்த்தியாகிவிடும். (எ-று)

## சண்டை ஜாலம்.

தானென்ற யீஞ்செடியில் காக்கை யென்ற
தயவான மூலிகையொன் றென்ன சொல்வேன்
ஊனென்ற விலங்கையிலே குரங்குமூலி
உத்தமனே மலைதோறு முண்டுமுண்டு
வானென்ற விருமூலி வேணமட்டும்
வகையாகப் பிடுங்கிவந்து சொல்லக்கேளு
ஆனென்ற யீஞ்செடியில் காக்கை மூலி
அப்பனே யொருகடைமேல் சரக்கில் வையே. (99)

வையடா யிலங்கையிற் குரங்கை யப்பர்
வளமான ஒரு சரக்கில் வைத்துப்போடு
பையவே யாருக்குங் காணமற்றான்
பண்பாக விரும்பிலே பதித்துப்போடு

ஐயையோ யிதன்கொடுமை சொல்லப்போமோ
    அப்பனே யிருகடைபா ரடித்துக் கொள்வார்
கையவே தம்பியென்று கூப்பிட்டாலும்
    கடுகிவைதாளென்றே கண்டிப்பாரே. (100)

(போ-ரை.) ஈசஞ்செடியி னடியிலிருக்கும் காக்கைப்பூண்டு என்கிறமூலிகையும், மலைகளிலெல்லாம் யிருக்கப்பட்ட குரங்கு மூலிகையும்யிவ்விரண்டையும்வேண்டியவரைக்கும்பிடுங்கிக்கொண்டுவந்துயிவைகளிலொன்றை ஒரு சரக்கில் தடவி ஒரு கடைமேல் வைத்துகுரங்கு மூலிகையை யாருக்குங்காணுமல் மற்றொருகடையின்ஒருசரக்கில் வைக்கவும், அப்படி வைக்கப்பட்டது யாருக்கும் தெரியாமலிருக்கவேண்டும், அல்லது யிரும்பின்கீழ் வைத்து புதைத்துப்போட யிதனுடைய கொடுமையை சொல்லக்கூடுமா யிரண்டு கடைக்காரர்களும் அடித்துக்கொள்வார்கள், தம்பியென்று கூப்பிட்டாலும் கடுமொழிகள்சொன்னதாகவே சண்டை போடுவார்.எ-று.

## மாடன்மந்திரம்.

பாரடா நஞ்சுண்டு மரித்துப் போன
    பரிவான மனிதரைத்தான் தகனம் பண்ணிச்
சீரடா காடாற்று முன்னே தானுஞ்
    சிறப்பான கரியதிலே யெடுத்துக்கொண்டு
வீரடா வெங்கோலக் கருவைத் தொட்டு
    விதமாக வான்போலே மாடன்கீறித்
தீரடா முகமதுதான் கதித்த தாகத்
    திறமாகச் சுவாலைதனி லெழுதிப் போடே. (101)

போடப்பா வெதிரியின்பே ரதன்கீழ் நாட்டிப்
    பொங்கமுடனுகாச மாடனேது
கூடப்பா லக்ஷமுரு செபித்துப்போடு
    குணமான மந்திரந்தான் சொல்லக் கேளு
நாடப்பா ஓம்-நமோ-பகவதே
    நலமாக ஓம்-படு-சுவாகஹா வென்று
ஆமப்பா பூசை பலி பெலக்கச் செய்து
    அடைவாக மந்திரந்தான் ஓதக்கேளே. (102)

கேளடா காரியத் தகட்டி லப்பா
    கெணிதமாய் மந்திரத்தை எழுதிப்போடு
சூளடா வெதிரியுட பேரை நாட்டுஞ்
    சுகமான வெங்காயங் கோலஞ் சேர்த்து

ஆளடா சுடலையுட கருவுங் கூட்டி
அப்பனே மத்தித்துத் தகட்டிற் பூசி
வாளடா பூசைபலி பலக்கச் செய்து
வளமாக மாடனைத்தான் தியான மோதே. 103

ஓதியே மாடனைத்தான் கட்டிக்கொண்டு
ஒளிவான வாகாச மாடானீயும்
வாதியாக் கல்லிந்தா விந்தா வென்று
வகையாகச் சொல்லியபின் கல்லு தானும்
ஆதியாற் றகட்டின்மேல் வைத்தா யானல்
அப்பனே கல்லதுவு மளவிராது
பாதியே யொருகோடி பூத மெல்லாம்
பார்த்திருக்கத் தானெறியுங் கல்லு தானே. 104

தானேதான் மண்ணெடுத்துச் சாலைக்கற்கள்
தயவாக மாட்டெலும்பு செங்கல் முட்டை
மானேதா நவபாண்ட மரிசி யுப்பு
மணமான மிளகு பொடி தீட்டுச்சீலை
வானேதான் குப்பையொடு கண்டதெல்லாம்
வாரியே தானெரியு மில்லந் தன்னில்
கோனேதா னெதிரிபோ மிடங்க ளெல்லாங்
கொற்றவனே யவனுடனே போகும் பாரே. 105

பாரடா சத்துருவும் வணங்கி வந்தால்
பண்பான மாடனை நீ யழித்துப் போடு
வீரடா மாடானீ கல்லைத் தானும்
விதமாகத் தாவென்றே யெடுத்துப் போடு
தீரடா சாணமிட்டு மெழுகிப் போடு
திறமாகச் சக்கரத்தைக் கழுவு வாய் நீ
கூரடா ஜலந்தனிலே விட்டுப் போடு
குணகாக மாடனைத்தான் பூசை செய்யே. 106

போ-ரை. விஷந்தின்று இறந்துபோன மனிதனை தகனம்பண்ணிக் காடாற்றுமுன்பே அதிலுள்ள கரியை எடுத்துக்கொண்டு அதில் ஐங்கோலக் கருவைப்பூசி ஆகாயம்போல் மண்டையை எழுதி முகம் வீங்கினுப்போல் சுவாலையில் எழுதி, எதிரியின் பேரை அதின்கீழ் எழுதி ஆகாய மாடனைத் துதித்து ஒரு லக்ஷம் உரு செபிக்கவும், அதற்கு மந்திரம் ஓம் நமோ பகவதே ஓம் படு சுவாகாஹா வென்று சொல்லி பூசை பலிகொடுக்க வேண்டும், பிறகு காரியத்த

கட்டில் மந்திரத்தை எழுதி எதிரியின் பேரைநாட்டி ஐங்கோலஞ் சேர்த்து சுடலைக்கருவையுங் கூட்டி எல்லாம் ஒன்றாய்ச்சேர்த்து த கட்டிற்பூசி மாடனைத் தியானஞ்செய்து உன்வசமாக்கிக்கொண்டு, ஓ ஆகாசமாடா கல் இந்தாவென்று சொல்லிய பின்னே கல்லைத் தகட்டின்மேல் வைத்தால் கோடி பூதங்கள் பார்த்திருந்தாலும் கல் லுகளைவாரி எரியும், மண்ணும், சாலைக்கற்களும், மாட்டெலும்பு, செங்கல் முட்டை, நவபாண்டம், அரிசி, உப்பு, மிளகுபொடி, தீட் டுச்சீலை, குப்பை இவைகளோடுகண்டவைகளையெல்லாம் வாரிவாரி எதிரிகள் வீட்டில் எரியும், எதிரிகள் போகின்ற இடங்களிலெல் லாம் அவைகள் கூடவே போகும், பகைவனானவன் வணங்கிவந்தா ல் மாடனை அழித்துவிட்டுக்கல்லைக்கொடுவென்று கேட்டு சரணஞ் செய்து எழுதிய சக்கரத்தைக் கழுவிப்போட்டு மாடனைப் பூசை செய். எ-று.

## கொள்ளி ஜாலம்.

செய்யவே யின்னமொரு வித்தைகேளு
சொன்ன கொள்ளி வாயினுட ஜாலமப்பா
பையவே சிவ வசி என்று லக்ஷம்
பாங்காகத் தான் செபித்து பூசைசெய்து
உய்யவே அக்கினியைத் துணியிற்சுற்றி
உத்தமனே தகட்டி லக்ஷரத்தைக்கீறிக்
கையவே யைங்காய மைங்கோலந்தான்
கனிவாகச் சுடலையுட கருவும்பூசே. 107

பூசியே யெதிரியுடபேரை நாட்டிப்
பொங்கமுடன் பூசித்து கொள்ளிவாய்க்கு
ஆசியே பந்தெடுத்து தகட்டில் வைத்தே
யப்பனே இருதலைக் கொள்ளிதானும்
வாசியே சத்துருவின் மனைகள்தோறும்
வைத்து நீகொளுத்தென்று தியானமோது
காசியே கொளுத்துமடா திரியும் பந்தும்
கடிதாகக் கொளுத்திவிடுங் கண்டுபாரே. 108

போ-ரை. இன்னுமொரு வித்தைகேள்:—இது கொள்ளிவாய் ஜாலமாகும், சிவ வசி என்று லக்ஷம்செபித்துப் பூசைசெய்து அக் கினியைத் துணியிற்சுற்றி தகட்டிற்கீறி அக்ஷரத்தைப்போட்டு ஐங் கோலம் சுடலைக்கு இவைகளைப்பூசி எதிரியின் பெயரை எழுதி பூ சைசெய்து கொள்ளிவாய்க்கு பந்து எடுத்து தகட்டில்வைத்து இ ருதலைக் கொள்ளீபகைவர்களுடைய வீடுகளைக் கொளுத்தென்று சொல்லித் தியானஞ்செய், அதுவும் அப்படியே கொளுத்திவிடும்.

## மலக்குட்டி தியானம்.

பாரடா மலக்குட்டி தியானங்கேளு
பாங்கான ஓம்-இரீம்-வா-வா-வென்று
கூரடா மலக்குட்டிச் சாத்தானென்று
குணமாகத் தான்வைத்து பூசைகொண்டு
வீரடா நான்சொல்லும் வேலைகேட்டு
வீணாக மலமதனை வாரிநீயும்
சேரடா நானினைத்த விடத்திற்போடு
செப்பியிது ராசபலி பெலக்கச்செய்யே. 108

போ-ரை. மலக்குட்டி யென்னும் குட்டிச்சாத்தானுடைய தியானத்தைக்கேள்:—ஓம், இரீம், வா, வா குட்டிச்சாத்தானென்று சொல்லி பூசைசெய்து நான் சொல்லும் வேலையைக்கேட்டு மலங்களையெல்லாம் வாரி நான் நினைத்தவிடத்தில் போடு என்றுசொல்லி ராஜ பலிபூசை செய்ய கைகூடும். எ-று.

## மலக்குட்டி ஜாலம்.

செய்யவே மந்திரத்தைத் தகட்டிற் கீறிச்
செம்மையா யைங்காய மைங்கோலஞ் சேர்த்து
வையகத்திற் சுடலையுட கருவுங்கூட்டி
வளமாக மத்தித்துத் தகட்டிற்பூசிப்
பையவே யெதிரியின்பேர் தகட்டில்நாட்டி
பாங்காக மந்திரத்தை லக்ஷமோது
ஐயமின்றி பூசைபலி பெலக்கச்செய்து
அப்பனே மலமெடுத்துத் தகட்டில் வையே. 110

வைக்கயிலே மலமிந்தா மலக்குட்டி யென்று
வைத்தல்லோ மந்திரத்தைத் தியானஞ்செய்நீ
வலக்கையிலே மலமதனை வாரிக்கொண்டு
வகையாக நீநினைத்த விடங்கள் தோறுஞ்
சொக்கயிலே தகடெடுத்துக் கழுவிப்போடு
சொகுசாக போகுமடா தீர்க்கமாக
உலக்கையிலே யிதுவல்லோ வுலகபேதம்
உத்தமனே மலக்குட்டிச் செய்கைதானே. 111

போ-ரை. மேற்படி மந்திரத்தைத் தகட்டிற்போட்டு ஐங்கோலம் இவைகளைச் சேர்த்து சுடுகாட்டுக் கருவையுஞ் சேர்த்து மர்த்தித்து எதிரியின்பேரை தகட்டில்போட்டு மந்திரத்தை லக்ஷமுரு

செபித்து பூசை பலி முதலியவை செய்து மலத்தை யெடுத்து தகட்டில் வைத்து ஒ மலக்குட்டி மலம் இந்தா என்று சொல்லி முன் சொல்லி யிருக்கும் மந்திரத்தைத் தியானஞ்செய்து பிறகு வலது கையில் மலத்தைவாரி, நீ நினைத்த விடங்களெல்லாம் போடுயென்று சொல்ல அங்குபோடும். பிறகு எல்லாம் நன்றாய்ச் சேர்த்துத் தகட்டை எடுத்துக்கழுவிவிடு, இதுவே மலக்குட்டியின் செய்கையாம். எ-று.

## கவச மந்திரம்.

தானேதான் கவசமொன்று சொல்லக்கேளு
தயவான ரீங்காரம் வெள்ளி தகட்டில்
மானேதான் இம்-உம்-கம்-ரமாங்-சிங்கென்று
மைந்தனே யாயி-டாகினி-மாங்காளி
ஊனேதான் விஷ்ணுசகோதரி சர்வாணி
உமைதேவி பராசத்தி ந, வ, சி யென்று
கோனேதான் லக்ஷமுரு செபித்துப்போடு
கொற்றவனே சத்திசிவ பூசையாச்சே. 112

செய்யடா தியானமிட்டு விபூதிபூசச்
செகதலத்தில் ஏவல் முதல் பிசாசு பூதம்
பையவே புதையிலே வேர்பிடுங்கிப்
பகர்ந்த கருத்தடவிச் சக்கரங்களாட்டில்
நையவே பார்வையுடன் குரளிகூட்டி
நலமாக மற்றுமுள்ள சூனியங்கள்
தையவே கல்லெறிக்கு நீக்குமப்பா
கனிவாக மந்திரத்தை எழுதிக்கட்டே. 113

போ-ரை. கவசமந்திர மொன்று சொல்லுகிறேன்கேள்:—ரீங்காரம்: இம், உம், கம், ரமாங், சிங், ஆயி, டாகினி, மாகினி, விஷ்ணுசகோதரி, சர்வாணி, உமை, தேவி, பராசத்தி, ந, வ, சி என்று வெள்ளிக்கிழமைகளில் லக்ஷமுருசெபித்து சத்திபூசை, சிவபூசை இவைகளைச் செய்து விபூதிப்பூசி ஜெகதலத்தில் ஏவல், பிசாசு, பூதம் இவைகளுக்கு வேர்பிடுங்கி கருவைத்தடவி பார்வை, குரளிஇவைகளைக்கூட்டி சக்கரங்கள் போட்டு ஆட்டினால் மற்றுமுள்ள சூனியங்கள், கல்லெறி இவைகள் நீங்கும். ஆனால் மந்திரத்தை தகட்டில் எழுதிகட்டுவாய் எ-று.

## ஒண்டி மூலிகை.

கட்டப்பா மூலிகையொன்று சொல்லக் கேளு
கனிவாக ஒண்டியுட மூலிக்கே தான்

கிட்டப்பா அமாவாசைக் கிராண காலங்
கிருபையுள்ள அருக்க ஞளே தோன்றில்
நெட்டப்பா பொங்கல்பலி பூசை செய்து
நேராக வேரெடுத்துக் கட்டிக்கொண்டால்
பட்டப்பா பார்வைமுத லெது வானும்
பரத்திலணு காமலது அகன்று போமே. 114

(போ-ரை.) ஒரு மூலிகையைச்சொல்லுகிறேன் கேள்:—அதாவது ஒண்டிமூலிகை யென்று ஒன்றுண்டு அதைக்கண்டு அதற்கு ஞாயிற்றுக்கிழமையும் அமாவாசையும் கலந்த நாளில் கிராணம் பிடித்திருக்கும்போது காப்புகட்டி பொங்கல், பலி, பூசை யிவைகளைச் செய்துவேர்பிடுங்கி கட்டிக்கொண்டால் பார்வைமுதல் யாவுந்தீரும். எ-று.

## பார்வை மை.

போமப்பா ஆமை யொன்று மண்தவளையொன்று
பொங்கமுடன் கன்னிகோழி முட்டையொன்று
தாமப்பா புதைத்தெலும்பு பலந்தான் ரெண்டு
தயவான ஈசலது பலந்தான் ரெண்டு
நாமப்பா நிலவாகை விதைதா னப்பா
நாயகனே பலமிரண்டு நிறுத்துப்போடு
ஆமப்பா மாக்கொடிதான் விராகன் மூன்று
அடைவாகப் பூத்தயில மாக வாங்கே. 115

வாங்கியே தயிலத்தை யெடுத்துக் கொண்டு
வளமான குழியம்மி தன்னிற் போடு
தாங்கியே யஞ்சனக்கல் விராக னொன்று
தான்போடு ஆள்காட்டி முட்டை நெய்யிற்
பாங்கியே கொஞ்சமது கூடவிட்டுப்
பரிவாக ஒருசாமந் தானரைத்துக்
காங்கியே சிமிழில் வைத்து அனுமாருக்குங்
கனிவோடு அஞ்சனிக்கும் பூசை செய்யே. 116

செய்யப்பா மையெடுத்துப் பார்க்கும் போது
செயலான களவுமுத லேவலப்பா
வையப்பா தொழில் முறையும் தெய்வ பூதம்
வளமான பிசாசு ராக்ஷத கணங்கள்
பைய்யப்பாமோடிதா னொருவன் செய்தால்
பாங்காக யவன் செய்கை தோற்றமாகும்
கையப்பா யிதுபார்வை மைதானப்பா
கனிவாகச் சொல்லுமடா கருத்தாய்த் தானே. 117

போ-ரை. பார்வை மைசெய்யவேண்டில் ஆமையொன்று, மண்தவளை யொன்று, கன்னிகோழியின் முட்டையொன்று, புதைத்தபிணத்தின் எலும்பு இரண்டுபலம், ஈசல் இரண்டுபலம், நிலவாகை விரை இரண்டுபலம், மாக்கொடி மூன்று விராகநிடை இவைகளையெல்லாம் பூத்தயிலமாகவாங்கி அந்தத் தயிலத்தைக் கல்வத்திலிட்டு அஞ்சனக்கல் விராகநிடை ஒன்றும், ஆள்காட்டி குருவி முட்டை கருவு கொஞ்சம்கூடவிட்டு ஒருசாம மரைத்து சிமிளியில்வைத்து அனுமாருக்கும், ஆஞ்சனுதேவிக்கும் பூசைசெய்து, அந்த மையைப் போட்டு பார்க்கும்போது, களவு, ஏவல், தொழில்முறை தெய்வம், பூதம், பிசாசு ராக்ஷசகணங்கள், தோன்றும், ஆகையால் இது பார்வை மையாகும். எ-று.

## வனமடக்கம்.

தானேதா னின்ன மொன்று சொல்லக்கேளு
தயவாக அவையடக்கம் அங்க மடக்க
மானேதா னங்கமேற் பங்கமடக்க
மைந்தனே வழியடக்கச் சுவாகஹா வென்று
கோனேதான் தண்ணி மிட்டான் கிழங்குக்கப்பா
கொற்றவனே யருக்கநாள் காப்புக் கட்டி
வானேதான் பொங்கல் பலி பூசையிட்டு
வளமான மந்திர மாயிரந்தா னேதே. 118

ஓதியே பிடுங்கிமுன் கருவைப் பூசி
ஓகோகோ காலடியில் மிதுத்துக் கொள்ளு
சோதியே யவனம டவயதி ருது
சுறுக்காக மந்திரத்தை யோதி நில்லு
ஆதியே யவ்னமது வெட்டும் பாரு
அந்திறத்திற் செல்லாது அதீத வித்தை
வாதியே போகருட கடாக்ஷத்தாலே
வளமான புலிப்பாணி பாடினேனே. 119

போ-ரை. இன்னுமொரு வித்தை சொல்லுகிறேன், அதாவது அவையடக்கம், அங்க அடக்கம், வழியடக்க சுவாகஹா வென்று சொல்லி தண்ணீர் விட்டான் கிழங்குக்கு ஆதிவாரத்தில் காப்பு கட்டி பூசைபலி செய்து மந்திரத்தை ஆயிரம் உரு செபித்துப் பிறகு அந்த வேரைப் பிடுங்கிக் கருவைப்பூசி காலடியில் மிதித்துக் கொண்டு வனத்தைப்பார்த்து மந்திரத்தைச்சொல்லவனமடக்கமாகிவெட்டும். இந்த வித்தை ஒருபோதும் பொய்க்காது, இதுமகாஅருமையான வித்தை இதைத்தொழிலாளி யானால் சுலபத்தில் கண்டுக்கொள்ளலாம் போகருடைய கடாக்ஷத்தினல். எ-று.

## பாதாள ஆஞ்சனம்.

பாடினே றூசி யென்ற காந்தம் நீலம்
பண்பான வூமைகையில் மஞ்சளப்பா
ஆடியே வேகை வெத்திலையுங் கூட
அடைவான செங்கழுநீர் வேரு மையா
நாடியே தலைமஞ்சன் மாவுங் கூட்டு
நலமான கோரோசனை குங்குமப்பூ
கூடியே வகைவகைக்கு விராக னொன்று
குழியம்மி தனிலரைக்க வகையைக் கேளே 120

கேளடா மாடனென்ற புறாவின் ரத்தம்
கெணிதமாய் யொன்றறுத்துக் கூடவாரு
சூளடா சிவந்தபசு வெண்ணெ யப்பா
சுகமாக விராகனது பனி ரெண்டாகும்
நாளடா மூன்றுநா ளரைத்தெடுத்து
நாயகனே சிமிழில் வைத்துக் காளிமுன்னில்
வாளடா புதைத்தெடுப்பாய் நாளெட்டாகும்
வளமான புழுகுடன் சவ்வாது சேரே. 121

சேரப்பா வகைவகைக்கு விராக னொன்று
சீராக மத்தித்து மந்திரந்தான்
பாரப்பா சர்வலோக வசிகரி ஓமென்று
பண்பாக யாயிரத் தெட்டுஞ்செபித்து
நேரப்பா திலர்தமிடு புருஷர் பெண்கள்
நிச்சயமாய்க் கேட்டதெல்லா மீவா ரப்பா
கூடப்பா பகையெல்லாம் நசித்துபோகுஞ்
குற்ற மொன்று யில்லையடா ஜெகத்தில்தானே. 122

போ-ரை. ஊசிக்காந்தம், நீலம், வூமைகைமஞ்சள், தேவடியாள் கைவெற்றிலை, செங்கழுநீர்வேர், தலைமஞ்சம்மாவு, கோரோசனம், குங்குமப்பூ, இவைகள்வகைவகைக்குவிராகநிடையொன்று கல்வத்தில்போட்டுமாடப்புறாவின் ரத்தத்தையுங் கூடவார்த்து சிகப்புநிரமாகிய பசுவின்வெண்ணெய் பனிரண்டுவிராகனெடை கூடபோட்டு மூன்றுநாள்அரைத்தெடுத்து சிமிளில் வைத்து காளிமுன்னில்புதைத்து எட்டுநாளானபின்பு எடுத்து சவ்வாது புனுகு இவைகளை வகைக்கு விராகனிடை யொன்று அத்துடன் சேர்த்து மர்த்தனஞ்செய்து சர்வலோகவசிகரி கிறீம், ஓம் என்று ஆயிரத்தெட்டு உருசெபித்து திலகமிட புருஷர்களும், பெண்களும் கேட்டவைகளெல்லாவற்றையும் கொடுப்பார்கள், விரோதங்களெல்லாம் ஒழிந்துபோகும், குற்றம் ஒன்றுமில்லை. எ-று.

## இதுவுமது.

தானப்பா வேர்வெடித்த பலாவின்கொட்டை
தான்கருக்கி விராகநிடை பத்த தாகும்
தேனப்பா அஞ்சனப் பாஷாணமொன்று
தெளிவாகக் குழியம்மிதன்னிற் போட்டு
வானப்பா விளக்கெண்ணெய் தன்னிலாட்டு
வளமாக ஒருசாம மரைத்த பின்பு
கோனப்பா சிமிழில்வைத் தஞ்சனிக்கும்
குணமான வனுமார்க்கும் பூசைசெய்யே. 123

செய்தபின்பு கையிலிட்டு யெவரும்பார்க்கச்
செகத்திலுள்ள நிதிகளெல்லாங் கண்ணிற்காணும்
எய்தபின்பு வேண்டியதை யெடுத்துக்கொள்ளு
இதமாக இகபரத்துக் குதவியாகும்
உய்தபின்பு நாழிகைதான் பாதாளத்தில்
உத்தமனே நிகழ முன்னூருமாகும்
பெய்தபின்பு யிம்மைதா னுறுதிமெத்த
பார்த்தவர்க்குப் பலனுண்டு பலிக்கும்பாரே. 125

**பொ-ரை.** வேர்ப்பலாக் கொட்டையைக் கறுக்கினது விராக னெடைபத்து, அஞ்சனப்பாஷணம் ஒன்று இவைகளைக் கல்வத்தி ட்டுவிளக்கெண்ணெய் வார்த்து ஒருஜாமமரைத்து சிமிளில் வைத் துக்கொண்டு அனுமாருக்கும், அஞ்சனுதேவிக்கும் பூசைசெய்து அதைகையிலிட்டுக்கொண்டு யார்பார்த்தாலும் சர்வ நிதிகளும்தோ ன்றும், அப்பொழுது வேண்டியதை எடுத்துக்கொள், இது இம்மை க்கும் மறுமைக்கும் உதவியாகும், இந்த மை செய்துமுடித்து, பிற கு முன்னூருநாழிகை பூமியில் புதைத்துவைத்துபின்பு, உபயோகி க்க மெத்தவும்சீக்கிரத்தில் வேலைசெய்யும். இந்தமையானது பழக பழக உறுதியாகும்.

## குறிசொல்ல.

பாரடா ஆடையொட்டி சமூலமப்பா
பண்பான நின்றிடந் தீஞ்சமூலி
சேரடா கருச்சீலை யிந்தமூன்றுஞ்
செம்மையாய்க் கருக்கியல்லோ மைபோலாட்டி
சீரடா சுடலையென்ற தயிலஞ்சேர்த்துச்
செவ்வியதா யரைத்துநீ சிமிளில்வைத்து
வீரடா அனுமாரைத் தியானஞ்செய்து
விதமாகத் திலகமிட்டுக் குறிதான்சொல்லே. 125

சொல்லப்பா அஞ்சனு தேவிபுத்ரா
    சொருசான வாய்வுமைந்தா புருஷரூபா
வல்லவா அனுமந்தா ராம தூதா
    வந்துகுறி சொல்லென்று வணங்கிக்கொள்ளு
இல்லப்பா நினைத்ததெல்லாஞ் சொல்வான்பாரு
    என்னசொல்வே னவனுடைய குறிதான்மைந்தா
நல்லப்பா போகருட கடாக்ஷத்தாலே
    நலமாகப் புலிப்பாணி பாடினேனே. 126

(போ-ரை.) ஆடை யொட்டி சமூலமும், நின்றிடம் தீய்ந்த மூலியும், கருச்சீலையாகிய இந்த மூன்றையும் சுடலைத் தயிலத்தைச் சேர்த்தரைத்து சிமிழில்வைத்து அனுமாரைத் தியானஞ்செய்து மையிட்டு குறிசொல்ல ஆரம்பித்து, அஞ்சனுதேவி புத்திரா! வாயு மைந்தா! புருஷ ரூபா! வல்லவா! அனுமந்தா! ராமதூதா! நீவந்து குறிசொல்லு என்று வணங்கிக்கொள், அப்போது நினைத்தஎல்லாவற்றையும் சொல்லுவார், இதுபோகருட கடாக்ஷத்தால் புலிப்பாணி பாடினேன். எ-று.

## ஈடு முறை.

பாடியே யீடொன்று சொல்லக் கேளு
    பண்பான அடைக்கலான் குருவி ஆண்தான்
ஆடியே பிடித்துவந் தபானந் தைத்து
    அதின் வாயில் லூசியென்ற காந்தம் வெள்ளை
கூடியே வாயைநீ தைத்துப் போடு
    குணமான சிறுபாண்ட மதிலே விட்டு
நாடியே வஸ்துவொரு படிதான் வார்த்து
    நலமாக வாய்மூடி சீலை செய்யே. 127

செய்தபின் படுப்பேற்றித தீயை மூட்டி
    சிறப்பாக ஒருசாதி விறகினாலே
வைத்துமே வற்றியபின் பெடுத்துக் கொண்டு
    வளமான குழியம்மி தன்னிற்போட்டு
கொய்தபின்பு ரோமமுட னஸ்தி தள்ளிக்
    குலவுமாக் கொடியும் ஊமத்தை வித்தும்
பைதபின்பு சுழல்வண்டு மின்னிற் பூச்சிப்
    பருத்த குழியானை யிந்திர கோபந்தானே. 128

தானென்ற தொட்டாக்கால் வாடிவேறுந்
தயவான நாயுருவி கையான் வேறுந்
தேனென்ற திகைபூடு பூச்சி யப்பா
திறமாக வகை வகைக்கு விருகனென்று
கோனென்ற ஈப்புலியு மீயுங்கூடக்
கொற்றவனே ஆடையொட்டி ஐவிரலி கஞ்சா
வானென்ற பேய்க்கருப்பஞ் சாற்றி ஞலே
வகை வகைக்குச் சரியிடையாய் விட்டு ஆட்டே. 129

ஆட்டப்பா குளிகையது துவரை போலே
அப்பனே செய்து நீ நிழலுலர்த்தி
காட்டப்பா மந்திரந்தான் சொல்லக் கேளு
நமோ இங் இங் சிங் சிங் சுவாகஹா வென்று
மாட்டப்பா விந்துவிட்டுக் குழைத்து நீயும்
மங்கையருக் கறுசுவையில் தாம்பூலத்திற்
கூட்டப்பா மங்கையர்கள் விரக மீறிக்
கொம்பனையார் தாமணைய வருவார் பாரே. 130

(போ-ரை.) ஈடு ஒன்று சொல்லுகிறேன் கேள்:—ஆண் அடைக்கலான் குருவிபிடித்து வந்து அபானவாயை தைத்து அதின்வாயில் ஊசிக்காந்தமும், சங்குபாஷாணமும்வகைக்கு விருகனிடைப் போட்டு வாயையும் தைத்துவிட்டு ஒரு சிறிய பாண்டத்தில் வைத்து ஒருபடி கள்ளுவார்த்து வாயைமூடி மண்சீலை செய்து பிறகு அதை அடுப்பில் வைத்து ஒருசாதி (அதாவது ஒரேமரத்து)விறகிஞல் எரித்து வற்றியபின் எடுத்துக்கொண்டு கல்வத்திலிட்டு மயிர் எலும்பு இவைகளைத்தள்ளி மாவும்கொடியும், ஊமத்தைவிதையும் சுழல்வண்டு, மின்னல்பூச்சியும், *குழியானையும் 1இந்திரகோவமும், தொட்டாற் சுருங்கியும், நாயுருவிவேரும், கரிசலாங்கண்ணி வேரும், 2திகைப்பூடுப் பூச்சியும், ஈப்புலியும், ஈயும், ஆடையொட்டியும், ஐவிரலிற்கெஞ்சாவும், இவைகள் வகைக்கு விராகனிடை ஒன்ருக பேய்க்கரும்பு சாற்ருல் அரைத்து துவரை பரிமாணமாக மாத்திரை செய்து வைத்துக்கொண்டு நமோ இங், இங், சிங், சிங், சுவாகஹாவென்று மந்திரஞ்சொல்லி விந்து விட்டுக் குழைத்து அறுசுவை பதார்த்தத்துடன் கலந்து பெண்களுக்குக் கொடுத்துவிட்டால் அவர்கள் மன்மத விகாரமீறி வருவார்கள்.

---

* குழியானை என்பது பண்ணிப் பூச்சி

1இந்திர கோவப்பூச்சி என்பது-அற்பிசி-கார்த்திகை மாதங்களில் மழை பெய்து விட்டவுடன் கொல்லை மேடுகளிலும் செங்கட்டு நிலங்களிலும் புளியங்கொட்டை பருமனுக மேயும், சிகப்பு பட்டுபோல நிறம் உள்ளது பட்டுப் பூச்சி என்பார்கள்.

2திகைப்பூடும்பூச்சி யென்பது கார்த்திகை, மார்க்கழி மாதங்களில் மஞ்சம்பில் விழல் இவைகளில் எச்சல் கோழையுடன் முழிந்தாப்போல செண்டு செண்டாயிருக்கும், அதற்குள்ளிருக்கும் பூச்சி திகைப்பூடுப்பூச்சி.

## பிரிவு.

பாரடா பிரிவு செய்யுங் குளிகையொன்று
பாடுகிறே னன்றாக சொல்லக் கேளு
வாரடா செத்தாடு உண்ணி யப்பா
வளமான விடத்தலமாம் பட்டை கூட்டி
நீரடா தண்ணீர் விட்டரைத்து மைபோல்
நினைவாகத் துவரைபோற் குளிகைசெய்து
கூரடா நினைத்தவுடன் முறிந்து போகும்
கொற்றவனே யறுசுவையில் தாக்கிப்போடே. 131

(போ-ரை.) பிரிவுசெய்யுங் குளிகை யொன்றுசொல்லுகிறேன் செத்த ஆட்டு உணியையும், விடத்தேர்பட்டையையும் தண்ணீராலரைத்து துவரைபோல் மாத்திரைசெய்து அறுசுவையில் கொடுக்க நினைத்தவுடன் முறிந்துபோகும். எ-று.

## வசியம்.

போடவே யின்னமொன்று சொல்லக் கேளு
புகன்றபொன் னுவாரை மூலம் வாங்கி
ஆடவே கருக்கியதை நிழ லுலர்த்தி
அப்பனே குழித்தயில மாக வாங்கி
கூடவே குழியம்மி தன்னில் விட்டுக்
குக்குடத்தின் வெண்கருவுங் கூடவிட்டுச்
சாடவே மாக்கொடியும் புழுகும் பூரம்
தக்க கோரோசனையும் வகைக்கு வொன்றே. 132

ஒன்றான வகைவகைக்கு விராக னொன்று
ஒழுங்காகத் தானரைத்துச் சிமிழில் வைத்து
நன்றாகத் திலர்தமிடப் புருஷ ரெல்லாம்
நாயகியாள் கேட்ட தெல்லா மீவார்பாரு
ஒன்றாக வவர்வந்து வாசல் காப்பார்
உனக்கடிமை யாகவல்லோ வேலை செய்வார்
பன்றாக வவளையே காணு விட்டால்
பதறுவார் சிணுங்குவார் கோபிப்பாரே. 133

(போ-ரை.) இன்னொன்று சொல்லுகிறேன்கேள்:—பொன்னுவாரை வேரை எடுத்து நிழலுலர்த்தி குழித்தயிலமாக வாங்கி கல்வத்திலிட்டு கோழிமுட்டையின் வெள்ளைக்கருவையுங் கூடவிட்டு,

மாக்கொடியும், புனுகு, பச்சைக்கற்பூரம், கோரோசனம், வகைக்கு ஒருவிராகனெடையாகச் சேர்த்து, அரைத்துச் சிமிளில்வைத்து திலர்தமிட புருஷர்களெல்லாம் ஸ்திரீகள் கேட்ட பொருள்களை எல்லாம் கொடுப்பார்கள், அவள்வாசலையும் வந்து காத்திருப்பார் அவளைக்காணவிட்டால் பதறியும் சிணுங்கியும் கோபித்து மிருப்பார். எ-று.

## இதுவுமது வேறு.

கோவிதமா யின்னமொரு மார்க்கங் கேளு
குணமாம் புல் லாமணக்குச் சமூலம் வாங்கி
ஆவிதமாய் மாதவிடாய் மூன்று நாளும்
அப்பனே கட்டிவைத்து நாலா நாளில்
தாவிதமாய் மாக்கொடியும் விராக னென்று
தனியாக முன்சீலை விராக னென்று
பூவிதமா யவணீரா லரைத்து மைபோல்
பொங்கமுடன் துவரைபோற் குளிகை செய்யே. 134

செய்யப்பா குளிகையது தாம்பூலத்திற்
செயலான வறுசுவைபி லன்னப் பாலில்
வையப்பா கொடுத்த வுடன் மயங்குவார்கள்
வாணுதலார் தான்பிரியார் மறுமுகமும் பாரார்
கையப்பா மகிழ்வாக மருவி வாழ்வார்
கடன்வாங்கித் தான் கொடுப்பார் ஏவலாளாய்
ஐயப்பா யவர்பிரியாச் சிந்தை செய்வார்
அப்பனே இனிபிரியுங் குளிகை யாட்டே. 135

(போ-ரை.) இன்னுமொருவிதம் சொல்லுகிறேன் கேள்:—புல்லாமணக்கு சமூலம் கொண்டுவந்து மாதவிடாயான மூன்றுநாளும் அல்குலில் வைத்துக் கட்டிக்கொண்டிருந்து நான்காம் நாளில் மேற்படி சமூலம் ஒருவிராகனிடை மாக்கொடி ஒருவிராகனிடை, முன்சமூலம் வைத்து கட்டியிருந்த சீலைஒருவிராகனெடை இதுகளையெல்லாம் அவளுடைய சிறு நீரினாலரைத்து துவரைபோல மாத்திரை செய்து, ஒருமாத்திரையை தாம்பூலத்துடனாவது, அறுசுவையிலாவது பால்கலந்த அன்னத்திலாவது கொடுத்தவுடன் புருஷர்கள் மயங்கிப்போய் பிரியமாட்டார்கள், இதைக்கொடுத்தஸ்திரீயைவிட வேறுமுகம் பாரார், இன்னும் மேற்படி ஸ்திரீ கேட்கும் பொருள்களைக் கடன் வாங்கியாவது கொண்டுவந்து கொடுப்பார்கள். எ-று.

## பெண் பிரிவுக்குக் குளிகை.

மாட்டடா பெண்பிரியும் பிரிவுக் கெல்லாம்
மைந்தனே கடுகோடு மயானச் சாம்பல்
கூட்டடா குடிபோன வீட்டு மண்ணும்
குணமான வருக்கனு ளிரவு வேளை
நாட்டடா கத்தபந்தான் புரண்ட மண்ணும்
நலமான தச்சனுளிச் சிறுவுஞ் சேர்த்து
ஆட்டடா முப்பாதை பிரிந்த மண்ணும்
அப்பனே மந்திரத்தைக் சொல்லக் கேளே. 136

கேளடாஓம்-ஸ்ரீ-றீம் பிரிய நசி நசி யென்று
கெணிதமுட னிருவருட பேருமாறிச்
சூளடா வைங்காய மரைத்துப் பூசி
சுறுக்காக மந்திரமா யிரந்தா னோதி
வாளடா சீலையிலே வைத்துக் கட்டி
வளமாக பூசைசெய் திரப்பின் முன்பில்
கேளடா வைத்துவிடு இருவர் தாமுங்
கொற்றவனே பிரிபட்டுப்போவார்பாரே. 137

(போ-ரை.) பெண்களை பிரிக்கவேண்டில்.(மிகவும் கடுமையான து மயானச்சாம்பல் ஆகையால்) காடாற்று முன் எடுத்த மயானச் சாம்பலும், குடிபோன வீட்டின்மண், ஆதிவாரம் இரவில் கழுதைபு ரண்ட மண்ணும் (தச்சன் உளிச்சிறுவும், முச்சந்தி கூடு மிடத்தின் மண்ணு மிவைகளைக்கலந்து ஓம்,ஸ்ரீ றீம், பிரியநசி நசியென்று இர ண்டு பேருடையபேரைமாறி மேற்படி சாம்பல்மண்ணு கலந்திருப் பதையும், பேரைமாறி எழுதிய சீட்டில் ஐங்காயம் அரைத்துப்பூசி ஆயிரம்உருச்செபித்து சீலையில் வைத்துக்கட்டி பூசை செய்து கதவி ன் முன்னே இரப்பில் வைத்து விட்டு வந்துவிட்டால் இருவரும் ஒரு வரைவிட்டொருவர் பிரிந்து போவார்கள் எ-று.

## தாது புஷ்டி.

பாரப்பா சந்தனமுந் தேற்றான் வித்துப்
பண்பான பூமிசர்க் கரையின் மூலஞ்
சேரப்பா பூனையென்ற காலிவித்துஞ்
செயலான முருங்கைவேர்ப் பட்டை கூட்டி

கூரப்பா வகைவகைக்கு விராகன் ரெண்டு
கொற்றவனே தானரைத்துத் தேங்காய்ப் பாலில்
தீரப்பா சீனி சர்க்கரையும் போட்டுத்
திறமாகக் குடிப்பாயீ ராறு நாளாமே. 138

ஆமடா குடித்துவரத் தாது புஷ்டி
அப்பனே வீரியந்தான் விளையும்போது
தாமடா சூடுகள்தான் தணியும் பாரு
தளதளப்பாய் தேகமது காந்தி யுண்டாம்
வாமடா மங்கையரைப் புணர்ந்தா யானல்
வளமான மன்மதனே யிவனென் பார்கள்
நாமடா போகருட கடாக்ஷத் தாலே
நலமாகப் புலிப்பாணி பாடினேனே. 139

(போ-ரை.) சந்தணம், தேற்றான் கொட்டை, பூமி சர்க்கரைக் கிழங்கு, பூனைகாலிவித்து, முருங்கைவேர் பட்டை இவைகள் வகைக்குஇரண்டு விராகனெடை யெடுத்துத் தேங்காய்ப் பாலில் அரைத்து சீனிசர்க்கரைச்சேர்த்து பனிரெண்டு நாள் குடித்தால் வீரிய விர்த்தியாகும், சூடுகளெல்லாந் தணியும், தேகம் தேஜசடையும், ஸ்ரீ போகஞ்செய்தால் இவன் மன்மதனே யென்றும் சொல்லுவார்கள். எ-று.

## வஸ்து பாண்டமுடைய.

பாடியே யின்னமொரு வித்தை கேளு
பறிவான சாராய மூன்று பட்டை
நாடியே கொணர்ந்து கருச்சீலை சுற்றி
நாயகனே காளிகோயில் முன்புவைக்க
ஆடியே பானையெல்லா முடையும் பாரு
அடைவாக விற்காது கெட்டுப் போகும்
கூடியே எடுத்தெரிந்து போட்டாயானல்
குணமாகப்பானையது விளையும் பாரே 140

(போ-ரை.) இன்னமொரு வித்தையைச் சொல்லுகிறேன்கேள்:- சாருயம்ஊருகின்றபட்டையாகிய(வெள்வேலன்)பட்டையைக்கொண்டுவந்து கருச்சீலையை அதன்மேல் சுற்றி காளிகோயிலின் முன் வைக்க, பானை யெல்லாம் உடையும், அதனால் விற்காமல் கெட்டுப் போகும் உடனே வைத்ததை எடுத்துப் போட்டு விட்டால் உடைந்தபானைகளெல்லாம் உண்டாகும் எ-று.

## விளைவு கெட.

விளைவுகெடக் கொடிவேலிக் காப்புக்கட்டி
விதமாகத்-தா-வென்று லக்ஷமோது
களவாகக் கலசத்தில் வைத்து மூடிக்
கனிவாகக் கருக்கூட்டி காடுசெந்நெல்
விளைபெருகுங் கொடிக்காலுங் கன்னல் வாழை
விதமான தென்னமரச் சோலை தோப்பும்
அளவுபெற வைக்கவெல்லா பலனுங் குன்றும்
அப்பனே யெடுத்தெறிந்தால் பலனுண்டாமே. 141

(போ-ரை.) சித்திரமூலச் செடிக்குக் காப்பு கட்டி தா-வென்றுலக்ஷமுரு செபித்து அதைக் கலசத்தில் வைத்து கருக்கூட்டிமூடிசெந்நெல் விளைவு நிலங்களிலும், கொடிக்கால் தோட்டங்களிலும் வாழை, தென்னந்தோப்பு இப்படிப்பட்ட விடங்களில் எவ்விடத்தில்புதைத்து வைப்பினும் அவ்வவ்விடங்களில் பலனில்லாமல் போகும்படியாக விளைவுகள் கெடும், உடனே அதை எடுத்துப்போட்டுவிட்டால் பலனுண்டாகும். எ-று.

## விளைவு பெருக

ஆமடா நாயுருவி காப்புக் கட்டி
அப்பனே ஸ்ரீமென்று லக்ஷமோதி
தாமடா காடுசெந்நெல் கரும்பு வாழை
தயவானகொடிக்காலுந் தென்னந் தோப்பும்
வாமடா ஐங்கோலக் கருவும் பூசி
வளமாகக் கலசத்திற் புதைத்தா யானல்
நாமடா யிதுகளெல்லா மதிகமாகும்
நலமான போகருட கடாக்ஷந்தானே. 142

(போ-ரை.) நாயுருவிச் செடிக்கு காப்பு கட்டி ஸ்ரீம் என்று லக்ஷம் உருசெபித்து பிடுங்கிவந்து ஐங்கோலக் கருவுபூசி காடு,செந்நெல்,கரும்பு, வாழை, கொடிக்கால் தென்னந்தோப்பு இவ்விடங்களில்மேற்படி செடியைக் கலசத்திற் போட்டு புதைத்தாயானல் இவைகள் அதிகமான பலன்களைக் குடுக்கும், இதுவும் போகருடைய கடாக்ஷமாகும். எ-று.

## பூதப் பைசாசு விநோதம்

தானான சொரிதவளை பிடித்து வந்து
தயவான சாம்பிராணி வேணமட்டும்
மானான அதின்வாயிற் செலுத்தி வைத்து
மைந்தனே புகையூரத் தலைகீழ் கட்டி
வானான மண்டலந்தான் கடந்து வாங்கி
வளமான சாம்பிராணி எடுத்துக்கொண்டு
ஆனான தலைமஞ்சங் கொடியுங் கூட்டி
அடைவான சாம்பிராணி புகையும் போடே. 143

போடப்பா புகைபிடிக்க பிசாசு பூதம்
பொங்கமுள்ள தேவரொடு முனி கருப்பன்
நாடப்பா பிர்ம ராக்ஷதனும் சாத்தான்
நலமான லாடன் சப்பாணி பின்னுங்
கூடப்பா ஓமென்று போட்டாயானால்
கொற்றவனே தலைவிரித் தாடும்பாரு
ஆடப்பா பேரூருஞ் சொல்லுமையா
அப்பனே புகையினுட பெருமை தானே. 144

(போ-ரை.) சொரியாந்தவளையைப் பிடித்துக் கொண்டுவந்து வேண்டிய வரைக்கும் சாம்பிராணியை அதின்வாயிக்குள் நிரப்பிபுகையூரும்படியான யிடத்தில் தலை கீழ்பக்கம் தொங்கும்படியாகபின்காலைமேலே தூக்கிக்கட்டி ஒரு மண்டலங் கழித்த பிறகு அந்தச் சாம்பிராணியை எடுத்துக்கொண்டு தலைமஞ்சங் கொடியையும் சேர்த்துஅந்தச்சாம்பிராணிப் புகையை பிடிக்க பிசாசு, பூதம்,தேவர், முனி, கருப்பன்,பிரமராக்ஷதன் சாத்தான் லாடன், சப்பாணி இவைகளுக் கெல்லாம் ஓம் என்று சொல்லிப் புகை போட்டால்அவைகளெல்லாந் தலைவிரித்தாடும், பேரும் ஊருஞ் சொல்லும், இது அந்தப்புகையின் பெருமையாகும் எ-று.

## இதுவுமது வேறு.

பெருமையா யின்னமொரு மார்க்கங் கேளு
பேணியே மனிதரஸ்தி கழுதை யஸ்தி
அருமையாய் மனிதருட தண்டெச்சிலை
அப்பனே மனிதர்மலம் பன்றி அஸ்தி

உரிமையாம் காக்கணம்வேர் சீந்தில்மேனி
உத்தமனே முட்டை கொஞ்சஞ் சேர்த்திடித்துத்
தெரிமையாய்ப் புகைபோடத் தேவர் யாருந்
திறமாக வாடுவர்காண் சீ-யென்றேதே. (145)

(பொ-ரை.) இன்னுமொரு விதங்கேள்:— மனிதர் எலும்பு, கழுதை எலும்பு * மனிதருடைய குளிசிலே, (* அதாவது கோவணம்) மனிதர்மலம், பன்றியின் எலும்பு, காக்கணம்வேர், சீந்தில் தண்டு, குப்பைமேனி, கொஞ்சம் எரிமுட்டை இவைகளைச்சேர்த்திடித்துச் சீ-என்றுசொல்லிப் புகைபோட (முன் பாட்டில் சொல்லியதுகள் யாரைத் தொடர்ந்திருந்தாலும் அவர்களெல்லாம்) ஆடுவதுமல்லாமல் பேரும் ஊருஞ்சொல்லும் (எ-று)

## வினோத ஜாலம்.

ஓதுவே யின்னமொரு வித்தை கேளு
ஒளிவான சிதம்பரத்தின் பூசை சொன்னேன்
கோதி லுச்சாடனச் சக்கரத்தைக் கீறிக்
கொற்றவனே பிராமணரிற் பிரமச்சாரி
ஆதரவா யவன் மறித்துத் தகனமாகி
அப்பனே காடாற்று முன்னே தானும்
வாதாக அஸ்தி யொன் றெடுத்து வந்து
வளமான வஸ்து வொரு சேருவாங்கே. (146)

வாங்கியே சக்கரத்தை லக்ஷ மோதி
வளமாகத் தான் புதைப்பாய் தேவர் முன்பில்
பாங்கியே வஸ்துவுட னஸ்தி தானும்
பாங்காகத் தேவர்முன்பு வைத்துப்போடு
தாங்கியே பலிபூசை செய்தாலப்பா
தயவாகத் திருநட னாடும் பாரு
ஓங்கியே கேட்டவரங் கொடுக்கச் செய்யும்
உத்தமனே ஜனக் கூட்ட மாகும்பாரே. (147)

(பொ-ரை.) இன்னுமொருஅதிசயமான வித்தையைகேள்:— இதற்குச் சொல்லியிருக்கிற சிதம்பரப் பூசையில் உச்சாடன சக்கரத்தைக்கீறி பிரமாணரிற்பிரமச்சாரி இறந்துதகனஞ்செய்தவுடன் காடாற்று முன்னேபோய் அவனுடைய அஸ்தி ஒன்றையெடுத்து வந்து வஸ்து ஒருசேர் வாங்கி மேற்படி சக்கரத்திற்கு லக்ஷமுரு

ஜெபித்து புதைப்பாய், தேவர்முன்பு அஸ்தி இவைகளைவைத்து பலிபூசை செய்துவந்தால் திருநடனமாடும், கேட்ட வரத்தைக் கொடுக்கச்செய்யும் இதனால் ஜனக்கூட்டமாகும், (எ-று.)

## தேள்கடி இரங்க.

பாரடா வின்னமொரு வித்தை கேளு
 பாங்கான செம்போத்து நாக்குமைந்தா
சேரடா உடும்புடைய நாக்குங் கூட்டிச்
 செயலான கீழ்க்காயின் மூலம் வாங்கிக்
கூரடா * காமப்பால் வராக னென்று
 கொற்றவனே யாண்கழற்சிக் காயினுள்ளே
தீரடா கிராணமது தீண்டும்போது
 திறமாகவெடுத்து கொசு மெழுகால் மூடே. (148)

மூடியே தேள்கடித்து வந்தபேர்க்கு
 முன்னாகக் கழற்சியதை கையில் யீந்து
ஆடியே யின்னொருவர் கையி லீய்ந்தால்
 அப்பனே யவனைவிட் டிவன்மேற் போகும்
நாடியே தேளின் விஷமென்ன சொல்வேன்
 நடுநடுங்கி யழுதிடுவா னெறியுங் கட்டுங்
கூடியே காயைநீ போடென்றுக்காற்
 குணமாகப் போட்டவுட னிறங்கிப் போமே. (149)

(பொ-ரை.) இன்னுமொரு வித்தையைக் கேள்:—(செம்போத்து என்பது) கள்ளிக்காக்கையினுடைய நாக்கும், உடும்பு நாக்கும், கீழாநெல்லிவேர்,முலைப்பால் இவைகள் வகைக்குஒவ்வொரு விராகனெடையை * ஆண்கெச்சக்காய்க்குள் யிருக்கும் பருப்பை நீக்கி கிராணம்பிடித்திருக்கும்போது அதற்குள்அடைத்து கொசுகின் மெழுகால்மூடி, தேள்கடித்து வந்தவர்களுக்கு மேற்படி கெச்சக்காயை கையில்கொடுத்து இன்னொருவர் கையில்கொடுத்தால் அவனைவிட்டு இவன்மேல் விஷம்யேறும்,தேள்விஷத்தால் மிகவும் நெரியும் கட்டும்,காயைக்கீழே போடென்றுசொன்னால் போட்டவுடன் விஷம் இறங்கிப்போகும்-(எ-று)

## சிலை மெழுகுபாவை.

போமென்ற கருநாயின் விலாவின் வில்லும்
 பொங்கமுடன் காகத்தி நரம்பு தானும்
ஆமென்ற சுடலையின் கருவுங் கூட்டி
 அப்பனே யைங்கோலத் தயிலஞ் சேர்த்து

---

* காமப்பால் என்பது முலைப்பால்.
* ஆண்கெச்சக்கா என்பது நிகளவசமாகயிருக்கும்.

நாமென்ற நாணத்திற் பூசியப்பா
நாயகனே கழுப்பினுட தியானங்கேளு
தாமென்ற ஓம், றீம், கங், சங், ஐயுங்
தயவாக றீம், றங், லா, லீ, லூ, வென்ன. (150)

என்னவே, மங், சிங், சிவய நம வென்று
என்ன சொல்வேன் மந்திரத்தை லக்ஷமோது
பன்னவே பூசைபலி பலக்கச் செய்து
பாங்கான வெதிரின்பேர் தன்னைச்சொல்லி
நன்னவே நாணற்ற வியாதிகொண்டு
நடுநடுங்கி மரணமாய்ப் போவான் பாரு
அன்னவே கழுப்பினுட வீரமெத்த
ஆறியப் போகிறு ரருமைதானே. (151)

தானென்ற சிவன்காளி கணபதி கந்தன்
தயவான வயிரவனும் பெருமாள் ஐயன்
கோனென்ற வனுமனொடு சறுப்ப னப்பா
கொற்றவனே யவர்கள் மெழுக் கெடுத்துக்கொண்டு
தேனென்ற வகைவகைக்கு விராகனென்று
தெளிவான மெழுகுபதி னெண் விராகன்
வானென்ற ஐங்கோல னங்காயஞ் சேர்த்து
வளமான சுடலையுட கருவுங் கூட்டே. (152)

கூட்டியே லேகித்து உருப்போற் செய்து
கொற்றவனே மயானருத்திரன் றியானமோது
நாட்டியே யம், பம், யம், பம் மென்று
நலமான மயானருத்திரா கட்டுகட்டு
சூட்டியே எறி, எறி யென்று லக்ஷஞ்
சுகமாகத் தானோதிப் பூசை செய்து
ஆட்டியே சத்துருப்பே ரெழுதிவைத்து
அப்பனே யுரு வயிற்றிற் பதித்துபோடே. (153)

பதித்துநீ யாயிரத்தெட் டுரு ஜெபித்துப்
பண்பான பூசையது பாங்காய்ச் செய்து
அதித்துநீ முப்பத்து ரெண்டு குப்பி
அப்பனே முடக்கிவைக்க முடமதாவான்
கதித்தவுட நூசியிலே குத்தும்போது
கனிவான விரல் நகங்கள் காதிற் குத்தும்
நதித்தவுட நூசியது சொரிகி வைக்க
நாயகனே குத்தலெடுத் தலறு வானே. (154)

அலறியே யவன்வணங்கி வந்தானானால்
அப்பனே முடந்திருப்ப ஆசிவாங்கு
நலமாக வயிற்றில் வைத்த சீட்டு போக்கு
நாயகனே நிவர்த்தியாய்ப் போகும் பாரு
குலமான பாவையைநீ பதனம் பண்ணு
கொற்றவனே நினைத்தபோ தெடுத்துச் செய்நீ
பலமாக யிப்பாவை கையில்வேணும்
பார்த்தவர்க்குப் பலனுண்டு பசிதமாமே. (155)

ஆமப்பா ஐயுங், கிலியுங், சுவாகஹா வென்று
அடைவாக லக்ஷமுரு* ஜெபித்துத் தீரு
நாமப்பா பூசையது சத்தி பூசை
நாள்தோறு மண்டலந்தான் தினமுஞ் செய்நீ
வாமப்பா மண்டலத்திற் சித்தியாகும்
வளமாக வேணுமென்ற தெதுவானாலும்
போமப்பா நீசொல்லித் தியானஞ் செய்யப்
போகுமே யவரிடத்திற் கினவிற்றானே. (156)

கினவிலே பெண்போற்போம் கடிந்து சொல்லும்
கனிவாக யின்னாளை யழைத்து நீதான்
மினவியே யின்னதெல்லாங் கொடுத்து நீயும்
மீறாதே யவன்சொல்லை யெது சொன்னாலும்
பனுவலாற் றேவியுட வருள்தான் பெற்றேன்
பண்புள்ளோன் நல்லகுண மென்று கூறும்
அனுவியே சொற்பனந்தான் வராகியாலே
அப்பனே ஜெகமுழுதும் வணங்கும்பாரே (157)

பாரடா பேய் நரிபால் குடித்தபோது
பாவமில்லை யதின் சொட்டை யொன்றில் வாங்கிச்
சேரடா வரிசியது உலரப்போடு
சேர்த்தப்பா சுடலையுட கருவுங் கூட்டிக்
கூரடா நிழல்தனி லுலரவைத்துக்
கொடிதான வரிசிகொஞ்ச மறுசுவையிலன்னம்
வீரடா சத்துருவுக் கிட்டபோது
விதமான பிரமைகொண் டலைவான் பாரே. (158)

பாரப்பா மிளகு தக்காளிச்சாறு
பண்பாக மூன்றுநா ளாறுவேளை
கூரப்பா கொடுத்திடவே தீரும்பாரு
குணமாக நிவர்த்தியாப் போகுங்கண்டாய்

சீரப்பா பத்தியந்தா னுப்பாகாது
சிரப்பாக வேழாநா ளெல்லாங் கூட்டு
வீரப்பா போகருட கடாக்ஷத்தாலே
விதமாகப் புலிப்பாணி பாடினேனே. (159)

(பொ-ரை.) கருநாயின் விலாவின் வில்லெலும்பு, காகத்தினு டையநரம்பு, சுடலைக்கரு, ஐங்கோலத்தயிலஞ்சேர்த்து நாணத்திற் பூசி ஓம், ரீங், கங், சங், ஐயும், றீம், ரங், லா, லீ, லூ, மங், சிங், சிவயநம என்று லக்ஷம்உருசெபித்து பூசை, பலி இவைகளைச்செய்து எதிரி யின்பேரைச்சொல்ல மரணமாவான், கழுப்பின்வீரம் அதிகமாகும் இதையார் உணரப்போகிறார். இன்னும் *சிவன், காளி, கணபதி, கந் தன், வயிரவன், பெருமாள், ஐயன், அனுமான், கறுப்பன், ஆகிய அவ ர்கள் மெழுக்கை எடுத்துக்கொண்டு வகைவகைக்கு விராகனிடை இரண்டாக மெழுகுபதினெட்டு விராகன், ஐங்கோலம், ஐங்காயம், சுடலையின் கருஇவைகளைக்கூட்டி ஒருஉருப்புசெய்து மயானருத் திரன் தியானஞ்செய்து யம், பம், யம், பம் என்று மயானருத்திரா கட்டு கட்டு, குட்டியே எரி, எரி என்று லக்ஷமுருசெபித்து பகை வர் பேரைஎழுதி உருவைபதித்து, ஆயிரத்தெட்டு உருஜெபித்து பூசைசெய்து முப்பத்திரெண்டு குப்பியில் முடக்கிவைக்க முடமா வான், இவைகளை ஊசியால் குற்றும்போது விரல், நகம், காது, இவைகளில்குற்றும், அந்தஊசியைச் சொருகிவைக்க குற்றலெடுத் தலறுவான், அவன் வணங்கிவந்தானானல் உடனே ஊசியை வாங் கு, வயிற்றில்வைத்தழுட்டும்போக்கு, பாவையைப்பதனம்பண்ணு இதைப் பார்த்தவர்க்கு பலனுண்டாகும், ஐயும், கிலியும்சுவாகஹா என்று லக்ஷமுரு செபித்து மண்டலம் வரைக்கும் நாள்தோறும் சத்திபூசைசெய்தால் சித்தியாகும், வேண்டுமென்றால் சித்தியாய் கினவிலே பெண்போலவே போகும், நீஅடியில் வருமாறு நினைக் கினும் அப்படியேநடக்கும், பலானவளை அழைத்து நீ இவைகளை யெல்லாங் கொடுத்து அவன் சொல்லைத்தள்ளாதே அவன் என்ன சொன்னாலும் நல்ல குணமுள்ளவனென்று சொல்லி நீநினைத்தால் அப்படியே அவள் சொப்பனத்திற்போய்ச்சொல்லும் வராகியால் ஜெகமுழுதும் உனை வணங்குவார், இன்னும் பேய் நரிபால் குடித் தால் தோஷமில்லை, ஆதலால் அதின்பால் ஒன்றில் வாங்கி அரிசி

---

* சிவன், காளி, கணபதி, கந்தன், வயிரவன், பெருமாள், ஐயன் அனுமான், கறுப்பன் ஆகிய ஒன்பதுபெயருடைய மெழுகு என் பது, தொழிலாளியாலல் அதிசுலபத்தில்தெரிந்துக்கொள்ளலாம்

யிற் கலந்து சுடலையுட கருவுங்கூட்டி நிழலில் உலரவைத்து கொஞ்சம் அரிசியை அன்னஞ்சமைத்து அறுசுவையுடன்சத்துருவுக்கு அன்னமிட்டபோது பிரமையாய் அலைவான், பிறகு சத்துருவணங்கிவந்தானுனல் மிளகு, தக்காளிச்சாறு மூன்றுநாள் ஆறுவேளை கொடுக்கத்தீரும், உப்பாகாது பத்தியமாகவிருந்து ஏழாநாள்எல்லாவற்றையுங் கூட்டு போகருடைய கடாக்ஷத்தால் புலிப்பாணி பாடினேன். (ஸ-று.)

## மோடி வித்தை.

பாடினே னின்னமொரு மோடி வித்தை
பண்பான நடன சிதம்பரத்தைக் கீறி
ஆடினே னக்ஷரமும் பீஜமெல்லாம்
அடைவாகத் தானடைத் தருளை யோதிக்
கூடியே ஓம், ஸ்ரீரீங், கிலியும்,
குணமான அவ்வும், உவ்வும், மவ்வும், சிவ்வும்
நாடியே நமசிவய சுவாகஹா வென்று
நலமாக லக்ஷமுரு ஜெபந்தா னேதே. (160)

ஓதியே சக்கரத்தை வைத்துக் கொள்ளு
உத்தமனே சோடசமாம் பூசை செய்து
சோதியே சக்கரத்தை வைத்துக் கொண்டு
சுகமாக மோடிவைக்கச் சொல்லக் கேளு
ஆதியே கோயில்முன்பு குளத்தின் முன்பு
அப்பனே யம்பலங்கள் தெருவி லப்பா
தீதிலா போகருட கடாக்ஷத்தாலே
திடமாக மோடிவைக்கும் வித்தைகேளே. (161)

நீதியாய் குருபாதந் தனைவணங்கி
நினைவாகப் பெரியோர்கள்பதமும் போற்றி
மோதியே சித்தர் முத்தர் முனி கருப்பன்
முதலான ராக்ஷதையும் ஏவல் வைப்பும்
தீதான சத்துருக்கள் மிருக ஜாதி
தீயகொடு விஷமுதலா யெதிர் நில்லாது
மீதுநீ நினைத்தபடி யெல்லாஞ் சித்தி
மிதமான வாளுஞ் செக்குலக்கை நாட்டே. (162)

நாட்டியே யுலக்கை முன்பு தேங்காயொன்று
நலமான தேங்காய்முன் குறடா வொன்று
கூட்டியே யதின் பின்பு பாதரட்சை
குறியாக வதின்முன்பு தேய்ந்த மாறுந்

தேட்டியே யதின்முன்பு வாழை நாட்டித்
தெளிவான பந்தலிற் பூமாலை சூட்டி
ஆட்டியே மாவிலைத் தோரண முங்கட்டி
அப்பனே பூசை பலி பெலக்கச் செய்யே. (163)

பெலக்கவே யெட்டிமுளைக் கருவும்பூசிப்
பேதமில்லை அஷ்டதிக்கி லடித்துப்போடு
அலக்கவே கோடேழு கிறிப்போடு
அப்பனே காளியுட தியான மோது
சிலக்கவே திரையைநீ யெடுக்கச் சொல்லு
செயலாக வவன் வந்து சார்வானாகில்
கலக்கவே கக்கு கக்கு காளிதுர்க்கி
கருத்தாக அரி, அம், உம். ஓ மென்றேத. (164)

ஓதியே கண்கட்டு மையை வாங்கி
உத்தமனே கைதன்னிற் றடவிக்கொண்டு
வாதியே வேப்பிலையை யுருவிப் போடு
வளமான தேள்கொட்டி மயங்குவான் பார்
ஆதியே றங், றங், சூலி யென்றால்
அப்பனே விழுந்தோடி யெரிய வீழ்வான்
சோதியே வறி, வறி, மறி, சண்டாளி
சுகமான அம், அம், அம் என்றெண்ணே (165)

எண்ணியே விபூதியைத் தான் தியான மோதி
எதிர்போட யவன் விழுவான் கண்டு பாரு
நண்ணவே: ஓம், படு, சுவாகஹா வென்று
நலமான விபூதியள்ளி யோதிப் போடு
கண்ணவே பவன்விழுவான் கோபிப்பான் பார்
கனிவாக அம், அம், நிம், ஓம், என்றேதான்
உண்ணவே வேப்பிலை மண்ணுளுந்துடனே யரிசி
உத்தமனே விபூதிமுத லோதிப் போடே. (166)

போட்டவுட னவன் விழுவா னுதைத்துக் கொள்வான்
பொங்கமுட னவன்வாயி லுதிரங் கக்கும்
ஆட்டவுட னகன்றகழல் குறடா வப்பா
அடைவான தேங்காயு முலக்கை தானும்
கூட்டமுட னிதுகளெல்லா மெழுந் தடிக்கும்
கொற்றவனே வாளெழும்பி வெட்டும் பாரு
நாட்டமுடன் காளியைத்தான் தியானஞ் செய்தால்
நாயகனே யிவைகளெல்லா மடிக்குந் தானே (167)

தானடா ஓம். வங், றம், மென்று
　　தயவாக அம், அம், அம், மென்றோது
வானடா நங், மங், சிங்,கென்று
　　வளமான அங், அங், அங், சுவாகஹாவென்று
கோனடா லக்ஷமுரு செபித்துப் போடு
　　கொற்றவனே நினைத்த தெல்லாந் தம்பமாகும்
நானடா போகருட கடாக்ஷத்தாலே
　　நலமாகப் புலிப்பாணி பாடினேனே. (168)

(பொ-ரை) இன்னமொரு மோடி வித்தையைகேள்:—நடன சிதம்பர சக்கரத்தைகீறி அக்ஷர பீஜங்களை அடைத்து ஓம், ஸ்ரீம் கிலியும், அவ்வும், உவ்வும், சிவ்வும், நமசிவய சுவாகஹாவென்று லக்ஷமுருசெபித்து அந்த சக்கரத்தை வைத்துக்கொண்டு சோடச பூசையைச்செய்து மோடிவைக்க கோயில்,குளம்,மைதானம், தெரு இவைகளில்மோடிவைக்கும் விதம் எப்படி யெனிலோகுருவின் பாதத்தையும்,பெரியோர்களுடைய பாதத்தையும் வணங்கினால்,சித்தர் முத்தர்,முனி, கருப்பன் முதலான ராக்ஷதையும்,ஏவல்,வைப்பும்,சத்துருக்கள் மிருகசாதி தீயவிஷம் இவைகள் உன்முன் நில்லாது ஆகையால்நினைத்தபடி யெல்லாஞ் சித்தியாகும், உடனே செக்குலக்கையை நாட்டி, உலக்கைக்கு முன்னே ஒருதேங்காயும் தேங்காய்க்கு முன்னேகுறடா ஒன்றும், குறடாவுக்குப் பிறகுபாதாக்ஷையும், அதன் பிறகு ஒரு விளக்குமாறும், அதன் முன்பு வாழையும் நாட்டி பந்தலில் பூமாலை சூட்டி, மாவிலைத் தோரணமுங் கட்டி பூசைபலி வலுவாகச்செய்து எட்டிமுளைகள் சீவி அதற்கு நருவும் பூசி அஷ்டதிக்கிலும் அடித்து ஏழு கோடுகிழித்து காளி வைத்தியானஞ்செய்து திரையைஎடுக்கச்சொல்லு, அவன் வந்து சார்வானானால் கக்கு கக்கு, காளி,துர்க்கி,அரி, உம் ஓம் யென்று சொல்லி, கண்கட்டும் மையைவாங்கி கையில்தடவிக்கொண்டு வேப்பிலையை உருவிவிடு,அப்பொழுது அவனுக்குத் தேள்கொட்டிப் பிரமை யடைவான், பிரகு ரங், ரங் சூலி யென்றுசொல்ல அவன் உருண்டு ஓடி எரியவிழுவான், வறி வறி மறி சண்டாளி அம் அம் அம் யென்று சொல்லி விபூதியைத் தியானமோதி யெதிரேபோ —அவன்விழுவான் கோபிப்பான் அம் அம் றீம் ஓம் யென்றுவேப்பிலை மண் உளுந்து அரிசி இவைகளை ஓதிப் போடவும் அப்படி போட்டவுடன் அவன் விழுவான் உதைத்துக் கொள்வான்அவன் வாயில்உதிரங்கக்கும் அப்பொழுது குறடா தேங்காய் உலக்கை இவைகளெல்லாம் எழுந்தடிக்கும் வாள் எழும்பிவெட்டும்காளியைத்

தியானித்தால் இவைகளெல்லாமடிக்கும், ஓம், வங், றம்,அம், அம் அம்,அம்,றங், மங்,சிங், யங், அங், அங்,சுவாகஹா வென்று லக்ஷ முரு செபித்துவிடு அப்படிசெய்தால் நீ நினைத்தவைகளெல்லாம் ஸ்தம்பனமாகும், (எ-று)

## சோறு வேகாதிருக்க.

பாடவே யின்னமொரு வித்தை கேளு
பண்பாக வெண்காந்தி வேரை வாங்கி
நாடவே கஞ்சாவித் தைங்கோலஞ் சேர்த்து
நாயகனே யுலையரிசி தன்னிற் போட்டாற்
கூடவே சோரதுவும் வேகா தப்பா
கொற்றவனே மாற்றுமிதுக் கில்லை பாரு
ஆடவே போகருட கடாக்ஷத் தாலே
அருமையாய்ப் புலிப்பாணி பாடினேனே. (169)

(பொ-ரை) இன்னுமொரு வித்தையைக்கேள்:—வெண்காந்தி வேரைக் கொண்டுவந்து,கஞ்சாவிதையும், ஐங்கோலமும் சேர்த்து உலையரிசியிற் போட்டால் சோறுவேகாது;இதற்குமாற்றில்லை.

## நெருப்பில்லாமல் சோறு ஆக்கும் ஜாலம்.

பாடினேன் அக்கினியு மில்லாமற் றான்
பண்பான அன்னமது சமைக்கக் கேளு
ஆடினேன் கானகத்தில் வேணதுண்டு
அடைவாகச் சதுரக்கள்ளி பாற்கரந்து
சாடிநீ பாண்டத்தி லரிசி போட்டுச்
சரியாகப் பால்தன்னைச் சுருக்காய்வாரு
நாடிப்பார் சோரதுவும் வெந்திருக்கும்
நலமாக ஜாலம்போ லாடிப் பாரே. (170

(பொ-ரை.) நெருப்பில்லாமல் சாதம் சமைக்கு முறையைக் கேள்:—காட்டிலிருக்கும் சதுரக்கள்ளிப்பாலை கரந்துக்கொண்டு வந்து ஒருபாண்டத்தில் அரிசியை நன்றாகக்கழுவிதண்ணீரை இருத்துவிட்டு வேறொரு பாத்திரத்தில் மேற்படிப்பாலை யாருக்குந்தெரியாமல் வைத்திருந்து அரிசியை அந்தப்பாலிருக்கும் பாத்திரத்தில்போட்டு மூடிவிட்டுக் கால்நாழிகைகழித்துத் திறந்து பார்க்க சாதம்நன்றாய் வெந்திருக்கும். (அந்த சாதத்தை யாரும் புசிக்கக் கூடாது.) (எ-று)

## பேயாட்டல்.

பாரேரீயங், சிங்,வய, நம, வென்று
பண்பாகச் செபித்தவுடன் பிசாசு பூதங்
கூரேரீ யோடுமடா கண்டு பாரு
குணமாக வங், மங்,சிங், சி வ ய ந ம சி யென்று
நாடியே செபித்தவுட னழுகும் பாரு
நாயசனே சி வ ய ந ம சி யென்று சொல்ல
சூடியே பிசாசுமுதற் பூதமெல்லாம்
சுருக்காக வோடுமடா கண்டு பாரே. (171)

(பொ-ரை.) யங்,சிங்,வய,நம,வென்று செபித்தவுடன், பிசாசு பூதங்கள் இவைகளெல்லாம் கூடிப்போகும்,அதற்கு வங்,மங்,சிங், சி வ ய ந ம சி யென்று ஜெபித்தால் எல்லாம் ஓடிப்போய்விடும்.

## உடுக்கு கட்டல்.

பாரடா சிவனுணை சிற்றுக் கடைச்சான்
பண்பாகச் சிவநம்மை பகவதியாணை
கூரடா ஐயுங் கிலியும் சவ்வுங்கட்டு
குறிப்பாக மாதவ ராணைக்கட்டு
சேரடா ஐயுங் கிலியும் சுவாகஹா வென்று
சிரப்பாக ஆதியந்த மூலங் கட்டு
வீரடா ஜெபித்தவுட னுடுக்கு கட்டும்
விதமான போகருட கடாக்ஷந்தானே. (172)

(பொ-ரை.) உடுக்கையைக்கட்டவேணுமாகில்,ஐயுங்,கிலியும், சவ்வும், உடுக்கையைக்கட்டு, ஐயுங், கிலியும், சுவாகஹாவென்று ஜெபித்தால் உடுக்கையானதுகட்டும். (ஆகிலும் இதுகொடிய பாப மானத்தொழில்.) (எ-று.)

## வியாதி போக்க

தாமப்பா ஓர்துளி யந்த தூளி
தயவாக முன்திருக் கண்ணிற் பின்தூளி
பானப்பா காச்சல் தலை வலியும்
பாரிற்பறந்தோடச் சுவாமி குருவாணை போவென்
றூனப்பா விபூதியைநீ தியான மோதி
யளித்தவுடன் பலபிணியு மகன்றுபோகும்
வானப்பா போகருட கடாக்ஷத் தாலே
வளமான புலிப்பாணி பாடினேனே. (173)

(பொ-ரை.) உலகத்தில் மானிடருக்குண்டாகும் காய்ச்சல் முதலியசகல ரோகங்களும் பறந்துபோக சுவாமியாணை குருவாணை போவென்று விபூதியைத் தியானித்துக்கொடுக்க பலநோய்களும் ஒழிந்துபோகும். (எ-று)

## நீலகண்ட மந்திரம்.

பாடியே நீலகண்டர் சொல்லக்கேளு
பண்பான ஓம்நீல கண்ட மித்ரா
ஆடியே மங் சிங் சர்வ மனோகண்ட
அடைவாக உம் படு சுவாகஹா வென்று
கூடியே லக்ஷமுரு ஜெபித்துத் திரு
குற்றமற்ற தர்பணமும் தானம் பத்து
நாடியே போகமா யிருந்தாலப்பா
நலமாக அன்னமிடு நூறுபேர்க்கே. (174)

போரான பிராமணருக்கன்னம்போடு
பேதமில்லை பூசையது பத்தேயாகும்
நேரான பூசையது வஸ்து சுத்தி
நிறைத்துவிடு நீலகண்டஞ் சித்தியாச்சு
சீரான தம்பனம் நீ செய்யவேண்டி
செயலாக சுவாமியே பொன்னிறமதாச்சு
வீரான நீலகண்டர் தியானமப்பா
விதமான நெஞ்சி லெண் கோணமெட்டே (175)

ஒட்டியே அம்மாரோ மென்று நாட்டில்
ஒளிவான வுருவமப்பா முப்பத்தாறு
தீட்டியே செபித்தவுடன் தங்கமாகும்
திறமாகச் சகலமும் தம்பிக்கும் பாரு
காட்டியே சுவாமிதனை வெள்ளையாக
கருத்தில்வைத்து விபூதியிலே வட்டங்கீறி
ஆட்டியே யம்மாரோமென் றாயிரத்தெட் டோதி
அன்பாக கொடுத்தவுடன் அழைக்கும் பாரே (176)

பாரடா சுவாமியைச் சென்னிறமதாசப்
பண்பாகத் தியானித்து முக்கோணங்கீறிச்
சேரடா கிலியும் ரோ மென்று சொல்லிச்
செயலாக வாயிரத்தெட்டுஞ் செபித்து

வீரடா விபூதிதனை பணித்துக்கொண்டால்
விதமாகச் சகலமும் வசிய மாகும்
தீரடா பின்னொருத்தர் தனக்கேயீந்தாற்
றிறமாக வசியமாய் வணங்குவாரே. (177)

வணங்கியே சுவாமியைப் பணிந்து திறமாக
வளமாகத் தியானித்துப் பிறைபோற்கீறி
அணங்கியே அம்மாரோ வெனச்செபித்து
அடைவாக வாயிரத்தெட் டுருத்தாளுதி
வணங்கியே விபூதியைப் பூசிக்கொண்டால்
வழுவாமல் சகலமும் யோகம் போகம்
இணங்கியே சுவாமியை மேகநிறமாக
யின்பமுறத் தியானித்து நாற்கோணங்கீறே (178)

கீறியே ஓம் றம் ரோ மென்று
கிருபையாய்த் தென்னோலை தன்னிலப்பா
சீறியே யிருவர்பேர் தன்னைச் சூட்டிச்
சிறப்பாக வாயிரத்தெட் டுருசெபித்து
வீறியே எதிரியின்முன் னிறப்பில் வைக்க
விதமாக யிருவருமே பிரிந்து போவார்
தேறியே சுவாமியைப் புகைவர்ணமாகத்
தெளிவாகத் தியானித் தைங்கோணங்கீறே (179)

கீறியே அம்மாரோ மென்று நாட்டி
கிருபையுட னாயிரத்தெட் டுருஜெபித்து
வாறியே விபூதியை நீ போட்டபோது
வரிசையுடன் சகலமுமே யோடிப்போகும்
தேறியே சுவாமியைப் பிரளயகால ருத்ரனைத்
தியானித்து முக்கோணந் திறமாய்க்கீறி
ஏறியே ஓம், ரோ மென்று நாட்டி
எளிதிற் சத்துருவின் சத் தெழுத்தை நாட்டே. (180)

நாட்டியே யாயிரத்தெட் டுருத்தாளுதி
நாயகனை யழல்காட்ட கீறிப்போகும்
வாட்டியே சகலமு மாரணமாய்ப் போகும்
வளமான சுவாமியைக் கறுப்பதாகக்
கூட்டியே தியானித்து முக்கோணங்கீறி
குணமாகப் பம் மென்று அதிலே நாட்டி
சூட்டியே யாயிரத்தெட் டுருத்தாளுதி
சுறுக்கப்பா நீறிடவே பேதந்தானே. (181)

(பொ-ரை.) நீலகண்ட மந்திரத்தைசொல்லக்கேள்:—ஓம் நீலகண்ட மித்ரா! மங், சிங், சர்வமனோகண்டா, உம் படு, சுவாகஹா என்று லக்ஷமுருஜெபித்து தர்ப்பணமுதலிய தானங்களைச்செய்து உனக்கு அன்னமிட சக்திவுண்டாயிருக்கும் பக்ஷத்தில் நூறுபிராமணர்களுக்கு அன்னம்போடு, அப்படி போடுவையாகில், பத்து பூசையும் செய்ததற்கு சமானமாகும் இவ்விதஞ்செய்தால் நீலகண்ட மந்திரஞ் சித்தியாகும், இதனால் ஸ்தம்பன வித்தையை யாடலாம், சுவாமியும் பொன்னிறமாக யிருப்பார் நீலகண்டத்தியானம் செய்யும் விதம் எப்படியெனில், உன்னுடைய மனதிலேயே எண் கோணம் போட்டு அதற்குள் அம்மாரோ என்று நாட்டி முப்பத்தாறு உருஜெபித்துவந்தால் செபித்தவுடன் தங்கமாய்தம்பிக்கும், தவிரசுவாமியை வெண்மைநிறமாகமனதிலெண்ணி விபூதியில்வட்டமாகக்கீறி மேல் அம்மாரோ மெனும் மந்திரத்தை ஆயிரத்தெட்டு உருஜெபித்து இந்தவிபூதியையாருக்குங்கொடுத்து அழைக்கவிபூதி வாங்கிக்கொண்டவர்களெல்லாம் உன்பின்வருவார்கள், சுவாமியை சிகப்புநிறமாக தியானித்து முக்கோணம்போட்டு கிலியும், ரோம், என்று ஆயிரத்தெட்டு உருசெபித்து விபூதியை நீயணிந்துகொள்ள சகலமும் வசியமாகும், வேறொருவருக்குக் கொடுத்தாலும் அவர்களும் வசியமாய் வணங்குவார்கள், சுவாமியைப் பளிங்குநிறமாக எண்ணி பிறைபோற்கீறி அம்மாரே என்று ஆயிரத்தெட்டு உருஜெபித்து விபூதியைப்பூசிக்கொண்டால் சகலயோகபோகமும் உண்டாகும், சுவாமியை மேகநிறமாக எண்ணி, தியானஞ்செய்து நாற்கோணங்கீறி ஓம், றம், ஹ்ரும்என்று தென்னஓலையில் எதிரியின் பேரைப்போட்டு ஆயிரத்தெட்டு உருசெபித்து எதிரியின் முன்னிரப்பில் வைக்க இருவரும் பிரிந்துபோவார், பிறகு சுவாமியைப் புகைநிறமாக எண்ணித் தியானித்து ஐங்கோணங்கீறி யம், ரோம் என்றுபோட்டு ஆயிரத்தெட்டுஉருசெபித்து விபூதியைநீ போட்டவுடன் சகலமும்ஓடிப்போய்விடும், பிறகுசுவாமியைப் பிரளயகால ருத்திரனைத் தியானஞ்செய்து முக்கோணங்கீறி ரோம் என்று போட்டு விரோதியின் எழுத்தை அதில் போட்டு ஆயிரத்தெட்டு உருசெபித்து அழல்காட்ட சகலமும்மாரணமாய்ப்போகும், பிறகு சுவாமியைக் கறுப்புநிறமாகஎண்ணி முக்கோணங்கீறி பம், என்று எழுதி ஆயிரத்தெட்டுஉருசெபித்து திருநீறிட்டால் பேதனம்மடையும் (எ-று)

## இதுவுமது, முன் தொடர்ச்சி.

தானனை சிவகிரியில் தண்டாயுதபாணி
  தாதாவை மென்மேலும் பணிந்து இந்திரன்
தேனனை கௌசிகர் போகருட னிவர்கள்
  தெளிவாக முன்யுகத்தில் மூவரப்பா

கோனான கலியுக மிருநூற்றைந்தில்
  கொற்றவனே புலிப்பாணி பூசித்தேன் பார்
மானான அஷ்டசத்தி கோடா சத்தி
  மைந்தனே சித்தருட நடனந் தானே. (182)

தானான் ராஜரொடு குருக்கள் பெண்கள்
  தயவாக வேதியர்கள் சிறுவ ரேழை
பானான விவர்களுக்கே யிடுக்க மான
  பஞ்சமற் றொழில் முறைகள் செய்தாற் றோஷங்
கோனாகச் செய்தவர்கள் நரகில் வீழ்வார்
  குற்றம் வரும் நற்பதவி கிட்டா தப்பா
தேனான போகருட கடாக்ஷத் தாலே
  தெளிவாகப் புலிப்பாணி பாடினேனே. (183)

பாடியே சாஸ்திரத்தைப் பழித்த பேர்கள்
  பண்பிலாக் கூன்குருடு ஊமையாகி
வாடியே சப்பாணி நொண்டி யாகி
  வாமிலாச் செவிடாகி ரூபங் கெட்டுச்
சாடியே யவர்களெல்லாம் நாசமாகிச்
  சாவார்கள் பெண்டுபிள்ளை யெல்லாஞ் சேர்த்து
கூடியே வியாதியிலே யமிழ்ந்து மாய்ந்து
  கொடிதான நரகத்தி லழுந்து வாரே. (184)

வாரான ஐயும் நமோ பகவதே ஓம்
  மகாரூபி மஹாமாயி மகத்வ சத்தி
தேராக சர்வதாரணி சுவாகஹா வென்று
  தெளிவாக லக்ஷமுரு செபித்துத் தீரு
சார்வாகத் தர்ப்பணத் தோடு மன்னஞ்
  செயமாகப் பூசையது திறமாய்ச் செய்நீ
கூறுன மஹாமாயை சித்தியாச்சு
  குணமாக வதின்பெருமை கூறக் கேளே. (185)

கேளடா சத்தியைத்தான் பூசை செய்யக்
  கேலிசெய்து சோதனைகள் பார்க்க வந்தால்
நாளடா மந்திரத்தைத் தியானஞ் செய்து
  நலமான வஸ்துசுத்தி பால் பூ வென்று
வாளடா தியானித்து நினைத்த போது
  வளமான பால் பூவா யிருக்கும்பாரு
ஆளடா போகருட கடாக்ஷத்தாலே
  அப்பனே புலிப்பாணி பாடினேனே. (186)

(பொ-ரை.) சிவகிரியின் தாதாவாகிய தண்டாயுதபாணியை கௌசிகர், இந்திரன், போகர் முதலியவர்கள்முன்யுகத்திலும்,இக் கலியுகம் இருநூற்றைந்தில் புலிப்பாணியான நானும் பூசித்தோம் அஷ்டசத்தி, கோடாசத்தி இவைகளெல்லாம் சித்தருட நடனமாகும், ஆகையால் ராஜாக்கள், குருமார், பெண்கள், வேதியர்கள், சிறுவர்கள், ஏழைகள் இவர்களுக்கெல்லாம் பஞ்சமா பாதகத்தொழில் செய்தால்தோஷமாம், அப்படி செய்தால் நரகத்தில் வீழ்வார், அப்பொழுது குற்றம் வரும், நல்லபதவி கிட்டாது, அதுவுமன்னியில் சாஸ்திரங்களைப் பழித்தவர்கள், கூன், குருடு, செவிடு, ஊமை, சப்பாணி, நொண்டி, குஷ்டம் முதலிய விகாரரூபமுடையவர்களாய் நாசமாய்ச் சாவார்கள், பெண்டுபிள்ளைகளெல்லாருங்கூட அவ்விதமே யாவார்கள் இன்னும் ஐயும், நமோ பகவதே, ஓம் மகாரூபி,மகாமாயி,மகத்துவசத்தி, சர்வதாரணி, சுவாகஹா வென்று லக்ஷமுரு ஓதி தர்ப்பணம், அன்னதானம், பூசைஇவைகளைச்செய்து வந்தால் பெருமை சொல்ல வொண்ணாத மகாமாயை சித்தியாகும் அல்லாமலும், சத்தியைப்பூசைசெய்வாயானால் உனக்கேலிசெய்து சோதனைப்பார்க்கவந்தால் மந்திரத்தைத்தியானஞ்செய்து வஸ்து சுத்தி பால் பூ வென்று தியானித்து நினைத்தால் அது பாலும் பூவுமாக விருக்கும். (எ-று)

## கார்த்திகை வீரியார்ச்சுன மந்திரம்.

அருளாலே ஓம்-ஆம்-ஸ்ரீயுங்-கிலியும்
அரிய கார்த்திகை வீரியார்ச்சுன சுவாகஹா வென்று
பொருளாக லக்ஷமுரு செபித்து தீரு
பொங்கமாய்த் தர்ப்பணமுமோமமன்னம்
மருளாக பூசையது பத்துஞ் செய்நீ
மைந்தனே சித்திக்கக் கிரிகையாகுஞ்
சுருளாக நினைத்தபடி யெல்லாஞ் செய்யுஞ்
சுகமான போகருட கடாக்ஷந் தானே. (187)

(பொ-ரை.) ஓம், ஆம்,ஸ்ரீம்,கிலியும்,அரிய கார்த்திகை வீரியர்ச்சுன சுவாகஹா வென்று லக்ஷமுருஜெபித்து தர்ப்பணம்,ஓம முதலிய 10-பூசைகளையுஞ் செய்துவந்தால் சித்தியாய் முடியும் நீ நினைத்தபடி யெல்லாஞ் செய்யும் (எ-று.)

## நரசிங்கமந்திரம்.

பாரடா நரசிங்கஞ் சொல்லக் கேளு
பாங்காக ஓம் சிங்க முக்வா ஓம் ஓம்
கூரடா பிடித்து கடித் தொடுத்து சுற்றிக்
குணமாக கண்டுபிடித்த தறிவாரைப் போல்

தீரடா பசாசுபேய் பொடிபட் டோடத்
திரமாக நரசிங்க ராஜா வாணை
சீரடா ஸ்ரீம் கிலீம் சுவாகஹா வென்று
சிறப்பாக லக்ஷமுரு ஜெபித்துத் தீரே (188)

தீரப்பா தர்ப்பணமு மோமமன்னம்
திறமாகப் பூசைசெய்து தெளிவாகத்தான்
கூரப்பா யானைமுதல் மிருகஜாதி
கொற்றவனே காடுசென்னெ லெழுதிக்கட்டு
பாரப்பா மிருகத்தின் கொடுமை யில்லை
பலன்கிட்டும் நினைத்தபடி யெல்லாஞ் செய்யும்
நேரப்பா போகருட கடாக்ஷத்தாலே
நிச்சயமாய்ப் புலிப்பாணி சொன்னேன் பாரே (189)

காண்வே ஓம் சர்வாப்தர் நாதா
கனிவாக ஓம்படு சுவாக்ஹா வென்று
வாணவே லக்ஷமுரு செபித்துத் தீரு
வளமானதர்ப்பணமு மோமமன்னங்
கோணமற் பூசையது பெலத்துச் செய்நீ
குணமாகச் சாமமது சித்தியாகும்
நாணாது நினைத்தபடி யெல்லாஞ் செய்யும்
நாயகனே பிசாசுமுதற் பூதம் போமே. (190)

(பொ-ரை.) நரசிங்கமந்திரஞ் சொல்லுகிறேன்கேள்:—ஓம் சிங்கமுகவா ஓம்,ஓம்,பிசாசு பேய் பொடி பட்டோட நரசிங்கராஜா ஆணை,ஸ்ரீம்,கிலீம்,சுவாகஹா என்று லக்ஷமுரு ஜெபித்து,தர்ப்பணம்,ஓமம்,அன்னதானம் பூசை இவைகளைச் செய்து ஆனைமுதல்மிருகஜாதி இவைகளை எழுதி காடு,விளைவுள்ள நிலங்கள் முதலாகியவிடங்களில்கட்ட மிருகஜாதியின் கொடுமைகளில்லாமல் எல்லாப்பலன்களும் கிடைக்கும்,நீ நினைத்தபடி எல்லாஞ் சித்தியாகும்,ஓம் சர்வஆபத்துரு நாதா, ஓம்படு சுவாகஹாவென்று லக்ஷமுருஜெபித்துதர்ப்பணம்,ஓமம் அன்னதானம், பூசை இவைகளைபெலத்துச்செய்தால்ஒருசாமத்தில் கைகூடுவது மன்னியில், இதனால் பேய் பசாசு, பூதம்முதலியவைகள் ஓடிப்போய்விடும்.(எ-று) ()

## கெண்ட பேரண்ட மந்திரம்.

போமப்பா யின்ன மொன்று சொல்லக் கேளு
போலிவான கெண்டபே ரண்டந் தன்னை
தாமப்பா ஆம்-ஓம்- அகோர பிரபல
தயவான கண்டபே ரண்ட சிங்கா

வாமப்பா வியாக்கிரகவாசா சர்வ மிருகா
வளமாகக் காற்றுபெல்லா அஷ்ட வஜ்ரா
ஆமப்பா சூலமுத லாகவே தான்
அடைவாக சங்கு சக்ராதி எண்ணே. (191)
எண்ணவே தாதுப் பிரானு மாலி ஆகமா
இதமான கெஜபக்ஷ யெந்த நரசிம்மா
அண்ணவே கற்பரந்தா அக்கினி லீலா
அடைவான ஊதாப்பு யந்திரத்திற்
பண்ணவே இலவஜ்ர மானகுண்டா
பண்பான தாஷ்டீக வுக்ரமூர்த்தி
உண்ணவே பக்ஷமாருத மச்சாந்த
உத்தமனே தாரணியில் நம்பி யென்னே. (192)
என்னவே யுத்தண்ட வஸ்திர சர்ப்பா
என்னப்பா கண்டபே ரண்டஞ்சித்தி
வென்னவே மூலமப்பா சொல்லக்கேளு
வளமான ஓம்-இரீம்-ஸ்ரீயுமென்று
உன்னவே கிலீம் ஐயும் சுவாகஹா வென்று
உத்தமனே கொண்டபேரண்ட நரசிங்கா
பன்னவே மகா சர்ப்பா னந்த காயா
பதிவான சர்வசத்ரு நாசமாமே. (193)
ஆமப்பா சிந்தி சிந்தி யந்தி யந்தி
அடைவாக லக்ஷமுரு தானேயோது
தாமப்பா தப்பாம லாயிரந்தான் பத்து
தயவான ஓம் அப்பா ஆயிரந்தான்
வாமப்பா பிராமண போசனந்தான் நூறு
வளவான பூசையது நாள் பத்தப்பா
நாமப்பா கெண்டபே ரண்டஞ் சித்தி
நாயகனே சகலசித்து மாடும்பாரே. (194)
பாரடா பிரமனொடு விஷ்ணு ருத்திரன்
பண்பான குளிகனொடு தேவர்யாருஞ்
சீரடா சித்தர் முத்தர் முனிகள் பூதஞ்
சிறப்பில்லா ராக்ஷதையு மேவல் வைப்பு
தீரடா சத்துருக்கள் மிருகசாதி
திறமான யிடிமுதலாய் யெதிர் நில்லாது
வீரடா நினைத்தபடி யெல்லாஞ் சித்தி
விதமான போகருட கடாக்ஷந்தானே. (195)

(போ-ரை) இன்னும் மொன்று சொல்லுகிறேன் கேள்:—அதாவது கெண்டபேரண்ட மந்திரமாகும், ஆம், ஓம், அகோர பிரபல கெண்ட பேரண்ட ரீங்காரா, வியாக்கிரக வாசா, சர்வமிருகா, காற்முடு பல்லா, அஷ்ட்ட வஜ்ரா, சூலம், சங்கு, சக்கரம் அன்றி, தாதுப்பிரானே, மாலிதாகா, கெஜபக்ஷயெந்த நரசிம்மா, கற்பந்தா, அகனிலீலா கிலவச்ரமானகுண்டா தாஷ்டக வுக்ரமூர்த்தி, பக்ஷமாறுத மச்சாந்த உத்தமனே, உத்தண்ட வஸ்திர சர்ப்பாம், இப்பூமியில் உனையே நம்பினேன் என்று மனோதயிரியத்துடன் அந்தி சந்தியாக லக்ஷமுரு செபிக்க கெண்டபேரண்டமானது சித்தியாகும், இதற்குமூலமந்திரமாவது ஓம், இரீம், ஸ்ரீரீம், கிலீம், ஐயும், சுவாகஹா, கெண்ட பேரண்ட தீரசிங்கர, மகாசர்ப்பா, நந்தகாயா என்று பதினாயிரம்உருசெபித்து, ஓம், என்று ஆயிரம் உருஜெபித்து, நூறு பிராமணர்களுக்கும் போஜனஞ் செய்வித்து பத்துநாள் பூசைப்போட்டு வந்தால் சர்வ பகைவர்களுஞ் சேதமாவார்கள், சகலசித்துமாடும், பிரமன், விஷ்ணு, ருத்திரன், இந்திரன், தேவர்கள், சித்தர், முத்தர், முனிகள், பூதங்கள், ராக்ஷதர்கள் சத்துருக்கள், மிருகஜாதி, விஷஜந்துக்கள் ஆகிய இவைகள் எதிரே நில்லாது, நினைத்த விதமெல்லாஞ் சித்தியாகும், (எ-று)

## பிரத்தியங்கிராதேவி மந்திரம்.

தானே தா னின்னமொன்று சொல்லக்கேளு
　　தயவாகப் பிரத்தியங்கிரா தேவி மந்திரம்
வானேதான் சகல சத்துரு சம்மாரி
　　வளமான சகல சம்பத்து மீவாள்
தேனேதான் கிருபைவா ரிதியதானுள்
　　தெளிவான கார்மேக வடிவ முள்ளாள்
கோனேதான் சிங்கமுகஞ் சிங்கப்பல்லி
　　கொடிய முக்கண்ணு மக்கினி சுவாலையெண்ணே. (196)

எண்ணவே யஷ்டதிக்கும் நிறைந்ததேவி
　　இலகு மாயிரத்தோ டாயிரங்கை யுள்ளாள்
பண்ணவே கிண்கிணி மாலை கொண்டாள்
　　பக்தகர்தன் சத்துரு நாசஞ்செய்வாள்
அண்ணவே யுதிரமது பானஞ் செய்வாள்
　　அண்டவான சகல சாஸ்திரமும் வல்லாள்
நண்ணவே தியானித்துச் சரணம்பண்ணு
　　நாயகனே மூலமினி சொல்லக் கேளே. (197)

கேளப்பா ஓம் சுவாகஹா சிம்மே பிரதியங்கிரே
　　கெணிதமுடன் உம்படு ஓம் ஆம் யென்று
நாளப்பா இரீங் ஸ்ரீயுங் கிலியுமென்று
　　நலமான சிம்மமுகி ருத்திரகாளி
சூளப்பா வட்ட முக்கோண மிட்டுச்
　　சுகமாக வதின்மேலே யென்கோணஞ் சதுரம்
ஆளப்பா வட்டமதில் இச்சமென்றிட்டு
　　அறிய முக்கோணமேல் முனையிற்கேளே. (198)

கேளடா ரீங்கார மதிலேயிட்டு
　　கெணிதமுள்ள இடக்கோணம் உம்மைநாட்டி
ஆளடா வலக்கோணம் படுவேயென்று
　　அடைவான என்கோணம் ரீயைப்போடு
நாளடா நாற்கோணம் வலமேல்மூலை
　　நல்மாக ஆம்யென்று பதித்துப் போடு
சூளடா இடக்கோணம் மேலே யப்பா
　　சுகமாகக் கிரோம்யென்று சூட்டிப்போடே. (199)

போடேநீ யிடக்கோணங் கீழேயப்பா
　　புங்கமுடன் புரோம் யென்று பதித்துவைப்பாய்
ஆடேநீ வலக்கோணங் கீழேதானும்
　　அப்பனே ஸ்ரீமென்று அடைவாய்ப்போடு
சூடேநீ யக்ஷரங்கள் கிரந்தந்தன்னிற்
　　சூட்டினால் வலிமையடா தகடோதங்கம்
நாடேநீ லக்ஷமுரு ஜெபித்துத் தீரு
　　நாயகனே தற்பணமு மோமஞ் செய்யே. (200)

செய்யப்பா பிராமணருக் கன்னம்போடு
　　செயலாக நினைத்தபடி யெல்லாஞ் செய்யுங்
கையப்பா பூசையது சத்திபூசை
　　கனிவாகச் செய்திடுவாய் வெள்ளிதோறும்
அய்யப்பா இதற்கெதிரி ஜெகத்திலில்லை
　　யப்பனே வானுலகந் தன்னி லில்லை
உய்யவே போகருட கடாக்ஷத்தாலே
　　உத்தமனே புலிப்பாணி பாடினேனே. (201)

பாடினேன் பூச்சக்ரவாளத்துள்ளே
　　பண்பான மகமேரு பர்வதங்க ளெட்டும்
நாடினே நவகண்டஞ் சப்ததீவு
　　நலமான சப்தசா கரங்களேழும்

கூடியே யஷ்டதிக்கு ளைம்பத் தாறும்
குணமான தேசமெங்குஞ் சென்றாலுந்தான்
ஆடியே பிரத்தியங்கிரா கிருபையாலே
அப்பனே ஜெயங்கொண்டு மீளலாமே. (202)

ஆமப்பா விஷ்ணு நரசிங்கமாகி
அடைவாக விரணியனைக் கொன்ற தோஷம்
வாமப்பா பிரமை கொண்ட மயக்கந்தீர
வளமான ஈஸ்வரனுஞ் சரப ரூபந்
தாமப்பா வடிவுகொண்டு நரசிங்கத்தை
தான் கிழித்தே யுதிரமதைக் கொண்டதாலே
போமப்பா மருள் கொண்டு மயக்க மிஞ்சிப்
பொலிவான ஈஸ்வரனும் யிருந்தார் பாரே. (203)

பாரப்பா ஈஸ்வரனார் மயக்கம் நீங்க
பரிவான விஷ்ணு கெண்டபேரண்ட மாகிச்
சேரப்பா சரபத்தைப் பிளந்து பானஞ்
செய்தாரே ஈஸ்வரற்குப் பிரமை போச்சு
தீரப்பா கெண்ட பேரண்ட மப்பா
திறமழிந்து மருள்கொண்டு மயக்க மாகிக்
கூரப்பா தேவர்களை யடித்த தாலே
குணமான ஈஸ்வரனும் வோட லாச்சே. (204)

ஆச்சப்பா இதனைப் பார்வதியாள் பார்த்து
அடைவான பிரத்தியங்கிரா ரூபமாகி
மாச்சப்பா கெண்ட பேரண்ட பக்ஷி
மதம் நீங்கத் தான்பிடித்துச் சிரசைக் கொய்யப்
போச்சப்பா பிரமையது தீர்ந்து போச்சு
பொலிவான விஷ்ணுவுந்தான் உருவமானார்
வீச்சப்பா போகருட கடாக்ஷத் தாலே
விதமான புலிப்பாணி பாடினேனே. (205)

(போ-ரை) பிரத்தியங்கிராதேவி மந்திரத்தைச் சொல்லுகிறேன் கேள், சத்துரு சம்மாரியாகிய அவள் சகல சம்பத்துகளையுங் கொடுப்பாள், கிருபாசமுத்திர மாவாள், கறுத்த வடிவமுள்ளவள், சிங்கமுகமும், சிங்கப்பல்லும், மூன்றுகண்களும், அக்கினிச் சுவாலைப்போன்றவளும், அஷ்ட திக்குகளிலும் நிறைந்திரானின்ற தேவியும், இரண்டாயிரங் கைகளை யுடையவளும், கிண்கிணி மாலையைத் தறித்தவளும், சத்துருக்களை நாசஞ்செய்பவளும், சகல சாஸ்திரங்களில் வல்லவளும்

ஆகிய அவளைத் தியானித்து உச்சாடனம் பண்ண (சகலமும் கைக்கூடுவது மன்னியில் ஜெகத்தில் உனக்கெதிரில்லை ஆகையால் (இனிமூல மந்திரத்தைச் சொல்லுகிறேன், நீ கவனமாகக் கேட்பாயாக.

ஓம் சுவாகஹா, சிம்மே, பிரத்தியங்கிரே, உம், படு, ஓம், இரீங், ஸ்ரீயும், கிலியும், சிம்பமுகி, உத்திரகாளிஎன்று (அடியில்கண்டிருக்கும் சக்கரத்தின் படி) முதல் வட்டமிட்டு, அதின்மேல் முக்கோணம் போட்டு அதின்மேல் எண்கோணம், அதின்மேல்சதுரம்போட்டு, அதினுள்வட்டத்தில் இச்சம் யென்று போட்டு, முக்கோணத்தின் மேல்முனையில் ரீங்காரம்போட்டு கோணத்தின் அடியில் இடது முனையில் உம் என்றுபோட்டு, வலது முனையில் படு என்றுபோட்டு, எண்கோணத்தின்முனைகளில் ரீங் என்று போட்டு, நாற்கோணத்தின் வலது பக்க மேல் மூலையில் ஆம் என்றும், இடது மூலையில் கிரோம் என்றும், கீழ்ப்புறமும் இடது முனையில் புரோம் என்றும், வலது முனையில் ஸ்ரீம் என்றும் போடவேண்டும், இந்த அக்ஷரங்களை யெல்லாம் தங்கத்தகட்டில் கிரந்த எழுத்தால் போடவேண்டும். இதை லக்ஷமுரு செபித்து தர்ப்பணம் ஓமம் முதலியவைகள் செய்து பிராமணர்களுக்கு ஈன்றவரையில் அன்னதானஞ் செய்தால் நினைத்த வண்ணமெல்லாஞ் செய்யும். வெள்ளிக்கிழமைகள் தோறும் சத்திபூசையும் செய்தால் இதற்கெதிரி உலகத்திலும், தேவலோகத்திலும் இல்லை ஆகையால் பூச்சக்கிரவாளத்திற்குள்ளே மாமேருமலை, நவகண்டம், சப்ததீவு, சப்தசமுத்திரங்கள், அஷ்டதிக்கு, ஐம்பத்தாறு தேசங்கள் இவைகளுக்குப் போனாலும் ஜெயித்துகொண்டுவரலாம். (ஓர்சமயம்) விஷ்ணு நரசிங்க ரூபமாகி இரணியனைக் கொன்றபாவமானதுதீர ஈஸ்வரன்சர்ப்பப்பக்ஷி ரூபமாய் நரசிங்கத்தைக்கிழித்து உதிரங்குடித்ததால் ஈஸ்வரன் மயக்கங்கொண்டிருந்தார், ஈஸ்வரனுடைய மயக்கமானதுநீங்க விஷ்ணுவானவர் கெண்டபேரண்டமாய் சரபத்தைப்பிளந்து பானஞ் செய்தார், அப்போது ஈஸ்வரனுக்கு மயக்கம்போச்சு, அந்தகெண்ட பேரண்டம் மயக்கங்கொண்டு தேவர்களைஅடித்ததால், ஈஸ்வரன் ஓடும்படியானது இதைப் பார்வதியம்மாள் பிரத்தியங்கிராதேவி வடிவமாய் கெண்டபேரண்டபக்ஷியின் மதமானது நீங்க அதைப்பிடித்து சிரசை யறுக்க அதன் மயக்கந் தீர்ந்து விட்டது, அப்போது விஷ்ணு ரூபமானர் (ஆகையால் பிரத்தி யங்கிராதேவி சக்கரத்தை அடியில் காட்டலாயிற்று.






## அயச்செம்பு.

பாடியே அயச்செம்பு சொல்லக்கேளு
பண்பரங் கற்றாமரையின் கிழங்கை யாட்டி
கூடியே இரும்புகளின் மேலே பூசிக்
கூசாமற் புடம்போடச் செம்பதாகும்
ஆடியே அயச்செம்பு ஏழதாகும்
அப்பனே வெள்ளியிடை யொன்று கூட்டி
நாடியே யுருக்கிடவே ஏழுமாற்று
நாயகனே தப்பாது செய்துக் கேளே. (206)

கேளா யயச்செம்பொன்று தங்க மொன்று
கெணிதமுடன் தானுருக்கித் தகடாய்த் தட்டி
தூளாகப் பொடிசெய்து நறுக்கி யப்பா
சுத்திசெய்த ரசமிரண்டுங் கூட விட்டு
நாளான கெந்தியிடை நாலுங் கூட்டி
நாயகனே தாரமிடை அரையுஞ் சேர்த்து
வாளான பொற்றலையின் சாற்றா லாட்டி
வளமாக வுரலிட்டு குப்பிக் கேற்றே. (207)

ஏற்றப்பா சட்டிக்குள் மணல் விரல்தா நாலு
இதமாக நீகொட்டி குப்பிக்கே தான்

வாற்றமா மண்சீலை ஏழு செய்து
வாய்மூட மாக்கல்லை யுரைத்து மூடி
சாற்றவே குப்பிவைத்து மணலைக் கொட்டிச்
சார்வாகக் குப்பிவாய்க் கழுத்து மட்டும்
ஊற்றமாய் நாற்சாம மெரித்தே யாற்றி
உத்தமனே பிரிக்கச் செந்தூர மாமே. (208)

ஆமப்பா நவலோகம் பத்துக் கொன்று
அப்பனே தான்கொடுக்க மாற்றோ பத்து
தாயப்பா தேவிக்கும் நிருவாணிக்குந்
தயவாகப் பூசைசெய்து நிழலில் நின்று
வாமப்பா பெரியோரை வணங்கி வாழ்த்தி
வாழ்குவாய் யுலகமதிற் சீமானாக
நாமப்பா போகருட கடாக்ஷத்தாலே
நலமாகப் புலிப்பாணி பாடினேனே. (209)

(போ-ரை) அயச்செம்பு சொல்லுகிறேன் கேள்:— கற்றாமரைக் கிழங்கை நன்றாயரைத்து இரும்பின்மேல்பூசிப் புடம்போட்டால் அது செம்பாகும், அந்தச் செம்பு ஏழும், வெள்ளி ஒன்றுஞ் சேர்த்து உருக்க ஏழுமாற்றாகும், அந்தச் செம்பு ஒருஎடையும், தங்கம் ஒரு யிடையும் உருக்கித் தகடாகத் தட்டிப் பொடியாக நறுக்கி சுத்திசெய்தரசம் இரண்டெடை கூடச்சேர்த்து கெந்தகம் நாலெடை போட்டு தாளக அரை எடைசேர்த்து அவைகளை கரிசலாங் கண்ணிச் சாற்றாலாட்டி யுலர்த்திக் குப்பியில்போட்டு, அந்தக்குப்பிக்கு ஏழுசீலை மண் செய்து வாய்க்குப் பலப்பக்கல்லை வைத்து ஒரு சட்டியில் நான்குவிரற் கடை மணலைக்கொட்டி அதில் குப்பியை வைத்து அதன் கழுத்து வரைக்கும் மணலைப்போட்டு நாலுசாமமெரிக்க அது செந்தூரமாகும் நவலோகம் பத்துக்கு இது ஒன்று கொடுக்கப் பத்து மாற்றாகும், தேவிநிர்வாணி இவர்களைப் பூசித்து பெரியவர்களை வணங்கிதுதித்துஇவ் வுலகத்தில் சீமானாக வாழ்வாய். (எ-று)

## ரச மணி.

பாடியே ரசமதை சுத்திசெய்து
பண்பான நாகத்தின் வாயில் வார்த்து
ஆடியே முப்பூவுங் கழஞ்சு போட்டு
அடைவாகக் கட்டிநீ மேலே தூக்கு

கூடியே யதின்கீழே பானைவை நீ
கொற்றவனே பாம்பழுகி வீழும்பாரு
நாடியே ரசங்கட்டி மணியாய் போகும்
நாயகனே வேதைமுதல் வசியமாமே. (210)

ஆமேநீ கொதியிட்டுச் செந்தூரத்தால்
அப்பனே நவலோகந் தன்னில் வேதை
வாமேநீ யிருநூறும் இந்திர ஜாலம்
வளவான கண்ணாடி போலே தோற்றுந்
தாமேநீ நவரத்னங் கோர்த்தாற் போலே
தரணிதனில் விளங்கும் புலிப்பாணி தானும்
நாயேநீ போகருட கடாக்ஷம் பெற்றே
நலமான ஜாலமிருநூறும் பத்தும் முற்றே. (211)

(பொ-ரை) சுத்திசெய்த ரசத்தைப் பாம்பின் வாயில் வார்த்து முப்பூ ஒருகழஞ்சு கூடப்போட்டு வாயைத்தைத்து மேலேதூக்கி மேலுங் கீழுமாகக்கட்டி அதற்கடியில் ஒரு பானையை வை அந்தப் பாம்பானது அழுகி அந்தச்சட்டியில் விழும் அப்போது ரசங்கட்டி யிருக்கும், அதனால் அனேக வேதையாகும். அந்தரசத்தைக் கொதிக்கவைத்துச் செந்தூரஞ் செய்துக்கொண்டால் சகல லோகத்தையும் வேதிக்கலாம், நிற்க இந்த இருநூற்றுப்பத்தும் இந்திர ஜாலமாகும், கண்ணாடிபோல் தெரியும் நவரத்தினங்களை கோர்வை செய்ததுபோல புலிப்பாணியான நான் போகருடைய கடாக்ஷத்தால் பாடினேன். (எ-று)

புலிப்பாணி ஜாலத்திரட்டு — முற்றிற்று.



சிவமயம்.

புலிப்பாணிமுனிவர் அருளிச்செய்த

# சிதம்பரப் பூசை 25.

அத்திமுகன் றனையளித்த வரனே காப்பு
அகிலமெங்கும் நிறைந்துநின்ற வருளே காப்பு
முத்திதரு வேதாந்த முதலே காப்பு
முப்புரத்தைத் தகித்தெறித்த பரனே காப்பு
சத்தியொரு பாகம்வைத்த வரசே காப்பு
சங்கரனே யம்பரனே ஞான மூர்த்தி
வெற்றியாம் சிதம்பரத்தின் பூசை மார்க்கம்
விளம்புகிறேன் கணேசனுட பாதங் காப்பே.

(பொ-ரை.) விநாயகனைப் பெற்றவரும், உலகமெங்கும் வியாபித்திராநின்ற திருவருளும், வேதாந்த முதலும், முப்புரங்களையொழித்த பரமனும், உமையொரு பாகத்தண்ணலும், சங்கரனும், அம்மானும், ஞானமூர்த்தியும், சிதம்பர பூசைமார்க்கம் சித்தியடைய காவலாவார்கள். (எ-று.) (1)

காப்பான் ஆறுவரை குறுக்கே கீறி
கருதரிய ஆறுவரை நெடுக்கே கீறி
ஆப்பான யிருபத்தஞ் சறையு மாச்சு
அடைவான முனைதோறுஞ் சூலம் போடு
தாப்பான முதலறையி னுறு கோணந்
தயவான நகாரமொடு கூடவே தான்
வாப்பான ஐயோடு வகாரந் தானும்
வளமான லக்கமது பத்து மாமே.

(பொ-ரை.) ஆறுகீற்று குறுக்காகவும், ஆறுகீற்று நெடுக்காகவும் கிழித்தால் இருபத்தைந்துஅறை ஆச்சு, ஒவ்வொரு கீற்றின் முனையிலும் சூலம்போடு, பிறகு அந்த அறைகளில் முதல்அறைக்குள் நாற்கோணமிட்டு அதின்மத்தியில் நகாரம், ஐகாரம், வகாரம் இவைகளும் லக்கம் பத்தும்போடவேண்டும். (எ-று.) (2)

ஆமப்பா அடுத்தறையிற் பிறைதான் கோணம்
அடைவான மகாரமொடு இகாரங் கூடத்
தாமப்பா கிலீயோடு வகாரந் தானுந்
தயவான லக்கமது பதினெட் டாகும்
வாமப்பா அடுத்தறையில் முக்கோணந் தான்
வளமான சிகாரமொடு உகாரந் தானும்
நாமப்பா சவ்வுடனே நகாரந் தொட்டு
நலமான லக்கமது பதினு லாமே.

(பொ-ரை.) அதற்குச் சமீபமான இரண்டாவது அறையில் மூன்றும் பிறைபோற் கோணம்போட்டு அதின்நடுவில் மகாரம், இகாரம், கிலீம், வகாரம் இவைகளையும் லக்கம் பதினெட்டும் போடவேண்டும். மூன்றாவது அறையில் முக்கோணம்போட்டு அதின் நடுவில் சிகாரம்,உகாரம், சவ், நகாரம் இவைகளும்லக்சம் பதினான்கும் போடவேண்டும். (எ-று) (3)

ஆமடா யிதனருகே யறுகோணந் தான்
அடைவான வகாரமொடு ஒகாரந் தானும்
தாமடா ஸ்ரீம் ஐம்முடனே யகாரங் கூடத்
தயவான லக்கமது ஆறும் பாரு
வாமடா யிதனருகே வட்டம்போடு
வளமான யகாரமொடு ஒகாரந்தான்
நாமடா ஹரிவோ மென்று நாட்டி
நலமான அகாரமொடு லக்க மூன்றே.

(பொ-ரை.) நாலாவது வீட்டில் அறுகோணம்போட்டு அதின் மத்தியில் வகாரம், ஒகாரம், ஸ்ரீம்,ஐம், யகாரம் இவைகளையும் லக்கம் ஆறையும் போடவேண்டும், ஐந்தாவது வீட்டில் வட்டமாகக் கோணம்போட்டு அதின்மத்தியில்யகாரம், ஒகாரம்,ஹரிஓம், அகாரம் இவைகளையும் லக்கம் மூன்றையும் போடவேண்டும்.

மூன்றான நடுவணையை எடுத்து மாறி
மூன்றுமாய் சக்கரமோ ரிருபத் தஞ்சில்
நான்றான சூலத்தி னிடைகள் தோறும்
நாயகனே ரீயும் ஸ்ரீம்மென்று மாட்டு
பான்றான சூலமுனை ஸ்ரீம்மைப் போடு
பண்பான கிரிவட்டம் பாங்காய்ச் சூட்டு
ஊன்றான உள்வட்ட மிதழ்தானு மூன்று
உத்தமனே யிருவட்ட மிதழீரெட்டே.

(பொ-ரை.) இவ்விதமே மற்ற நான்கு வரிசைகளாக யிருக்கின்ற இருபதுவீடுகளுக்கும் ஒவ்வொரு வரிசையிலுள்ள மூன்றாவதுவீட்டுக் கோணங்களி லுள்ளவைகளிலிருந்து வரிசையாக மாறிப்போடவேண்டும் பிறகு இவ்விதம் போட்டுமுடிந்த இருபத்தைந்து அறைகளின் முனைகளுக்கெல்லாம் சூலம்போட்டு அச்சூலங்களின்மத்தியில் ரீயும், ஸ்ரீமென்றுபோட்டு சூலத்தின் முனைகளில் ஸ்ரீம்போட்டு, அதற்குமேல் முழுவளையம் நான்குபோட்டு அதில் முதல் வளையத்தில் மூன்று இதழ்களையும், இரண்டாவது வட்டத்தில் பதினாறுஇதழ்களையும், (எ-று.) (5)

எட்டான திரிவட்ட மெண்ணான் கப்பா
இதமாக நடுவட்ட முதலா மாதி
கட்டான அகாரமுதல் சகாரமட்டுங்
கனிவாக ஐம்பத்து மூன்றுமாச்சு

கிட்டான உபரேகை வாசல் நாலு
 கீழ்வாசல் கணபதிக்குக் கங்குநாட்டு
நட்டான மேல்வாசல் வடுகன்பீஜம்
 நாயகனே வங்கென்று நாட்டிடாயே.

(பொ-ரை.) மூன்றாவது வட்டத்தில் முப்பத்திரண்டு இதழ்க ளையும்போட்டு அவ்விதழ்கள் ஐம்பத்தொன்றிலும் ஐம்பத்தொரு பீஜாக்ஷரங்களைப் போடவேண்டும்; இவைகள் தீர்ந்தபின் அந்த வட்டங்களுக்குமேல் இரண்டுகீற்றுகளாக நான்குவாசல்கள்கட்டி அவ்வாசல்களின் கீழ்வாசலில் கங் என்று கணபதிக்கும், மேல் வாசலில் வங் என்று வடுகனுக்கும் போடவேண்டும்-என்று. (6)

நாட்டியே தென்வாசல் பிரிதிபீஜம்
 நலமாக இம்மென்று நாட்டு நாட்டு
கூட்டியே வடவாசல் மதியின்பீஜம்
 குணமாகச் சம்மென்று குறித்துப்போடு
ஆட்டியே யுபரேகை வீதிக்குள்ளே
 அடைவாக விந்திரனில் அம் பாருபாரு
வாட்டியே வக்கினியில் ரம் மென்றப்பா
 வளமாக எமன்றனிற் சம் மென்றுபோடே.

(பொ-ரை.) தெற்குவாசலில் இம் மென்று பிருதிவி பீஜமும் வடக்குவாசலில்சம்மென்று சந்திரபீஜமும்போட்டு அந்தஇரண்டு ரேகை தெருவுக்குள் இந்திரன்தெருவில் அம் என்றும், அக்கினி யில் ரம் என்றும், எமனில் சம்மென்றும்-என-று. (7)

போடவே நிருதியிலே லம்மேயாகும்
 பொலிவாக வருணனிலே வம்மேபாரு
சாடவே வாய்வுதனில் வம்மேபோடு
 சார்வான குபேரனிலே ளம்மேநாட்டு
வீடவே யீசானன் சம்மேசேரு
 விதமான அஷ்டதிக்குப் பாலராச்சு
ஆடவே போகருட கடாக்ஷத்தாலே
 அப்பனே புலிப்பாணி பாடினேனே,

(பொ-ரை.) நிருதியில் லம் என்றும், வருணனில் வம் என் றும்,வாயுவில் வம் என்றும்,குபேரனில் ளம் என்றும்,ஈசானனில் சம் என்றும், அஷ்டதிக்குப்பாலகர் பீஜங்கள் போடவேண்டும்.

பாடினேன் தமிழெழுத்தில் அகாரந்தொட்டுப்
 பண்பான பிரணவத்தின் வரைக்கும் போட்டு
கூடியே தமிழெழுத்தில் அகாரந்தொட்டு
 கொற்றவனே ஒவ்வரையி லுயிராய்ப்போடு

தேடியே யிந்தவிதம் போட்டாயானால்
திறமான சக்கரத்திற் சுற்றிப்போட
நாடியே சக்கரத்திற் சுற்றிப்போட
நலமாக ஈராறு எழுத்து மாச்சே,

(பொ-ரை.) பிறகுசக்கரத்தைச்சுற்றி தமிழ்உயிரெழுத்துகள் பன்னிரண்டையும் போடவேண்டும். இப்படிபோட்டால் அவைகளும் இந்தச்சக்கரத்திற்கு ஒரு உயிராகும்-எ-று. (9)

ஆச்சப்பா அசபையுட எழுத்து சம் அம்
அடைவாக மேல்வாசல் கீழேபோடு
பாச்சப்பா வலமங்கி ஸத்தி பீஜம்
பண்பாக அம்மென்று பதித்துப்போடு
வாச்சப்பா யிடம் பரா சத்தி பீஜம்
வளமாகக் கிரோமென்று குறித்துப்போடு
வீச்சப்பா வலப்பாக மிடப்பாகந்தான்
விதமான ஐயுங் கிலியுங் சவ்வு மாமே.

(பொ-ரை.) இதன் மேல்வாசலின்கீழ் அசபா மந்திரங்களாகிய சம், அம் என்றும், அதற்குவலதுபக்கத்தில் அங்கிசத்தி பீஜமாக அம் என்றும், இடதுபக்கத்தில் பராசத்திபீஜமாக கிரோம் என்றும், போட்டதன்றி வேறாக வலதுபக்கத்திலும் இடதுபக்கத்திலும் கிலியும், சவ்வும் என்று போடவேண்டும்-எ-று, (10)

ஆமடா அம், இம், உம், எம், ஒம்மென்றே
அப்பனே பஞ்சபக்ஷி இருபுறமும்போடு
வாமடா அம் சம் ஸ்ரீ யும்மென்று
வளமான மங்குடனே நசியென்றோது
தாமடா கிறீம்முடனே ரீம்முங்கூட்டித்
தயவான விதமுடனே யங்கியென்றால்
நாமடா நவக்கிரக பீஜமாச்சு
நலமான சக்கரத்தைச் சுற்றிப்போடே.

(பொ-ரை.) பிறகுபஞ்சபக்ஷிபீஜங்களான அம்,இம்,உம்,எம் ஒம் என்றும்,இரண்டுபக்கங்களிலும் நவக்கிரகபீஜங்களான அம், சம், ஸ்ரீம், உம்,மங், நசி, கிரீம், ரீம், அங் என்று சுற்றிலும்போடவேண்டும்-எ-று. (11)

போடப்பா சொரூபியென்ற வெழுத்துமப்பா
புகழ்தரு வம், கிலி, யல்லோ மதனபீஜம்
நாடப்பா கீழ்வாசல் மேலே யப்பா
நலமான ஈதிரண்டும் பதித்துப் போடு
கூடப்பா சிதம்பரத்தின் பூசைசெய்யக்
கூத்தாடுங் கணங்கள்முத லெதுவானாலும்
ஆடப்பா போகருட கடாக்ஷத்தாலே
அடைவாகப் புலிப்பாணி பாடினேனே.

(பொ-ரை) பிறகு மதன பீஜமான அம், கிலீம் என்று, கீழ் வாசலுக்கு மேலும்போட்டுப் பூசைசெய்ய கணங்கள் முதல் எல்லாம் கூத்தாடும்-எ-று. (12)

பரிடியே அகாரத்தி லுகாரமிட்டுப்
பண்பான ஓங்காரங் கொண்டுகட்டி
நாடியே யதின்கீழே மகாரமிட்டு
நலமாக அதின்மேலே ரீங்காரந்தான்
கூடியே அரியெழுத்து மேலேவாங்கிக்
குணமாகச் சூலமிட்டு ஸ்ரீயைநாட்டு
ஆடியே சிங் வங் கென்றுநாட்டு
அடைவா ஏகாக்ஷரத்தைப் பதித்துப்போடே.

(பொ-ரை.) அகாரத்தில் உகாரத்தைச் சேர்த்து அவைகளை ஓங்காரத்தால் கட்டி, அவ்வோங்காரத்தின்கீழ் மகாரமும் அதின் மேலே ரீங் என்றும் மேல்சுற்றி, மத்தியில் ஹரி என்றும், அதற்குமேல் சூலம்வாங்கியும் அந்தச்சூலத்தில் ஸ்ரீ என்றும், ஓங்காரத்தின் வலது இடது பக்கங்களில் சிங் வங் என்றும்போட்டுஏகாக்ஷரத்தையும் அந்தச் சக்கரத்தில் அடைப்பாய்-எ-று. (13)

போடவே சிந்தாமணிக்குச் சிகாரமிட்டு
பொங்கமுடன் மகாரமொடு எகாரம்போட்டு
ஆடவே அகாரமுடன் வித்தைபோட்டு
அடைவான சக்கரத்தில் திரிவாகிகூட்டக்
கூடவே சிந்தாமணிக்கு பீஜமாச்சு
குணமான சக்கரத்திற் பதித்துப்போடு
நாடவே போ கருட கடாக்ஷத்தாலே
நலமான புலிப்பாணி பாடினேனே.

(பொ-ரை). பிறகு சிகாரம்போட்டு, மகாரமும், எகாரமும் அத்துடன்கலந்து, அதின்கூட அகாரமும் விந்தும்போட்டு சுற்றிறு லாகின்றசிந்தாமணி பீஜத்தையும் அந்தச் சக்கரத்தில்அடைத்து விடுவாய்-எ-று. (14)

பாடியே வலப்புருவம் அகாரம் போடு
பண்பான இடப்புருவம் ஆகாரம்போடு
நாடியே வலக்கண்ணும் இகாரம்போடு
நலமான இடக்கண்ணும் ஈகாரந்தான்
தேடியே வலதுசெவி உகாரம்போடு
திறமான இடதுசெவி ஊகாரந்தான்
வாடியே வலது கன்னம் ஓரோம்நீபோடு
வடிவான இடதுகன்னம் ஈரோம்நாட்டே

(பொ-ரை) அந்தச் சக்கரத்தின் வலது புருவத்தில் அகாரமும், இடது புருவத்தில் ஆகாரமும், வலது கண்ணில் இகாரமும் இடதுகண்ணில் ஈகாரமும், வலது செவியில் உகாரமும். இடது

செவியில் ஊகாரமும், வலது கன்னத்தில் ஓமோம் என்று, இடது கன்னத்தில் ஈறேம் என்றும் போடவேண்டும்-எ-று. (15)

நாட்டப்பா வலமூக்கு இல்லாவென்றும்
நாயகனே இடமூக்கு ஈலாவாகும்
ஆட்டப்பா மேலுதடு ஏயைப்போடு
அடைவான கீழுதடு ஐயைப்போடு
கூட்டப்பா மேற்றந்தம் ஒவ்வைப்போடு
குணமானகீழ்த்தந்தம் ஔவைநாட்டு
மாட்டப்பா நாவதிலே அம்மென்றப்பா
மணியான கண்டத்தில் அகாரமெண்ணே,

(பொ-ரை) வலது மூக்கில் இல்லா வென்றும், இடதுமூக்கில் ஈலாவென்றும், மேல் உதட்டில் ஏ என்றும் கீழ் உதட்டில் ஐஎன்றும், மேல்தந்தத்தில் ஒ என்றும், கீழ்தந்தத்தில் ஔ என்றும், நாக்கில் அம் என்றும், கண்டத்தில் அகாரம் என்றும் போடவேண்டும்-எ-று. (16)

எண்ணவே சக்கரத்திற் பதித்தபின்பு
இதமான சங்கடங்கள் நிவர்த்திசெய்து
நண்ணவே பிராமணப் பிரதிஷ்டைசெய்து
நவிலோமப்பூசை சோடசமுஞ் செய்து
அண்ணவே சுகந்தபரி மளங்கள்புஷ்பம்
அடைவாக வர்ச்சித்துக் கனிகளோடு
தண்ணவே பலகாரம் பரமானந்தந்
தாம்பூல மிளநீரும் பாலுந்தானே

(பொ-ரை) இப்படி எல்லாஞ் சக்கரத்திற் போட்டபின்பு சங்கடங்களை யெல்லாம் ஒழித்து பிராமண பிரதிஷ்டைசெய்து ஓமப்பூசையைசோடச மென்னும் பதினாறுகச்செய்து நல்லவாசனைகள் புஷ்பங்கள்இவைகளால் அர்ச்சித்து பழம், பலகாரம், தாம்பூலம் இளநீர், பால்முதலியவைகளும்-எ-று. (17)

தேனான,பாணக்கம் அன்னத்தோடு
தெளிவான அறுசுவை வஸ்துவுஞ்சுத்தி
தானான சர்வமுஞ் சுத்திவைத்து
தயவாக பூசித்துத் தியானமோது
வானான கற்பூர தீபமேற்றி
வணங்கவே அஷ்டசித்துஞ் சித்தியாகும்
யானான அஷ்டசித்தி நிர்த்தனஞ் செய்வாள்
வானவரும் லோகமெல்லாம் வசியமாமே

(பொ-ரை) பானகம், அன்னம், அறுசுவை, வஸ்து முதலியவைகளெல்லாம் சுற்றிவைத்து பூசைசெய்து தியானஞ்செய்து கர்ப்பூரதீபமேற்றி வணங்கினால் சர்வமுஞ் சித்தியாகும். அஷ்டசத்திகளும் தாண்டவமாடுவார்கள், தேவர்கள் முதல் சகல லோகமும் வசியமாகும்-எ-று, (18)

ஆமடா சிவகிரியில் தண்டாயுதபாணி
அவனைத்தான் பூசித்தோர் சொல்லக்கேளு
தாமடா கிரேதா யுகத்திலப்பா
தயவான இந்திரரும் பூசைசெய்தார்
வாமடா திரேதா யுகத்திலப்பா
வண்மையாய்க் கவுசிகர்தா மகிழ்ந்துசெய்தார்
காமடா துவாபரத்தில் போக நாதர்
கலியுகத்திற் புலிப்பாணி பூசித்தேனே.

(பொ-ரை) சிவகிரியிலிருக்கின்ற தண்டாயுதபாணியை கிரேதாயுகத்தில் இந்திரரும், திரேதாயுகத்தில் கௌசிகரும், துவாபரயுகத்தில்போகநாதரும், கலியுகத்தில் புலிப்பாணியான நானும் பூசை செய்தோம்-எ-று. (19)

பூசித்த ஞானமது தொண்ணூற்றாறு
பொங்கமுடன் பலதிரட்டு நூறுமாகும்
ஆசித்தேன் கொக்கோகம் நூறுபாதி
அப்பனே ஜாலமது ரெண்டுநூறு
வாசித்தேன் ஜோதிடந்தான் மூந்நூறாகும்
வளமான வயித்தியமே ஐந்நூறாகும்
வீசித்தேன் ஷண்முகத்தின் பூசைமார்க்கம்
விதமான முப்பதிலே விளம்பினேனே.

(பொ-ரை) ஞானம் தொண்ணூற்றாறு, பலதிரட்டு நூறு, கொக்கோகம் நூற்றைம்பது, ஜாலம் இருநூறு, சோதிடம்மூந்நூறு, வயித்தியம் ஐந்நூறு, ஷண்முகபூசைமார்க்கம் முப்பது ஆகிய இவைகளைச்சொன்னேன்-எ-று (20)

விளம்பவே சிமிழ்வித்தை இருபத்தஞ்சு
விதமான தேவியுட பூசைமார்க்கம்
தளம்பவே யிருபதோ டொன்றினுள்ளே
தயவாகச் சொல்லிவைத்தே னன்றுப்பாரு
கிளம்பவே சிதம்பரந்தா னிருபத்தஞ்சு
கெட்டியாய்ப் பாடினே னுகந்துபாரு
வளம்பவே போகருட கடாக்ஷத்தாலே
வளமான புலிப்பாணி பாடினேனே

(பொ-ரை) சிமிள்வித்தை இருபத்தைந்து, தேவிபூசை இருபத்தொன்று, இவைகளைச்சொல்லி சிதம்பரம் இருபத்தைந்தையுமிகவும்கெட்டியாகச் சொன்னேன், இது போகருடைய கிருபையேயாகும்-எ-று, (21)

* பாடினேன் யநமசிவ வசிய மாகும்
பண்பான மசிவயந மோகனமேசித்தி
ஆடியே வசிமநய அழைப்பு மாகும்
அப்பனே நமசிவய தம்பனமே செய்யும்

* (தொழிலாளியானால் இதை எளிதில் கண்டுணரலாம்

கூடியே வயநமசி யுச்சாடனந்தான்
குணமாக யவசிநம பேதனந்தான்
தேடியே நயவசிம வித்துவேஷணம்
தெளிவான சிவயநம மாரணமேயாமே.

(பொ-ரை) ய ந ம சி வ வசியமாகவும், ம சி வ ய ந மோகனமாகவும், வ சி ம ய ந அழைப்பாகவும், ந ம சி வ ய ஸ்தம்பனமாகவும், வ ய ந ம சி உச்சாடனமாகவும், ய வ சி ந ம பேதனமாகவும், ந ய வ சி ம வித்வேஷண மாகவும், சி வ ய ந ம மாரண மாகவும் ஆகும்-எ-று. (22)

ஆமடா வசியமுடன் தம்பனம் பேதனம்
அடைவான நடுவணையை பிடித்துமாறு
தாமடா மோகனமு மழைப்புமப்பா
தயவாக விரண்டெழுத்தை யெடுத்துமாறு
வாமடா நாலெழுத்தைமாறில் வித்துவேஷணம்
வன்ன முச்சாடனங்கள் தலையாக்போடு
தீமடாமாரணங் கடை யெழுத்தைமாறித்
தீர்ந்த சக்கரமெலா மாரணமாகும்மே

(பொ-ரை) வசியம், தம்பனம், பேதனம் இவைகளுக்கு நடுவணையைப்பிடித்தும், மோகனம், அழைப்பு இவைகளுக்கு இரண்டாவதெழுத்தைப் பிடித்தும், வித்துவேஷணத்திற்கு நாலாவதெழுத்தைப் பிடித்தும், மாரணத்திற்கு கடையெழுத்தைப்பிடித்தும் மாறவேண்டும்-எ-று (23)

ஆமடா காரீயம் வசியமாகும்
அப்பனே வங்க மோகனமே சித்தி
தாமடா பொன்னதுவு மழைப்புமாகும்
திறமான செம்பது தம்பனமேசித்தி
வாமடா வெள்ளீய முச்சாடிக்கும்
வளமான குருத்தோலை வித்துவேஷணம்
போமடா இரும்பு பேதனமேயாகும்
பொங்கமுறு வெள்ளி மாரணந்தானுமே.

(பொ-ரை.) காரீயம்வசியமும், வங்கம் மோகனமும், பொன் அழைப்பும், செம்பு தம்பனமும், வெள்ளீயம் உச்சாடனமும், குருத்தோலை வித்துவேஷணமும், இரும்புபேதனமும், வெள்ளி மாரணமுமாகும்-எ-று. (24)

தானென்ற வசியமுடன் தம்பன மோகனந்
தயவான அழைப்புமுத லிவைநாலுக்குங்
கோனென்ற ஆள்காட்டி விரலேநீளங்
குணமான அகலமப்பா பெருவிரலின் நீளம்
தேனென்ற பேதன மாரண வித்துவேஷணம்
தெளிவான ஆக்ருஷண மிவைநாலுக்கும்
பானென்ற பவுத்திரவிரல் நீளமப்பா
பகர்ந்த சிறுவிரலதுவு மகலமாமே.

(போ-ரை.) வசியம், தம்பனம், மோகனம், அழைப்பு இவைகள்நாலுக்கும் ஆள்காட்டிவிரல் நீளமும், பெருவிரல் அகலமுமாகும். பேதனம், மாரணம், வித்துவேஷணம் இவைகள்நாலுக்கும்பவுத்திரவிரல் நீளமும், சிறுவிரல் அகலமுமாகும் எ-று. 25

ஆமடா யிறையாறு வீசமாகும்
அப்பனே பன்னிரெண்டு அரைக்காலாகும்
தாமடா மூவெட்டுக் காலேயாகுந்
தயவாக யிதிலிரட்டி யரையே யாகும்
வாமடா யிதிலிரட்டி முழுசென்பார்கள்
வளமான கனமப்பா நெற்கனந்தான்
நாமடா வீசமது ஒரு நெல்லாகும்
நலமான சிதம்பரத்தின் பூசைமுற்றே.

(போ-ரை.) வரி யாறு வீசமும், பன்னிரெண்டு அரைக்காலும் இருபத்துநான்கு காலும், நாற்பத்தெட்டு அரையும், தொண்ணூற்றாறுமுழுசும் என்று சொல்லுவார்கள், இதற்கு நெல்கனமே உரியதாகும்.(வீசமென்பது ஒருநெல் கனமாகும்.) எ-று. 26

சிதம்பரபூசை 26 - முற்றிற்று.

---

உ

கடவுள்துணை.

# விநோத ஜாலத் திரட்டு.

## கற்போற்பத்தி சொல்லும் வித்தை

சித்திரைப் பத்தாந் தேதியில் தூரம்
சென்றிடிலது முதற்பத்து வரையில்
பத்தாகு மதிலேழு சேரில் பின்னேழ்
பகர்தறி தைமாதம் பதினேழ் தேதியில்.

(போ-ரை.) சித்திரைமாதம் 10வ-யில்ர ஜஸ்வலை யாகில் அது முதல் 10 மாதம் எண்ணிப்பார்க்க தை மாதம் 10வ- ஆகின்றது, அதினோடு-7- நாள் சேர்க்க தை மாதம் 17வ- குளிகுளிப்பார்கள். மாதங்கள் 15 வக்குள் தூரம் வந்தால் 9 மாதக்கணக்கிலும்,15வக்கு மேற்பட்டால், 11 மாதக்கணக்கிலும் மாதர்கள் எப்பொழுதும்பிரசவிப்பார்கள். எ-று. 1

## வீட்டைவிட்டு வெளிவரும் வித்தை

கைகாற் பெருவிரல் கட்டாய்க்கட்டி
கவிழாமற்றூங்கக் கடந்தைக்கீழ் போடாய்
செய்யீரா றுண்டிற்கு மீடாய் சித்தித்
திடவெளி வந்திடச் சென்றுள்ளே யோடாய்.

(போ-ரை.) இரண்டுகால் பெருவிரல்களையும், இரண்டு கை பெருவிரல்களையும் கட்டி மல்லாந்துபடுத்து தன் மனதைப் பூரணத்தில் நிருத்தி, நட்டாத்திலிருக்க மனஞ்சொக்கி மவுனத்திலூன்றிச்சுழுத்தியிலடங்கிவிடும், பின்பு தெளிந்தவுடன் இவ்விரண்டு கட்டுகளையும் அவிழ்த்துவிட்டு மறுவேலைபார்க்கவும். இப்படிசதா நடத்துவதில் 12 வருஷத்திற்குள் சித்தியாகும், இவனை எந்த வீட்டிலாகிலும், அல்லது கருங்கற்கட்டடத்திற்குள் விட்டு பந்தோபஸ்து செய்தாலும் இவன் வெளிவர சுவர்க ளிடங்கொடுக்கும், அவை யொருவருக்குந்தெரியாது இதைப்பரகாயப் பிரவேசமெனப்பகர்வர். இப்படிச்செய்வோரைச்சித்துபுருஷனென்றே சொல்லுவார்கள். எ-று. 2

## ஓட்டமாக வோடும் வித்தை.

விழுதியிலை வாயில் மென்னுநின்று
விட்டடக்கிக் கொஞ்சந் தாடையிற் சண்ணு
பழுதரவோடவே பாரிலென்னுளும்
பத்தாலு மிளைப்பில்லைப் பரிந்து பாரிண்ணு.

(போ-ரை.) விழுதியிலையை வாயிற்போட்டுக் கொஞ்சம் மென்று தின்று கொஞ்சம் வாயிற் றுடையிலடக்கி வைத்துக்கொண்டு எந்தமட்டில் ஓடினாலும் ஓடலாம், இளைப்பு களைப்பு யில்லை, நிற்கவேண்டுமானால்ஒருமரத்தைப் பிடித்து நிற்கவேண்டியது, காதத்திற்3 மேலும் ஓடலாம். எ-று.

## முச்சிலில் பொரி பொரிக்குஞ் ஜாலம்.

முச்சிலில் பொரி பொரிக்குஞ் ஜாலம் சொல்வேன்
சிறு முச்சில் செய்து கள்ள அறையும் வைத்து
இச்சகமாய்க் கள்ளறையில் பொரியும் ரொப்பி
இறுமுச்சில் யென்று தெரி யாமற்றனே
துச்சமேல் முச்சிலிலே பிடிநெல்போட்டு
துறுசாகச் சபையோர்க்கு யெடுத்துக்காட்டி
மச்ச எக்ஷணியென்று துணியின்மீது
மறுத்து கள்ள வறைந்றதிரக்கப் பொரியுண்டாமே

போ-ரை. ஒரு அடி அகல நிகளமுள்ள ஒரு முச்சல்செய்து அதற்குஅடிபுறத்தில் அந்தமுச்சலிலேயே கள்ள அறை வொன்று அத்துடன் கலந்தாப்போலேயே முடைந்துவிட்டு அதற்குள் பிடிக்குமட்டும் நெற்பொரியை போட்டு நிரப்பி வைத்துக்கொண்டு சபையில்வந்துஉட்கார்ந்துக்கொண்டு ரெண்டுமுழ சவுக்கருட்டை யொன்றை கழுத்தில் கட்டிக்கொண்டு இரண்டு முனையை கால்பெருவிரலால் பிடித்துக்கொண்டு முச்சிலை சாக்கிரதையாக பிடித்துக்கொண்டு சபையோர்களுக்கு காட்டி அந்த முச்சலில் ஒருபிடி நெல்லை போட்டு ஜலம் கொஞ்சந்தெளித்து ஒடி குட்டையில் கொட்டிக்கொண்டு பொரிபொரிப்பதுபோல முச்சிலால் துழாவிதுழாவி குலிக்கிக்கொண்டேயிருந்து கள்ள அறையை மெதுவாகவிட்டுவிட்டு அவசரமாகத்துழாவுவதுபோல் துழாவி குட்டையைக் குலுக்கி நெல்பொரி யெடுத்துக் காட்டவும் எ-று. 4

## பாலைத் தயிராக்குஞ் ஜாலம்.

குருணிப்பாலில் வாழைக்கிழங்கு பொடி
கொண்டுழக்குத்தூள் குழப்ப முழங்கு
வருணித்தே யிராய் வழங்கு நாளு
மண்டலத்தோ ரார்க்கிதை வகுக்கு மொழுங்கு.

(போ-ரை.) குருணிப்பாலில் வாழைக்கிழங்கை யுலர்த்தி வஸ்திரகாயஞ் செய்த தூளில் உழக்கு அதிற் போட்டுக் கலக்கத் தயிராகும், இன்னும் நாணற் புல்லுபோட்டாலும் தயிராக திரளும். எ-று. 5

## நெருப்பு வித்தை

மானப்பா மணித்தக்காளி சாறுகூட
மைந்தனே உத்தாமணியின் சாறுகூட்டி
வானப்பா வசலையின் சாறு சேர்த்து
வளமாக மத்தித்து வைத்துக் கொண்டு
தானப்பா கைகாலில் தடவிக்கொண்டு
தன்மையாய்த் தணல்மிதிக்கத் தணலும் நீர்போல்
ஏனப்பா யிவ்விதமே செய்தாயானால்
இதமாகத் தணலதுவுந் தயங்குந்தானே.

(போ-ரை.) மணித்தக்காளி சாறும், உத்தாமணிச்சாறும்,வசலைச்சாறு இம்மூன்றும் ஒன்றாகக்கலந்து கைகளிற்பூசி நெருப்பையெடுக்கவும், அல்லது கால்களிற்பூசி நெருப்பைமிதிக்கவும், கைகால்கள்சுடாது, கொப்பளிக்காது, என்னேரம்விளையாடினாலும் விளையாடலாம். எ-று. 6

## மீன்படும் வித்தை.

திருகு கள்ளியைத் தறித்ததுண்டு
 செய்ததை யேரிக்குள் மடுவிரித்து
பெருகு மீனிருக்கக் குறித்துப்போட்டு
 பின்பற்றிவார மிதக்கு மரித்து.

(போ-ரை.) திருகுகள்ளியை முழமுழத் துண்டுகளாய்த் தறித்துஏரி, குளம், மடுக்களில்நாலுபக்கத்திலும்அடர்த்தியாய்ப் போட்டுவைத்திருக்க சற்றுநேரத்திற்குள் அதிலிருக்கும் மீன்களெல்லாம் மிதந்துபோய்விடும். அதிலொன்றேனும் தப்பி பிழைக்காது.

## தீவட்டி கொளுத்தி வாயில் வைக்குஞ் ஜாலம்.

பாரப்பா பாருலகில் பிரமிக்கச் சொல்வேன்
 பதிவாக மனத்தினிடம் நிறுத்திவை நீ
காரப்பா கால்பலமே கற்பூரம் வாங்கி
 கடிதாக வாயிற்போட்டு மென்று துப்பி
சாரப்பா சபைதனிலே பந்தத்தைச் சுற்றி
 சரியாகக் கொளுத்தி சபை யோர்க்கு காட்டி
நேரப்பா வாயிலிட்டு எக்ஷணியே யென்று
 நிசிவாக நில்லடி யென் பக்கல் யென்னே.

(போ-ரை.) கால்பலம் கற்பூரம் வாங்கி வாயிற்போட்டு மென்றுகீழேமுழிந்துவிட்டு சபையில்நின்றுக்கொண்டுபந்தத்தைச்சுற்றி கொளுத்தி சபையோர்களுக்குக்காட்டி எக்ஷணீ நீ என் பக்கல் வந்துநில்லடியென்று வாயிக்குள்வைத்து வாயைமூடி திறந்து காட்டலாம். எ-று.

## தேள்விஷம் ஏராமலிருக்குஞ் ஜாலம்.

ஆமேதான் கதிர்வார வுதயந்தன்னில்
 அருமையாங் கருங்கருணை மூலியைத்தான்
யாமேதான் தூபமிட்டுக் காப்புக்கட்டி
 யருமையாங் கணபதியைப் போற்றிச்செய்து
வாமேதான் மாலைவேளை சென்று நீயும்
 வருமையாம் வேரதனைக் கொண்டுவந்து
காமேதான் குளிசத்திலிடவே கையில்
 கருமையாந் தேள்கடிக்கில் விஷமேறாதே.

(போ-ரை.) ஆதிவாரம்காலையில் கருங்கருணைக்கு தூபதீபமிட்டுகாப்புகட்டிவிநாயகரைதொழுதுமாலைவேளைபோய் தூபதீபமிட்டு

தேங்காயுடைத்து அதின் வேரைக்கொண்டு வந்து குளிசத்திலடைத்துக் கையில்கட்டிக்கொள்ள தேள்கடிக்கில் விஷமேறுது. எ-று.

## பானையின்பேரில் தேங்காயைவைத்து தடியால் அடிக்க பானையுடையாமல் தேங்காயுடையுஞ் ஜாலம்.

கேளப்பா யின்னமொரு புதுமைகேளு
　　கிடைக்கு மப்பா கீழ்க்காயின் நெல்லியைத்தான்
ஆளப்பா அருக்கநாள் காப்புக்கட்டி
　　அடைவாகத் தூபமிட்டுச் சமூலந்தன்னைக்
காளப்பா பிடிங்கி புதுத் தோண்டி யொன்று
　　கடையாகக் கவிழ்த்துமே சிம்மாடிட்டு
தானப்பா தேங்காயை அதின்மேல் வைத்து
　　தடையில்லா தடித்துடைத்துக் காட்டலாமே.

போ-ரை. ஆதிவாரத்தில் கீழா நெல்லிக்குக்காப்புகட்டி தூபதீபங்கொடுத்து வேர் அறுமல் பிடிங்கிவந்து மேற்படி செடியை சிம்மாட்டைப்போல் சுற்றி, புதுத்தோண்டியொன்றுகொண்டுவந்து கவிழ்த்துவிட்டு அதின்மேல் மேற்படி சிம்மாட்டை வைத்து சிம்மாட்டின்மேல் ஒரு தேங்காயைவைத்து தடியாலடிக்க பானையுடையாமல் தேங்காயுடைந்துவிடும். (ஆனால் சாட்டியாலடித்தாற்போல லகுவாக அடித்து தடியை மேலுக்குத் தூக்கிக் கொள்ள வேணும்.) எ-று. 11

## புட்டிக்குள் புஷ்பச்செடி காட்டுஞ் ஜாலம்.

புட்டியிற் சுகர்லெட்டை போட்டுத் தண்ணீர்,
　　புகட்ட முக்காற்பங்கு கார்க்கின் கீழ்மட்டு
ஓட்டிய துத்திநாகம் நாட்டு பிகுந்
　　தொளிர் மேடைமேல்வைத்துச் செடியாகப் பூட்டு.

போ-ரை. முழு வெள்ளைபுட்டிக்குள் முக்காற் பங்குதண்ணீர் விட்டு அதிற்கொஞ்சம் சுகர்லெட்டுத்தூள் போட்டுக் குலுக்கி கார்க்கின் கீழ்திட்டமாய் துத்திநாகத்தைக் கம்பிக்குள் சொருகிவிட்டு பிகிந்து தொடுத்து மேஜையின்பேரில் அசையாது வைக்க மேற்படி புட்டிக்குள் செடிகள்போல் முளைத்திருக்கும், அதை அசைத்தாலும் திறந்தாலும் கெட்டுப்போம். எ-று. 12

## கிணற்றில் தோண்டியை போட்டால் தண்ணி மோள்ளாத ஜாலம்.

பகருவாய் பசுநிறப் பச்சோந்தி யொன்று
　　பண்பான கதிர்வாரங் கொண்டுவந்து
நகருமந்த நறுமணத்தேன் விட்டரைத்து
　　நலமாகப் புதுத்தோண்டிக் கீழே நீயும்

அகருபோல் பூசிவிட்டு உலரவைத்து
அலகணிந்த ருத்திரகாளி யெனஜெபித்து
பகருவாய் ஜலமொண்டு வாவென்றோத
பண்பாக யெவராலும் மொள்ள லாகாதே.

போ-ரை. ஆதிவாரத்தில் பச்சை ஓணான் ஒன்றைக்கொண்டு வந்து தேன்விட்டரைத்து ஒரு புதுத்தோண்டியின் அடிபுரத்திற் பூசி வுலரவைத்து ஓ ருத்திரகாளியென்று நூற்றெட்டு வுரு ஜெபித்து கயறுகட்டி கிணத்திற்போட எவ்விதமாகத் தூக்கிபோட்டாலும் தண்ணி மொள்ளாமலே யிருக்கும் எ-று. 13

## தோட்டால் பீனாற்றங் காட்டுஞ் ஜாலம்.

பாரப்பா பீனாற்றங் காட்டுஞ் ஞாலம்
பண்பாகப் பீனாரிப் பட்டை தன்னை
நாரப்பா நறுக்கி வஸ்திரகாயஞ் செய்
நண்பாகச் சலம்விட்டுச் சேர்த்தரைத்து
காரப்பா கடலைபய றுளுந்து போல
கண்மணியே வுருண்டைசெய்து வுலரப் போட்டு
வாரப்பா அடையாள மாகப் போட்டு
வண்மையுட னதையெடுத்துக் கையில் தேய்ப்பாயே.

போ-ரை. பீனாரிப்பட்டையைக் கொண்டுவந்து நறுக்கி வுலர்த்தி வஸ்திரகாயஞ் செய்து ஜலம் விட்டரைத்து கடலை பயரு உளுந்து பரிமாணமாக யெடுத்து (பீர்க்கன் விதை வடிவைப்போல்) கொஞ்சம் சப்பை வடிவமாகவே வுருண்டைகள் செய்து வுலரவைத்து ஜாலமாடுமிடத்தில் ஒருவருக்குந் தெரியாமல் அடையாளமாகப் போட்டு இதோ மண்ணைக் கிள்ளித்தடவுகிறேன் பீனாற்ற மாகுது பாரென்று மண்ணை கிள்ளியெடுக்கிறப்போல ஒரு வுருண்டையை யெடுத்துநசுக்கி யார்மேலாவது தடவினால் பீனாற்றமாக யிருக்கும். எ-று. 14

## தேள் குளவி உண்டாக்கும் ஜாலம்.

பாரப்பா தேள் குளவி ஜாலந்தன்னை
பதிவாகச் சொல்லுகிறேன் பரிந்து கேளு
கூரப்பா குளவியுட கூண்டு ஒன்று
குதிக்குமந்த செம்போத்தின் இரத்தமுந்தான்
சீரப்பா சித்து ஆமணக்கு எண்ணைச்
சீராக விட்டரைத்துக் கையிற் பூசி
பாரப்பா வேப்பன்யிலை யுருவிப்போட
பகருவாய்த் தேள் குளவி புளியிலைக்கே.

போ-ரை. காட்டிலிருக்குஞ் செடிகளில் கட்டியிருக்கும் குளவியின் கூண்டு ஒன்றுகொண்டுவந்து கள்ளிக்காக்கையின் இரத்தமும் கூடவிட்டு சிற்றுமணக்கின் எண்ணைகூட விட்டரைத்து வைத்துக்கொண்டு வேணுமென்கிறபோது கொஞ்சமெடுத்துக் கையிற்பூசிக்கொண்டு வேப்பிலையை யுருவிப்போட தேளாகவும் புளியிலையையுரு

விப்போட குளவியைப்போலும் ஆகும் (ஆனால் தேளுங் குளவியும் விசேஷமாகிவிட்டதேயென்றுசொல்லிக்கொண்டே துணியைக்கை யிலெடுத்துக்கொண்டு பெருக்குவதுபோல பெருக்கி சீக்கிரத்தில் மறைத்து விடவேண்டும். எ-று. 15

## கையால் தென்னமரத்தைக்குத்த தேங்காய்விழுஞ்ஜாலம்

உன்னவே இன்னமொரு ஜாலங் கேளு
இங்குரைப்பேன் விண்ணோரும் வெருண்டு நிற்க
என்னவே * யிரங்கழிஞ்சில் வித்தை வாங்கி
இங்கிதமாய்த் தயிலத்தை யிரக்கிக் கொண்டு
துன்னவே தயிலமதைக் கையிற் றேய்த்து
துலக்கமாம் தென்னைமரந் தன்னை நோக்கி
கன்னவே கையால் மரத்தடியிற் குத்த
கங்குமற்று காயதுவும் விழுகும் பாரே.

போ-ரை. உலகத்தோர்கள் பிரமித்து நிற்கும்படி இன்னொரு ஜாலஞ் சொல்லுகிறேன் கேள்:— * இரங்கழிஞ்சில்விதையைக்கொண்டுவந்து தயிலம் யிரக்கிக்கொண்டு அந்தத் தயிலத்தில் கொஞ்சம்யெடுத்து கையிற்றேய்த்துக்கொண்டு காய்கள் காய்த்திருக்கும் தென்னமரத்தை நோக்கிக் குத்த ஒருகுத்துக்கு ஒருகாய் விழும் இரங்கழிஞ்சியென்பது மரத்திலிருந்து காய்கள் பழுத்துக் கீழேவிழுந்தவுடன் அந்தப்பழத்திற் குள்ளிருக்கும் விரை பூமிக்குள்ளிருக்கும் வேரின்பேரில் போய் ஒட்டிக்கொள்ளும். எ-று. 16

## சபையில் தேங்காய் நடக்குஞ் ஜாலம்.

மந்திரமே யென்றுசொல்லி மயங்கவேண்டாம்
மகத்தான தந்திரங்கள் மெத்த வுண்டு
தந்திரமாய் தேங்காயைக் கொண்டு வந்து
தருசாக யிரண்டாக வுடைத்துக் கொண்டு
அந்திரமா யெலியொன்று பிடித்து வந்து
அருகிருக்கும் முடியொன்றைத் திருகிப்போட்டு
சுந்திரமா யெலியதனுள் விட்டு வொட்டி
சொகுசாகச் சபையில்விட நகரும் பாரே.

போ-ரை. ஒரு தேங்காயைக்கொண்டுவந்து உடைத்து வுள்ளிருக்குந் தேங்காயை திருகியெடுத்து விட்டு ஒரு எலியைப் பிடித்து அதற்குள்ளேவிட்டு வச்சிரத்தைத்தடவி ஒட்டவைத்து சபையில்விடத்தேங்காய் நகர்ந்து போகும் எ-று. 17

## நினைத்தவர்போல் விஷமேற்று ஜாலம்.

பாரப்பா மந்திரம்போல் தந்திரந்தா னென்று
பகருகின்ற பெண்டக்காய்ச் சுணையெடுத்து
காரப்பா காட்டுப்பூனை புடகங் காயும்
கறுத்ததொரு பூனைகாஞ்சி யிலையுங் காயும்

நேரப்பா பின்னுன்குஞ் சுணையெடுத்து
நினைவாகக் குப்பிதனில் விபூதி சேர்த்துக்
கோரப்பா பத்திரகாளி விஷமேறு யென்று
குணமாகத் தடவிவிட விஷமேறும்மே.

போ ரை இன்னுமொன்று சொல்லுகிறேன் கேள்:—பெண்டக்காயின்பேரிலிருக்குஞ் சுணையும், காட்டு பூனைப்புடகங்காயின்மேல்சுணையும், கருப்புப் பூனைக்காஞ்சொரிகாயும், அதின் இலையும் இந்தநான்கு தினுசுகளையெடுத்துக்கொஞ்சம் விபூதிசேர்த்து, காளியைதியானிப்பதுபோல் ஓ பத்திரகாளிவிஷம் ஏறுயேறென்றுசொல்லிமேற்படி விபூதியையள்ளி கீழ்ப்புறமிருந்து மேல்புறம்யேத்தினாற்போலதடவ விஷமேறும் இரங்கவேணுமாகில் சாம்பல் தடவிதேய்த்துக் கழுவி பிறகு நல்லெண்ணை த்தடவி இலுப்பைக்கட்டிபோட்டு தேய்த்துகழுவ இரங்கும். எ-று. 19

## விஷந் தீர்க்கும் வித்தை.

அரவந்தீண்டி லுச்சிக்கீறி கையா
லரக்கித்தேய்த தக்காளிச் சாற்றினைவாரி
விரையில் மீனுந் தலைக்கேறி விட்ட
விடமிரங்கிக் குணப்பட வதிகாரி.

போ-ரை. பாம்புக்கடித்தால் உடனே அவாள் உச்சியில் ஓட்டினல் அல்லது கூர்மையான கத்தியால் மெதுவாக மூன்றுகீற்றுகீறித்தக்காளிச் சாறுவிட்டுக் கையினல் அரக்கித்தேய்க்கவிஷங்கக்கி எழுந்திருப்பார்கள், உடனே ஜாதைக் கஞ்சிகாய்ச்சிக் கொடுக்கவும். இதுஇருளருக்கு உயிருக்குயிரான மூலிகை. இன்னும் செருப்படை, கீழ்காய்நெல்லிகுபபைமேனி இதுகளிலும் விஷங்கக்கும், இன்னும் சேராங்கொட்டை மரத்தை நல்லெண்ணெயி லூரவைத்துக் கொடுக்கவும்மீளும். எ-று. 20

## தீயில் குதிக்கும் ஜாலம்.

ஏமனுட அக்கினியை மதியாவித்தை
இயம்புகிறேன் எல்லோரும் ஆச்சரிக்க
நாமனவே சங்கனிட புதரு தன்னில்
நலமாகப் பூர்த்திருக்குங் காளான் றன்னை
சோமனவே கொண்டுவந்துப் புதுப்பாண்டத்திற்
சுருக்குடனே போட்டுநீ கதிர் முன்வைக்க
ஆமனவே தயிலமதா யுருகும் பாரு
அதை யெடுத்துப் பூசிதீயில் குதிக்கலாமே.

போ-ரை. சங்கன் செடியின் புதருகளில் பூர்த்திருக்கும் காளானைக் கொண்டுவந்து புதுப்பாண்டத்திற் போட்டு வெய்யலில்வைத்தால் தைலம்போலுருகிவிடும். அதை யெடுத்துத் திரேகமெங்கும் பூசிக்கொண்டு எவ்வளவு தீயிலாவது குதிக்கலாம். எ-று. 21

புலிப்பாணி ஜாலம்முற்றுபெற்றது.